

கலைஞருக்கு லெனின்
விடுக்கும் வேண்டுகோள்!

# கல்கி

KALKI 9.2.97 ரூ.3.00



சஷன் இல்லாத
முதல் தேர்தல்!

புதுக்கோட்டையிலிருந்து
நேரடி ரிப்போர்ட்

## ஹிந்திக்கு வாக்களிக்கும் தமிழ்ப் பெண்கள்!



இரண்டு குழந்தைகளுக் குத் தந்தையான போனி கபூருடன் இணைந் ததன் மூலம், அந்த நீண்ட பட்டிய லில் ஸ்ரீதேவியும் சேர்ந்து விட்டார்!

திரையுலகில் கொடிகட்டிப் பறக்கும் நடிகைகள் ஏற்கெனவே மணமானவர்களைத் திருமணம்(?) செய்து கொள்வ தேன்? சட்டப் பாதுகாப்பு இல்லாதபோதும் எந்த நம்பிக்கையில் இந்தத் திருமணங்கள் நடக்கின்றன? இதனால் மிக பாதிப்புக்குள்ளாகும் முதல் மனைவி,

# “அசட்டுத்தனமான முடிவுகளுக்கு அவரவரே பொறுப்பு!”



## தங்கம் பெறலாமா?

அடுத்தவாரம் வெளியாகப் போவது புதுக்கோட்டை தேர்தல் முடிவுகள் மட்டுமல்ல.

'உள்ளே வரலாமா?' தொடரை எழுதியவர் யார் என்கிற ரகசியமும் அதை யூகித்து எழுதிப் பரிசு பெறும் வாசகர் யார் என்கிற சந்தோஷ சமாசாரமும் கூட!

குழந்தைகள் பற்றி ஏன் இவர்கள் யோசிப்பதில்லை?

இப்படி ஏற்கெனவே திருமணமானவர்களுடன் இணைந்த பல நடிகைகளின் வாழ்வு சோகத்திலும் தற்கொலையிலும் முடிந்துள்ளதே? அவை பாடங்களாகத் தெரியவில்லையா...?

சட்ட மீறலுக்கு இவர்கள் துணிவது எப்படி?

நடிகர்களின் முதல் மனைவி, பாதுகாப்புக் கருதியும் எப்படியிருந்தாலும் கணவரின் இந்தத் திருமண பந்தத்துக்கு அப்பாற்பட்ட உறவைக் கட்டுப்படுத்த இயலாது என்கிற விரக்தியிலும் சட்ட பூர்வமாக எதிர்ப்பதில்லை.

முடிவில்லாத இந்தச் சோகம் குறித்து நடிகைகள் சிந்திப்பதுண்டா?... கருத்துக் கூற முன்வந்தவர் ராதிகா :

"அவரவர் வாழ்க்கையை அவரவர் தேர்ந்தெடுத்துக் கொள்கின்றனர். இதுபோன்ற முடிவை ஒரு குறிப்பிட்ட நடிகை எடுப்பதற்கு எந்தவித சூழ்நிலைகள் காரணம் என்பது நமக்கு முழுமையாகத் தெரியாதே!" என்று, தயக்கத்துடன் ஆரம்பித்தார். எனினும், "ஏற்கெனவே மணமான ஒருவரைத் திருமணம் செய்து கொள்வது நடிகையரிடையே கொஞ்சம் அதிகமாகத்தான் இருக்கிறது" என்று ஒப்புக் கொண்டார், ராதிகா.

"இதற்கு முக்கியக் காரணம், பெரும்பாலான நடிகைகளுக்கு இருக்கும் ஒருவித பாதுகாப்பில்லாத உணர்வுதான். புகழ், பணம், குறைந்த பட்சம் முகத்துக்கெதிராகவாவது மற்றவர்கள் காட்டும் மரியாதை – இதெல்லாம் இருந்தாலும் அவளும் ஒரு பெண்தானே? திருமண வாழ்வு தனக்கொரு பாதுகாப்பைத் தரும் என்று அவள் நினைத்தாலும், அவளை அண்டியிருக்கும் அவளது உறவினர்கள் இதற்கு சுலபத்தில் ஒப்புக் கொள்வதில்லை.

"திரைப்படத்துறையில் நானே பல பேராசைமிக்க தாய்மார்களைப் பார்த்திருக்கிறேன். பணம்காய்ச்சி மரமாகவே தங்கள் பெண்ணைக் கருதுவார்கள். அம்மாவையே சார்ந்து ஒரு வாழ்க்கையை அதுவரை வாழ்ந்துவிட்டதால், வெளிப்படையாக அதை மீறவும் முடியாத நிலையில் மனத்திலேயே நடிகைகள் மருகுகிறார்கள். மொத்தத்தில் பாதுகாப்பில்லாத மன உணர்வால்தான் இப்படி ஒரு முடிவுக்குத் தள்ளப்படுகிறார்கள்."

ஏற்கெனவே திருமணமான ஒருவர் மூலம் தமக்கு வாழ்நாள் முழுவதும் கௌரவமும், பாதுகாப்பும் கிடைக்கும் என்று எதை வைத்து ஒரு நடிகை முடிவு செய்கிறார்?

"அதுதான் எனக்கும் ஒரு புரியாத புதிராகவே இருக்கிறது! என்றாலும் வருங்காலத்தின் மீது ஓர் அசட்டுத்தனமான நம்பிக்கையை வைப்பது அவரவர் உரிமைதானே. தவிர மற்ற துறையில் இருப்பவர்களிடம் கூட இந்த 'இரண்டாவது மனைவியாகும் போக்கு' இருக்கத்தானே செய்கிறது?" என்ற ராதிகா, "இப்படி முடிவெடுக்கும் பெண்மணிகள் குழந்தைகள் அல்ல. எனவே தங்கள் செயலின் அத்தனை விளைவுகளுக்கும் அவர்களேதான் பொறுப்பேற்க வேண்டும்" என்றார்.

– ஜி.எஸ்.எஸ்.

## அன்புள்ள வாசகர்களே,

போட்டிக்கான கூப்பன்கள் அனுப்புவது குறித்து உங்களில் பலர் சந்தேகம் எழுப்பியிருக்கிறீர்கள்.

அஞ்சல் நிலையத்தில் விசாரித்து உறுதி செய்துள்ளோம்.

போட்டிக்கான கூப்பன்களைத் தபால் துறையின் ஒரு ரூபாய் அஞ்சல் உறையில் வைத்து அனுப்பலாம்.

நீங்கள் கேட்டவை பகுதிக்கு அனுப்பப்படும் கேள்விகளை பதினைந்து காசு அஞ்சல் அட்டையில் அனுப்பலாம்.

அனுப்ப வேண்டிய முகவரி:

கல்கி, 47, ஜவாஹர்லால் நேரு சாலை, ஈக்காடுதாங்கல், சென்னை - 600 097.

– ஆர்.

# ரம்ஜானைக் கொண்டாடும் ஹிந்துக்கள்!

திருவல்லிக்கேணி பெரிய பள்ளிவாசல்.

ரம்ஸான் நோன்பிருப்பவர்கள் நோன்பு முடிக்கும் மாலை வேளை.

ஒரு டெம்போ வருகிறது.

இனிப்பு, காரம், கஞ்சி என்று பலவகை உணவுப் பொருட்கள் வண்டியிலிருந்து இறக்கப்படுகின்றன.

பள்ளிவாசலை ஒட்டிய பெரிய மேடையில் நூற்றுக்கணக்கில் முஸ்லீம் சகோதரர்கள் அமர, கொண்டு வரப்பட்ட பலகாரங்கள் அன்போடு பரிமாறப்படுகின்றன.

இதிலென்ன பெரிய அதிசயம்? நோன்பு முடிக்கையில் உணவருந்துவது என்ன பெரிய செய்தி?

முஸ்லீம் சகோதரர்களுக்கு இப்படி தினமும் பலகாரங்கள் கொண்டு வந்து பரிமாறுகிறவர்கள் ஹிந்து சகோதரர்கள் என்பதுதான் செய்தி.

'ஸூஃபிதார்' அமைப்பைச் சேர்ந்த தொண்டர்கள் இப்பணியை மிக நேசத்தோடு செய்து வருகிறார்கள்.

வெள்ளை குர்தாவில் – தலையில் முஸ்லீம்கள் அணியும் தொப்பியுடன் – 'தாதா' படியேறி வந்ததும் நோன்பிருப்பவர்களில் பல பேர் அவரை அன்போடு நமஸ்கரிக்கிறார்கள்.

ஸூஃபிதார் அமைப்பின் நிர்வாக அறங்காவலர் – 'தாதா' என்று அன்போடு அழைக்கப்படும் ரத்தன்சந்த். பாகிஸ்தானிலிருந்து இங்கே வந்து செட்டில் ஆன ஹிந்து.

ஸூஃபிதார் என்றால் மதங்களுக்கிடையே வேற்றுமை இல்லை என்று பொருள்.

தாதாவும் அவரது சீடர்களும் தலையில் முஸ்லீம்கள் போலவே குல்லாய் அல்லது கைக்குட்டை கட்டியிருந்தார்கள்.

மற்றவர்களோடு இணைந்து கையேந்தி, தொழுதார்கள்.

“இன்று *(29.1.97)* சாயந்திரம் 6.14க்கு நோன்பு முடியும் நேரம். அதற்குள் எல்லாம் பரிமாறப்பட வேண்டும். சீக்கிரம்!" என்று தொண்டர்களை நிர்வகித்துக் கொண்டிருந்தார் ரத்தன்சந்த்.

சர்பத், சமுசா, தோசை, ஆரஞ்சுப்பழம் ஆகியவை அன்றைய மெனு.

வரிசை வரிசையாய் அமர்ந்திருந்த நூற்றுக் கணக்கான பேருக்கும் நிமிடங்களில் எல்லாம் பரிமாறப்பட்டுவிட்டன.

சரியாக 6.14க்கு ஒலிபெருக்கி நோன்பு முடிந்ததைத் தெரிவிக்க, அனைவரும் திருப்தியாகச் சாப்பிட்டுக் கலைகிறார்கள்.

மேடையில் இப்படி என்றால் கீழே மைதானத்திலும் ஏழை எளிய மக்கள் இந்த உணவுக்காகக் காத்திருக்கிறார்கள். ஒரு குழு அவர்களையும் கவனிக்கிறது.

ஒருநாளைக்கு ஆயிரம் பேருக்கு மேல் இப்படி உணவு. ரம்ஸான் மாதம் முழுவதும்.

கிறிஸ்துமஸின்போது கிறித்துவர்களோடு இணைந்து அதையும் இந்த அமைப்பினர் கொண்டாடுகிறார்கள்.

இலவசம்தானே என்று ஏனோதானோ என இவர்கள் சமைப்பதில்லை. படு சுத்தம். படு சுவை.

மெனக்கெட்டு கோயம்பேடு போய் பழங்களையும், காய்கறிகளையும் வாங்கி வருகிறார்கள்.

"விளம்பரத்துக்காகத்தான் இப்படி இங்கே வந்து இதுமாதிரி உணவு தருகிறீர்கள் என்று சிலர் இங்கே முணுமுணுத்தால் உங்கள் பதில் என்னவாக இருக்கும்?"

ரத்தன்சந்த் சிரித்துக் கொண்டே, "அதோ பாருங்கள். அந்த ஏழை மக்கள் அமர்ந்திருப்பதை. அவர்கள் சாப்பிடத்தான் இங்கே வந்திருக்கிறார்களே தவிர, எங்களுக்கு விளம்பரம் தரவா வந்திருக்கிறார்கள்?"

- ராணிமைந்தன்

படம்: யோகா



• தாதா




# முதல்வருக்கு ஏன் இந்த வேலை?

**அருகிலுள்ள விளம்பரங்களைப் பாருங்கள். ஒரு மாநில முதல்வர் இப்படி திரைப்படங்களைப் பாராட்டுவதும் அதை சம்பந்தப்பட்டவர்கள் விளம்பரமாக்கி ஆதாயம் தேடுவதும் எவ்வளவு தூரம் சரி...? கருத்து சொல்கிறார்கள் மூவர் :**

### உமா வெங்கடேசன் (வழக்கறிஞர்) :

ஒரு முதல்வர் இவ்வாறு தனிப்பட்ட திரைப்படங்களை விமர்சித்துக் கடிதங்கள் தருவது நன்நெறி மீறலாகவே எனக்குத் தோன்றுகிறது. நேர விரயமும்கூட! ஒரு காலத்தில் அவர் சினிமாத் துறையைச் சேர்ந்தவராக இருந்திருக்கலாம். ஆனால் அவர் இப்போது பொறுப்புள்ள முதல்வர். வியாபார ரீதியிலான முயற்சிகளுக்குத் தமது பெயரைப் பயன்படுத்த அனுமதிப்பதை எப்படி ஒப்புக் கொள்வது? இதுவே ஒரு பொதுச் சேவை விளம்பரமாக (உதாரணம் - போலியோ சொட்டு மருந்து) இருந்தால் நாம் ஆட்சேபிக்க முடியாது.

விருது வாங்கும் திரைப்படங்களைக் கூட பொது வாழ்வில் இருப்பவர்கள் இப்படிப் பாராட்டியதாகத் தெரியவில்லை. வேறு எந்த முதலமைச்சராவது







• டாக்டர் பார்த்தசாரதி • கே.வி. ராமநாதன்

இப்படிச் செய்தாரா...?

டாக்டர் பார்த்தசாரதி (மருத்துவர்) :

எந்த அரசியல்வாதியை விடவும் நம் நாட்டுக்கு அதிகமாக நன்மை செய்த ஒரு நபர் டி.என். சேஷன். அவரிடம் எனக்கு எக்கச்சக்க மரியாதை. ஆனால் அவரே ஒருமுறை ஹிந்தி திரைப்படம் ஒன்றை வெகுவாகப் பாராட்ட, அது விளம்பரமாக்கப்பட்டது. அதில் எனக்கு ஏற்பட்ட வருத்தம் கொஞ்ச நஞ்சமல்ல.

இப்போது தமிழக முதல்வரின் பாராட்டுக் கடிதங்கள் பத்திரிகையில் வரும் சினிமா விளம்பரங்களில் மட்டும் இன்றி, சுவரொட்டிகளாகவும் பயன்படுத்தப்படுகின்றன. இது நல்லதற்கே அல்ல.

மருத்துவர், வழக்கறிஞர், சார்டர்ட் அகவுன்டன்ட் போன்றோர் தங்களை விளம்பரப்படுத்திக் கொள்ளக் கூடாது; விளம்பரங்களுக்குத் துணைபோகக் கூடாது என்று நன்நெறிகள் இருக்கின்றன. அவற்றை மீறும் துணிச்சல்தான் அதிகமாகி வருகிறது. எனவே வழிகாட்டல் நெறிகளைச் சட்டமாக்கினால் கூடத் தப்பில்லை என்று நான் நினைக்கிறேன். பொது வாழ்வில் இருப்பவர்களுக்கும் அவை பொருந்தும்படி சட்டம் அமைக்கலாமே!

கே.வி. ராமநாதன் –
(ஓய்வுபெற்ற ஐ.ஏ.எஸ். அதிகாரி) :

சிறந்த எழுத்தாளர், திரைப்பட உலகில் பல துறைகளில் புகழ்பெற்றவர் என்ற முறையில் கருணாநிதிக்குப் படங்களை விமர்சிக்கத் தனித் தகுதியும் உரிமையும் உண்டு. எனவே திரைப்படங்களைப் பார்ப்பதையும் அவை குறித்து கருத்துச் சொல்வதையும் நாம் ஆட்சேபிக்க முடியாது. அதை நன்நெறி மீறல் என்றும் சொல்ல முடியாது. எனினும் முதல்வரின் கருத்துக்களை, விமர்சனத்தை விளம்பரங்களுக்குப் பயன்படுத்துவதென்பது ரசனைக்குறைவான வியாபார யுக்தி.

தொகுப்பு:- **மலர்**



"அரசியல் ஒரு சாக்கடைதான்னு ஒத்துக்கறேன். ஆனா, அதுக்காக புதுசா ஆரம்பிச்சிருக்கற நம்ம கட்சியோட தலைமை அலுவலகத்தை கூவம் பக்கம்தான் கட்டணுமா?!"



''சோடாவுக்கு பதிலா சாராயத்தைக் குடிச்சுட்டு தலைவர் பேசறார் போல இருக்கு!''

''எப்படி சொல்றே?''

'' 'கல்' தோன்றி 'ஜின்' தோன்றா காலத்து முன் தோன்றிய மூத்த 'குடி'ன்னு பேசறாரே!''

— பாஸு



"நடிகரை தொலைக்காட்சி அறிவிப்பாளரா போட்டது தப்பாப் போச்சு!"

"ஏன்?"

"நிகழ்ச்சியின் இடையே ஏற்பட்ட தடங்கலுக்கு வருந்துகிறோம்னு சொல்லிட்டு விசும்பி விசும்பி அழ ஆரம்பிச்சுட்டார்!"

— வெ. ராஜாராமன்

கல்கி-பாலு ஜுவல்லர்ஸ் இணைந்து வழங்கும் வாரம் ஒரு சவரன்

## கோபத்தை அடக்கினேன்: முடிவு - 2

# ''நீயெல்லாம் எருமை மாடு மேய்க்கத்தான் லாயக்கு!''

● நான் எம்.ஏ. படித்துக் கொண்டிருந்தபோது, கல்லூரியில் மாணவர் விழா ஒன்று ஏற்பாடு ஆனது. நான்தான் விழா அமைப்பாளர், பொறுப்பாளர். கல்லூரி முதல்வரையே விழாவுக்குச் சிறப்புரையாற்றக் கூப்பிட்டிருந்தேன். நாலரை மணி விழாவுக்கு, மூன்றரைக்கே வந்து விட்டார் முதல்வர். ஏற்பாடுகள் முடிந்திருக்காத நிலையில், வெறுத்துப்போன முதல்வர், என்னைத் திட்டித் தீர்த்தார். விழா மூன்றரைக்கு என்பதாக அவர் ஞாபகம். முணுக்கென்று எனக்குப் பொத்துக் கொண்டு வந்த கோபத்தை சிரமப்பட்டு அடக்கினேன். முதல்வரைக் கோபிக்க முடியுமா? ஆனால் அன்று ஒரு பாடம் கற்றேன். வி.ஐ.பி.க்களை அழைக்கும்போது, வாய் வார்த்தையாக அல்லாமல், நேரத்தை எழுதிக் கொடுத்துவிட வேண்டும்!

பழனிக்கவுண்டன்புதூர்,

அ. குமார்.

● கோ-எஜுகேஷன் பள்ளியில் படித்தவன் நான். படிக்கிற காலத்தில் ஆங்கிலம் அத்தனை வராது எனக்கு. ஒரு தேர்வில் நான் நூற்றுக்கு வெறும் இரண்டு மதிப்பெண்கள் மட்டுமே பெற்றிருக்க, என் ஆசிரியர், ''டீஸன்ட்டா டிரெஸ் பண்ணா மட்டும்




போதுமா? நீயெல்லாம் எருமை மாடு மேய்க்கத்தான் லாயக்கு!'' என்று அத்தனை பெண்கள் எதிரே கண்டபடி திட்டித் தீர்த்தார். தனியாகக் கூப்பிட்டுக் கண்டித்திருக்கலாம். அவமானமும் கோபமும் பொங்க, ஆசிரியரை மனதுக்குள் திட்டித் தீர்த்தேன். வெளியே காண்பிக்க முடியுமா? கஷ்டப்பட்டு அடக்கிக் கொண்டு, உள்ளுக்குள் பொருமினேன். ஆனால் அந்த நிகழ்ச்சியையே ஒரு சவாலாக வைத்து, பிறகு நன்கு படிக்கத் தொடங்கி, இப்போது நான் ஒரு கல்லூரியில் ஆங்கில விரிவுரையாளர்!

வேலூர்.

மா. சிவக்குமார்.

● ஒரு பெரிய கம்பெனியில் 28 வருடங்கள் பணியாற்றியவன் நான். கல்வித் தகுதி குறைவென்றாலும் அனுபவம் காரணமாக, புதுப்புது வியாபார உத்திகளை அறிமுகப்படுத்தி, புதிய இளைஞர்களை - படித்தவர்களை - வேலையில் இறுத்தி, அவர்களுக்குப் பாடம் சொல்லி, பயிற்சி கொடுத்து, கம்பெனியின் வளர்ச்சிக்கு நிறைய செய்தேன். ஆனால் நான் அறிமுகப்படுத்திய இளைஞர்கள் படித்தவர்கள் என்ற காரணத்தால், என்னை விட உயர் பதவி, சலுகைகள் பெற்று மிக சந்தோஷமாக இருந்தார்கள். அவர்களைப் பயில்வித்த நான்? சேரும்போதிருந்த அதே நிலை! காரணம் படிப்பு போதவில்லை! இன்னும் இரண்டு மூன்று வருடங்களில் ஓய்வு கொடுத்து விடுவார்கள். பிறகு எனக்கு எங்கே வேலை கிடைக்கும்? படிப்பு இல்லாமல் வெறும் திறமை மட்டும் போதுமென்று யார் நினைப்பார்கள்? படிக்க இயலாத என் சூழ்நிலையின் மீதா, சமூகத்தின் மீதா, விதியின் மீதா - இனம்புரியாமல் பொங்கிய கோபத்தை விழுங்கிக் கொள்வதைத் தவிர எனக்கு வேறு வழியில்லை!

சென்னை - 28,

வி. நாராயணஸ்வாமி.

● எனக்குத் திருமணமான புதிது. ஒருநாள் அதிகாலை குளித்துக் கொண்டிருந்தேன். மஞ்சள் பொடி எடுத்துச் செல்ல மறந்து, உள்ளிருந்து குரல் கொடுத்தேன். என் கணவரின் தங்கை, தவறுதலாக மிளகாய்த்தூளைக் கொண்டு வந்து தர, நானும் கவனிக்காமல் முகத்தில் அவசரமாகப் பூசிக் கொண்டுவிட, பயங்கர எரிச்சல்! கதறி, அலறி விட்டேன்! வந்த கோபத்தில் அவளை துவம்சம் பண்ணியிருப்பேன். ஆனால் கஷ்டப்பட்டு அடக்கிக் கொண்டதன் காரணம் – 'என்னைத்தான் மருமகளாக ஏற்பேன்' என்று விடாப்பிடியாக இருந்து, செயல்படுத்திய என் மாமனாரின் முகதாட்சண்யத்துக்காகத்தான்!

வேலூர் – 1.
ரூபி ஜோசப்.




● எனக்குக் கொஞ்சம் முன்கோபம் அதிகம். புகுந்த வீடு போகும்போது என் வீட்டார் சொன்ன ஒரே அறிவுரை : "கோபத்தை விட்டு விடு." ஆனால் நான் கேட்கவில்லை. கணவர் வீட்டிலும் கோபக்காரி என்றே பட்டம் வந்தது. என் மூன்று வயதுக் குழந்தை குறும்பும் சேட்டையும் நிறைய செய்வாள். பிடிவாதம் அதிகம். ஒருநாள் அவள் ஏதோ அடம்பிடித்து, கையில் கிடைத்த பொருளைத் தூக்கிப் போட, "அப்படியே அம்மாவை உரிச்சி வெச்சிருக்கு. பின்னால, கோபத்துல அவளையே மீறிடுவா" என்று வீட்டார் சாதாரணமாகச் சொல்ல, எனக்குள் 'சுருக்'. இப்போதே இப்படியொரு பட்டம் வாங்கினால் பின்பு அதுவே நிலைத்துவிடும். குழந்தையின் குணத்தை மாற்ற வேண்டும்; அதற்கு முதலில் நான் மாற வேண்டும் என்று முடிவு செய்தேன். கோபமே கொள்ளாமல் எதற்கும் பொறுமை காப்பது என்று இந்தப் புத்தாண்டிலிருந்து சபதம் கொண்டு விட்டேன்!

பொள்ளாச்சி – 1, அங்கயற்கண்ணி.

● நான் ஒரு ஆசிரியை. வகுப்பு மாணவர்களிடம் இனிமையாகப் பேசி, பழகி, எப்படிப் பிறர் நன்மதிப்பைப் பெறுவது என்பது பற்றி ஒருநாள் தீவிரமாக அறிவுரை கொடுத்துக் கொண்டிருந்தேன். இரண்டு மாணவர்கள் மட்டும் என்னை கவனிக்காமல் ஏதோ கிறுக்கிக் கொண்டிருந்ததைப் பார்த்தபோது சுறுசுறுவென கோபம் வந்து விட்டது. ஆனால் கஷ்டப்பட்டு அடக்கிக் கொண்டு, முகமாறுதல் காட்டாமல், அந்த இரண்டு பேரைக் குறிப்பிட்டு, "இவர்களைப் போல நல்ல விஷயங்களைக் கேட்பதோடு மட்டுமல்லாமல் குறிப்பெடுத்துக் கொள்ளும் நற்பண்பு அனைவருக்கும் வரவேண்டும்" என்று கூறினேன். அந்த மாணவர்கள் முகத்தில் நன்றிப் பிரவாகம். மனம் புண்படாமல் நல்வழிப்படுத்தும் கலையை அன்று நான் கற்றேன்.

சென்னை – 82, விஜயலட்சுமி திவாகர்.

**இந்த வாரம் ஒரு சவரன் பெறும் வாசகர் :
விஜயலட்சுமி திவாகர்,
25, 4-வது மெயின் ரோடு,
ஜவகர் நகர்,
சென்னை – 82.**

● எங்கள் ஏரியா தபால்காரர் ஒரு வாரம் விடுப்பு. தனக்கு பதிலாக, எழுதப் படிக்கத் தெரியாத ஒருவரை நியமித்து விட்டுப் போய் விட்டார். அந்தப் புதிய ஆள் ஒருநாள் நாற்பது கடிதங்களை என் வீட்டில் போட்டு விட்டுப் போனார். ஒன்று கூட எங்களுடையதில்லை! அடுத்த நாள்



● சின்ன வயதில் என்னை அடிக்கடி சிகரெட் வாங்கி வரச் சொல்லி அனுப்பியவர் என் தந்தை. திருமணமான பின்பும் ஒருநாள் என் மனைவி எதிரே அவர் என்னை அதற்கு ஏவ, செமை கோபம்! இருப்பினும் கட்டுப்படுத்திக் கொண்டு கிளம்பினேன். ஆனால் சிகரெட் வாங்காமல், ஒரு மணி நேரம் கழித்து வீடு திரும்பினேன். என் அப்பா என்ன நினைத்தாரோ, கண்ணில் நீர் மல்க, "நீ பெரிய பொறுமைசாலி" என்று சொல்லி விட்டுப் போய் விட்டார். அதற்குப் பின் என்னிடம் வேலை ஏவு வதையும் விட்டு விட்டார்.

ஆர். ரவிச்சந்திரன்,
பரமக்குடி.

● ஐந்து சகோதரிகள். ஒரு சகோதரன் எனக்கு. ஐந்து தங்கைகளுக்கும் திருமணம் முடித்து, தம்பியைப் படிக்க வைத்து, வேலை வாங்கிக் கொடுத்து, அத்தனை பேரும் நல்ல நிலையில் இருக்கிறார்கள். ஆனால் என் தந்தை இறந்த போது, குடும்ப விருப்பத்துக்கு மாறாக, வேற்று சாதிப் பெண்ணைத் திருமணம் செய்தவன் என்கிற ஒரே காரணத்துக்காக என்னை ஈமக் கிரியைகள் செய்ய விடாமல், என் தம்பியை செய்யச் சொன்னார் என் தாய். துக்கமும் கோபமும் பீறிட்டுப் பொங்க, கஷ்டப்பட்டு அடக்கிக் கொண்டேன். என் தந்தையின் ஆத்மா நற்கதி அடைய வேண்டும் என்ற ஒரே காரணத்தால் நான் அந்தப் பதிமூன்று நாட்களிலும் மிகப் பொறுமையுடன் இதை சகித்துக் கொண்டிருந்தேன்.

மும்பை – 89. எஸ். சேஷாத்ரி,



● என் பெண் பிறந்து, வளர்ந்து, படித்த தெல்லாம் டில்லியில். அவளுக்குப் பார்த்த மாப்பிள்ளை, பெங்களூரில் இருப்பவர். திருமணம் முடிந்து, மூட்டை கட்டிக் கொண்டு கிளம்பும் போது, மாப்பிள்ளையின் தாய்மாமா என்னிடம் வந்து, "உங்கள் பெண் வந்து என் அக்கா குடும்பத்தைப் பிரித்தால், நான் சும்மா இருக்க மாட்டேன்!" என்றார் திடீரென்று. இன்னும் புகுந்த வீட்டுக்கே போகவில்லை. இது என்ன அநாகரிகப் பேச்சு? எனக்குப் பொங்கிய கோபத்தை சிரமத்துடன் விழுங்கி, மௌனமாக இருந்து விட்டேன். பதினைந்து வருடங்கள் ஆகிவிட்டன. இன்னும் என் மகள் தன் மாமியாருடன் ஒற்றுமையாக ஒரே வீட்டில்தான் இருக்கிறாள்.

கங்கா நாராயணன்,
பெங்களூர் – 79.

*... முன்பக்கத் தொடர்ச்சி*

அவரிடம் சொன்னபோது ஒரு கத்தைக் கடிதங்களைக் கொடுத்து, "உங்களுடையது ஏதாவது இருந்தால் எடுத்துக் கொண்டு மீதியைத் திருப்பிக் கொடுங்கள்" என்றார். வந்ததே கோபம்! ஆனால் என்ன செய்வது? என் முக்கியக் கடிதங்கள் ஒழுங்காக எனக்குக் கிடைக்க வேண்டுமே? அவை வேறு யாரிடம் போய் இதுமாதிரி மாட்டிக் கொண்டதோ? கோபத்தை அடக்கிக் கொண்டது மட்டுமின்றி, அந்த ஒரு வாரமும் தாற்காலிக போஸ்ட்மேனாகவும் நானே எல்லா வீடுகளுக்கும் போய் அவரவர் கடிதங்களைக் கொடுத்துவிட்டு வந்தேன்.

மதுரை – 20, ஜோதி.

● குடும்பச் சூழல் காரணமாக பி.யூ.சி.க்கு மேல் என்னால் படிக்க முடியவில்லை. ஒரு நிறுவனத்தில் கடைநிலை ஊழியனாக வேலைக்குச் சேர்ந்து விட்டேன். அப்படியே பகுதி நேரமாக பி.காம்., (அஞ்சல் வழி) படித்து வந்தேன். இரண்டு வருடங்கள் முடித்து, கடைசி வருடம் வரை வந்தபின், மாலை வகுப்புக்குச் செல்ல மேலாளரிடம் அனுமதி கேட்டேன். 'இவன் கடைநிலை ஊழியன்தானே' என்ற அலட்சியம் அவருக்கு. "நீ எம்.காம். முடிச்சுட்டுத்தானே பி.காம். படிக்கறே?" என்றார் கிண்டலாக. கோபமும் ஆத்திரமும் பொங்க மனத்துக்குள் அவனை சட்டையைப் பிடித்து பளார் பளார் என்று அறைந்தேன்! நேரில் முடியுமா? அவன் முரண்டு பிடித்தால் என் படிப்பு தடைபடுமே? பொறுமை காத்து, அனுமதி வாங்க வேண்டி இருந்தது!

சென்னை - 58. மூர்த்தி

# உங்கள் வளமான எதிர்காலத்திற்கு
# எங்கள் விசேஷ சேமிப்புத் திட்டம்

## சில்வர் டெபாசிட் திட்டம்



இன்றே எங்களிடம் ஒரு டெபாஸிட்டைத் துவக்கி,
வளமான மகிழ்ச்சியான வருங்காலத்தை எதிர்நோக்குவீர்

**EXPRESS**
**FINANCIAL EXCHANGE LIMITED**

பாங்க் ஆப் அமெரிக்காவின் சார்பு நிறுவனம்

- வாகனங்களுக்கான கடன்கள்
- பங்குகள் மீதான கடன்கள்

அங்கீகரிக்கப்பட்ட டீலர் அமெரிக்கன் எக்ஸ்பிரஸ் டிராவலர்ஸ் செக்குகள்

பதிவு அலுவலகம்: நெ. 9, அட்லேப் டவர், தெற்கு போக் சாலை, சென்னை-600 017.
போன்: 4340325, 4340329, 4341403, ஃபாக்ஸ்: 4341518.

• சென்னை • ஹைதராபாத் • விஜயவாடா • விசாகப்பட்டினம் • பெங்களூர் • திருச்சி
• கும்பகோணம் • கோயம்புத்தூர் • பாண்டிச்சேரி

1996 மார்ச் 4-ந் தேதி எகனாமிக் டைம்ஸில் வெளியான எமது சட்ட பூர்வ விளம்பரத்தைத் தொடர்ந்து இந்த விளம்பரம் வெளியாகிறது.

Helios & Matheson



• மாரி அய்யா (தி.மு.க.)

• பன்னீர்செல்வம் (போ. அ.தி.மு.க.)

• வீடு வீடாகச் சென்று வோட்டுக் கேட்கும் ம.தி.மு.க.

**புதுக்கோட்டை இடைத்தேர்தல் சேஷன் இல்லாமல் நடக்கிற முதல் தேர்தல். கட்-அவுட்டுகள் போன்ற படாடோபங்கள் இல்லையென்றாலும் தோரணங்கள், போஸ்டர்கள் என்று அமர்க்களப்படத்தான் செய்கின்றன. இவற்றை தேர்தல் கமிஷன் அலுவலர்கள் வீடியோ எடுத்துக் கொண்டிருக்கிறார்கள். இந்த இடைத்தேர்தலை ஒவ்வொரு கட்சியும் முக்கியமானதாகவே கருதுகின்றது. எனினும் வெற்றி யாருக்கு? களத்தில் நிற்கும் வேட்பாளர் மாதிரியே நாமும் தொகுதி முழுக்க ஒரு ரவுண்ட் போனோம். வேட்பாளர்களையும் மக்களையும் மாத்திரமல்ல; கட்சிகளின் முக்கிய தலைவர்களையும் சந்தித்துப் பேசினோம்....**

"எங்க வோட்டு எப்பவுமே உதயசூரியனுக்குத்தான்!" என்றார் விஜயராணி என்ற பெண்மணி.

"எனக்கு இன்னும் வோட்டுப் போடற வயசு வரலை. எங்க அப்பா-அம்மாவெல்லாம் உதயசூரியனுக்குத்தான் போடுவாங்க!" என்றார். தேவிகா என்னும் ஓர் இளம்பெண்.

"நீங்க யாருக்கம்மா போடப் போறீங்க?" - அமிர்தம் என்கிற பெண்மணியிடம் கேட்டோம்.

"ஜெயலலிதாவுக்குத்தான்!"

"அவங்கதான் எக்கச்சக்கமா ஊழல் பண்ணி சொத்து சேத்தாங்க, வீடு கட்டுனாங்





• சாமிநாதன் (இ. காங்)



• மணி (ம.தி.மு.க.)



• குமாரவேல் (மார்க்சிஸ்ட்)



• செல்லதுரை (அ.தி.மு.க.)

# திணறுகிறதா தி.மு.க.?

கன்னு டெலிவிஷன்ல கூட காட்டினாங்களேம்மா!"

"காட்டுனாங்க. பார்த்தேன். அதனால என்ன? யாருதான் சொத்து சேர்க்கலை? எல்லோரும் அப்படித்தான் பண்றாங்க!" என்றார் அந்தப் பெண்மணி.

நாங்கள் இந்தப் பெண்களைச் சந்தித்தது புதுக்கோட்டை தொகுதியிலுள்ள ஆதனக்கோட்டை என்கிற ஊரைத் தாண்டியிருக்கிற கரும்பு வயல்காட்டில்.

இந்தப் பெண்கள் குறிப்பிட்டது தி.மு.க. - அ.தி.மு.க.வை மட்டும்தான் என்றாலும் இவர்களோடு போட்டியிடும் ம.தி.மு.க., போட்டி அ.தி.மு.க., மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் மற்றும் இ.காங்கிரஸ் வேட்பாளர்களையெல்லாம் அவ்வளவு சுலபத்தில் ஓரம்கட்டி விட முடியாது. எல்லாக் கட்சியினரும் அனல் பறக்கும் பிரசாரங்களில் ஈடுபட்டுக் கொண்டிருக்கிறார்கள் என்பதுதான் உண்மை.

இந்த நிலையில் புதுக்கோட்டை இடைத் தேர்தல் வெற்றிக்கனி யாருக்கு?

"சந்தேகமென்ன? எங்களின் மாங்கனிச் சின்னத்துக்குத்தான் வெற்றிக்கனி!" என்று நம்மிடம் சொன்னார் எஸ்.டி.எஸ்.

தங்களின் போட்டி அ.தி.மு.க.வின் வெற்றிக்காக கண்ணப்பன், முத்துசாமி, அரங்கநாயகம், சைதை துரைசாமி என்று பலரும் எஸ்.டி.எஸ். தலைமையில் புதுக்கோட்டையிலேயே தங்கித் தேர்தல் வேலைகளைக் கவனித்துக் கொண்டிருக்கிறார்கள்.

'போட்டி அ.தி.மு.க.' என்று நாம் குறிப்பிட்டாலும் எஸ்.டி.எஸ். அதை பலமாக மறுக்கிறார்.

"நாங்கள்தான் உண்மையான அ.தி.மு.க. ஜெயலலிதாவை எந்தத் தொண்டனும் இப்போது ஏற்றுக் கொள்ளவில்லை!" என்ற எஸ்.டி.எஸ்.ஸை நாம் இடைமறித்தோம்.

"ஊழல் குற்றச்சாட்டுகளுக்கு ஆளானவர்கள் உங்கள் கட்சியிலும்தானே இருக்கிறார்கள்?"

"குற்றச்சாட்டுகள் யார் மீது வேண்டுமானாலும் சுமத்தப்படலாம். அது நிரூபணமாக வேண்டாமா? நாங்கள் சொல்வது சீக்கிரமாகக் குற்றப் பத்திரிகையைத் தாக்கல் செய்யுங்கள்



• விஜயராணி, அமிர்தம், தேவிகா



• எம்.ஜி.ஆர். மேக்-அப்புடன் வோட்டு வேட்டை : போட்டி அ.தி.மு.க.



• ஜோராக நடக்கும் சாலை போடும் பணி

என்பதுதான். வழக்கின் முடிவில் உண்மை வெளிப்பட்டு விடுமே!"

"உங்கள் அணியின் மேல் தி.மு.க.வுக்கு ஓர் அனுதாபம் இருப்பதாகத் தெரிகிறதே?"

"எதிரியின் எதிரி நண்பன் என்கிற அடிப்படையில் நீங்கள் சொல்கிறீர்கள். அப்படிப்பட்ட நட்பு ஒருபோதும் உண்மையான நட்பாகி விட முடியாது. அதனால்தான் விலைவாசி உயர்வை எடுத்துச் சொல்லி வோட்டுக் கேட்கிறோம். தி.மு.க.வை எதிர்த்துத் தானே நாங்கள் இப்படிச் செயல்படுகிறோம்!"

"உங்கள் அணிக்கும் ஜெயலலிதா கட்சிக்கும் இடையிலான பலப்பரீட்சையாகத் தான் நீங்கள் இந்த இடைத்தேர்தலைக் கருதுகிறீர்கள். அவர்களை விடக் கொஞ்சம் வோட்டுக்களையாவது அதிகம் பெற்று, 'நாங்கள்தான் உண்மையான அ.தி.மு.க.' என்று மக்களிடம் சொல்ல வேண்டும் என்கிற அடிப்படையில் தான் செயல்படுகிறீர்கள் என்று சொல்லப்படுகிறதே?"

"கிடையவே கிடையாது. அ.தி.மு.க.வுக்கு மூன்று பலம். ஒன்று எம்.ஜி.ஆரின் செல்வாக்கு. இரண்டாவது இரட்டை இலை. மூன்றாவது தொண்டர்கள். இரட்டை இலையைத்தான் ஜெயலலிதா சுட்டுப் பொசுக்கிச் சுடுகாட்டுக்கு அனுப்பி விட்டாரே! தொண்டர்களும் இப்போது எங்கள் பக்கம்தான் என்கிற நிலையில் எம்.ஜி.ஆரின் செல்வாக்கும் எங்கள் பக்கமே வந்து விட்டது. அதனால் நாங்கள்தான் உண்மையான அ.தி.மு.க. என்பதை நிரூபிக்க வேண்டிய அவசியமே இல்லை!" என்றார் எஸ்.டி.எஸ்.

இவர் இப்படிச் சொன்னாலும் போட்டி அ.தி.மு.க சார்பாகப் போட்டியிடும் வேட்பாளர் வி.ஓ.எஸ். பன்னீர்செல்வம் என்ன சொல்லுகிறார்?

புதுக்கோட்டையிலிருந்து சுமார் ஐம்பது கி.மீ. தொலைவிலுள்ள நாய்க்கர்பட்டியில் வோட்டு சேகரித்துக் கொண்டிருந்த அவரைச் சந்தித்துக் கேட்டோம்.

"கலைஞர் ஆட்சி நேர்மையாகத்தான் நடக்கிறது என்றாலும் திறமையாக நடக்க வேண்டாமா? அதற்குச் சட்டசபையில் குரல் கொடுக்க எங்களுக்கு ஒரு வாய்ப்புத் தாருங்கள் என்றுதான் மக்களிடம் சொல்லி வோட்டுக் கேட்கிறேன்!"

"உங்கள் அணியினர் ஏராளமாகச் செலவு செய்வதாகச் சொல்கிறார்களே?"

"எங்களது மாங்கனிச் சின்னம் புதிய ஒன்று. அதை மக்களிடம் எடுத்துச் சொல்வதற்காகச் சில நண்பர்கள் தங்களது செலவில் நோட்டீஸ், தோரணங்கள் என்று போட்டு விளம்பரப்படுத்துகிறார்கள். அவ்வளவுதான். மற்றபடி சேஷன் இல்லாத தேர்தல் என்பதால் நாங்கள் வரம்பு மீறவில்லை. மற்றவர்கள்தான் அப்படிச் செய்கிறார்கள்!" என்றார் பன்னீர் செல்வம்.

இவர் இப்படிச் சொன்னாலும் நாம் தொகுதியைச் சுற்றிப் பார்க்கிற நேரத்தில் ஏர்கண்டிஷன் செய்யப்பட்ட காண்டசா காரிலெல்லாம் கிராமம் கிராமமாகச் சென்று கண்ணப்பன் படம் அச்சிடப்பட்ட காலண்டர்கள்

(மட்டும்தானா?) விநியோகிக்கப்பட்டதை நாமே நேரடியாகப் பார்த்தோம்!

போட்டி அ.தி.மு.க. இப்படியென்றால் ஜெ. தலைமை



யிலான அ.தி.மு.க. எப்படி?

"நான் இன்றைக்குத்தான் (ஜனவரி 30) புதுக்கோட்டைக்கே வந்தேன். இனிமேல்தான் நானே தொகுதி நிலவரங்களைக் கேட்டுத் தெரிந்து கொள்ளப் போகிறேன்!" என்றார் நாம் சந்தித்த ஆதிராஜாராம்.

சேடப்பட்டி முத்தையாவைச் சந்தித்துக் கேட்டபோது, "போட்டி அ.தி.மு.க.வினரை நாங்கள் ஒரு கட்சியாகவே பார்க்கவில்லை. தங்களைக் காப்பாற்றிக் கொள்வதற்காகக் கூடியிருக்கிற ஒரு கும்பல்தான் அது!" என்றார்.

"எப்படியானாலும் அது உங்கள் வோட்டைப் பிரிக்குமே?"

"இல்லை. அவர்களுக்கு அவர்களிடமிருந்து நிறுத்துவதற்கு ஒரு வேட்பாளர் கூடக் கிடைக்கவில்லை. அதனால்தான் அவர்கள் ஆர்.எம்.வீயிடமிருந்த பன்னீர்செல்வத்தை விலைக்கு வாங்கி வேட்பாளராக்கியிருக்கிறார்கள். அதனால் தி.மு.க.வுக்கு ஆதரவாக விழப்போகிற ஆர்.எம்.வீயின் ஆதரவு வோட்டுக்களைத்தான் பிரிப்பார்களே தவிர, எங்கள் வோட்டுக்களை அல்ல!"

"நீங்கள் எதைச் சொல்லி வோட்டுக் கேட்கிறீர்கள்?"

"விலைவாசி உயர்வைக் கட்டுப்படுத்துவதற்கான எந்தவிதமான நடவடிக்கைகளையும் தி.மு.க. எடுக்கவில்லை. எங்கள் மீது அவதூறுகளை அள்ளி வீசுவதில்தான் குறியாக இருக்கிறார்கள். இதை மக்களும் புரிந்து கொண்டிருக்கிறார்கள். இதைத்தான் மக்கள் மனத்தில் ஆழப் பதிய வைக்கிறோம்!"

"உங்களைப் போன்ற தலைவர்களை மாத்திரமல்ல; ஜெயலலிதாவையே தண்டிக்கிற வகையில்தான் சென்ற பொதுத் தேர்தலில் உங்களையெல்லாம் மக்கள் தோற்கடித்தார்கள். இது நடந்து நீண்ட காலம் ஆகிவிடவில்லை. அதற்குள் உங்களுக்கு எப்படி வோட்டுப் போடுவார்கள்?"

"விலைவாசியைக் கூடக் கட்டுப்படுத்த முடியாமல் போனதால் இந்த அரசின் மீது மக்கள் வெறுப்படைந்துவிட்டார்கள். சென்ற தேர்தலில் எங்களைத் தோற்கடித்தது தவறான முடிவு என்று இப்போது மக்கள் நினைக்கிறார்கள். எனவே வெற்றி எங்களுக்குத்தான்!"

"நீங்களும் சரி, போட்டி அ.தி.மு.க.வினரும் சரி, பணத்தை வாரி இறைத்துச் செலவு செய்வதாகச் சொல்கிறார்களே?"

"அவர்கள் செலவு செய்யலாம். அவர்களைப் பார்த்தாலே எங்கள் தொண்டர்கள் பயந்து ஓடுகிறார்கள். காரணம், பணத்தைக் காட்டி மயக்குவதுதான். நாங்கள் அப்படியெல்லாம் செலவு செய்வதற்குப் பணமே இல்லை. அதனால் அளவோடுதான் செலவு செய்து கொண்டிருக்கிறோம்!" என்றார் சேடப்பட்டி.



* வை.கோ.

கடந்த பொதுத்தேர்தலில் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் ஆதரவுடன் இதே புதுக்கோட்டையில் போட்டியிட்டுத் தோற்றது ம.தி.மு.க. இப்போது ம.தி.மு.க.வும் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியும் தனித்தனியாகத் தங்கள் வேட்பாளர்களைக் களத்தில் நிறுத்தியுள்ளன. இந்த நிலையில் ம.தி.மு.க.வின் வெற்றி எந்த வகையில் சாத்தியம்? தமது வேட்பாளருக்கு ஆதரவாகக் களத்தில் இறங்கிப் பிரசாரம் செய்து கொண்டிருக்கும் வை.கோபால்சாமியையே சந்தித்துக் கேட்டோம்.

"ஜெயலலிதாவின் மேலுள்ள இமாலய ஊழல் குற்றச்சாட்டுகளால் அவரது தொண்டர்கள் மிகவும் சோர்ந்து போயிருக்கிறார்கள். அவர்கள் இப்போது எங்களை ஆதரிக்கிறார்கள்..." என்ற வை.கோவை இடைமறித்தோம்.

"அந்தத் தொண்டர்கள் போட்டி அ.தி.மு.க. பக்கமல்லவா போவார்கள்?"

"இல்லை. போட்டி அ.தி.மு.க. என்பது கலைஞரால் உருவாக்கப்பட்ட பினாமி தி.மு.க.தான். எனவே அவர்கள் பக்கம் போக மாட்டார்கள். இவற்றோடு ஜெயலலிதா ஆட்சியில் இருந்தபோது அவர் என்னென்ன அதிகார துஷ்பிரயோகங்களையெல்லாம் செய்தார் என்று கலைஞர் கூறினாரோ, அதையேதான் கலைஞரும் இந்த இடைத்தேர்தலில் செய்து கொண்டிருக்கிறார். நாற்பது புதிய பஸ்கள் விடப்பட்டிருக்கின்றன. தொகுதியிலுள்ள பல இடங்களிலும் தேவைப்படும் ஆழ்குழாய்க் கிணறுகளைத் தி.மு.க.வினர் சொல்லும் இடங்களில்தான் போட்டுக் கொண்டிருக்கிறார்கள். சாலைகள் போடப்படுகின்றன. ஆக, ஜனநாயக நெறிகளைப் பற்றிப் பேசுகிற தகுதியையே கலைஞர் இழந்து விட்டார்.

"அரிசி விலை மற்றும் காய்கறிகளின் விலைகள் உயர்ந்து விட்டதை மக்களே நேரடியாக அனுபவித்துக் கொண்டிருக்கிறார்கள். காவிரிப் பிரச்னை, ஈழத்தமிழர் பிரச்னை போன்றவற்றில் எங்களுக்கென்று தனி கருத்துக்கள் உள்ளன. இவற்றையெல்லாம் சட்டசபையில் எடுத்துச் சொல்வதற்கு எங்கள் கட்சியிலிருந்து ஒருவராவது எம்.எல்.ஏவாக இருக்க வேண்டாமா? அதற்காக வாக்களியுங்கள் என்று பிரசாரம் செய்கிறோம்."

"மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்டின் கூட்டணி இல்லாதது உங்கள் கட்சிக்கு ஒரு பெரிய பலவீனம்தானே?"

"அவர்கள் பிரிந்து சென்றது வருந்தத்தக்க விஷயம்தான். என்றாலும் எங்களது வெற்றி வாய்ப்பைப் பாதிக்கிற அளவில் அவர்களது பிரிவு இல்லை. காரணம், எங்கள் கட்சியிலிருக்கிற தன்னலம் கருதாத தொண்டர்கள். வீடு வீடாகப் போய் விஷயங்களை எடுத்துச் சொல்லி வாக்குச் சேகரித்துக் கொண்டிருக்கிறார்கள். இதன் காரணமாகத்தான் தி.மு.க.வினர் செய்யும் அதிகார துஷ்பிரயோகம், அ.தி.மு.க. மற்றும் போட்டி அ.தி.மு.க. என்கிற பினாமி தி.மு.க. ஆகியோர் எக்கச்சக்கமாகச் செய்யும் செலவுகள் ஆகியவற்றையும் மீறி எங்களால் வெற்றி பெற முடியும் என்று



• சங்கரய்யா

• எஸ்.டி.எஸ்.

"நம்புகிறேன்!" என்றார் வைகோ.



• முகம்மது கனி

• சேடப்பட்டி



புதுக்கோட்டை தொகுதியில் நடைபெறும் திட்ட வேலைகளெல்லாம் தேர்தலை மனத்தில் கொண்டு தான் நடைபெறுகின்றனவா? இந்தக் கேள்வியை புதுக்கோட்டை நகராட்சியின் சேர்மன் முகம்மது கனியிடம் (த.மா.கா.) கேட்டோம்.

"இடையயவே இடையாது. உள்ளாட்சித் தேர்தல்கள் நடந்து முடிந்தவுடனேயே புதுக்கோட்டை நகராட்சிக்கு நீண்ட காலப் பயனளிக்கும் 3.70 கோடிக்கான திட்டங்களைச் செயல்படுத்தத் துவங்கி விட்டோம். தேர்தல் அறிவிப்புக்கு முன்பே டெண்டர்கள் விடப்பட்டு வேலைகள் துவங்கி விட்டதால், தேர்தலுக்காக அவற்றை நிறுத்தி வைக்க வேண்டிய அவசியம் இல்லை!" என்றவரிடம் நாம் இடைமறித்தோம்.

"தி.மு.க. - த.மா.கா. கூட்டணிக்குள் கசமுசா இருப்பதாகவும் அதனால் தி.மு.க. வேட்பாளருக்கு நீங்கள் முழுமூச்சுடன் வேலை செய்யவில்லை என்றும் சொல்லப்படுகிறதே?"

"முன்பு சில கருத்து வேறுபாடுகள் இருந்தன. ஊழியர் கூட்டம் போடப்பட்டவுடன் அவையெல்லாம் மறைந்து, இப்போது எங்கள் தொண்டர்கள் முழு வீச்சுடன் தேர்தல் களத்தில் வேலை செய்து கொண்டிருக்கிறார்கள். மற்றவர்கள் விலைவாசி உயர்வைப் பற்றிப் பேசினாலும் அதெல்லாம் இப்போது கட்டுக்குள் வந்து விட்டது. புதுக்கோட்டைக்குக் காங்கிரஸ் ஆட்சிக் காலத்தில் போடப்பட்ட காவிரி குடிநீர் வழங்கும் திட்டம், முந்தைய கலைஞர் ஆட்சியில்தான் முழு செயல் வடிவம் பெற்றுத் தயார் நிலையில் இருந்தது. பிறகு ஆட்சிக்கு வந்த அ.தி.மு.க.வினர் பைப்பைத் திறந்து தண்ணீர் பிடிக்கச் செய்தார்கள் அவ்வளவுதான். இது புதுக்கோட்டை மக்களுக்கு தெரிந்திருப்பதால், அவர்களால்தான் புதுக்கோட்டைக்குக் காவிரி நீர் கிடைக்கிறது என்கிற பிரசாரமும் எடுபடாது. வெற்றிக் கனி எங்கள் கூட்டணிக்குத்தான்!" என்றார் முகமது கனி.

"ம.தி.மு.க.வுடனான கூட்டணியை நீங்கள் இந்த இடைத் தேர்தலில் முறித்துக் கொண்டது ஏன்?" என்று கேட்டோம், மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் தமிழ்நாடு மாநிலப் பொதுச் செயலாளரான என். சங்கரய்யாவிடம்.

"மேற்கு வங்கம், கேரளா மாதிரியான தேர்தல் கூட்டணிகளை நாங்கள் தமிழகத்தில் இதுவரை வைத்துக் கொண்டதேயில்லை. இதுவரை நாங்கள் செய்து கொண்டதெல்லாம் அந்தந்தத் தேர்தலுக்கான தொகுதி உடன்பாடுகள்தான். காரணம், திராவிடக் கட்சிகள் எதுவுமே இடதுசாரி மனப்பான்மை கொண்டவை அல்ல. நிலச் சீர்திருத்தம், இலங்கைப் பிரச்னை போன்றவற்றிலும் மற்றுமுள்ள தேசிய, சர்வதேசப் பிரச்னைகளிலும் எங்களுக்கென்று தனிப் பார்வை உண்டு. அதனால்தான் கொள்கை மற்றும் திட்டங்களின் அடிப்படையில் இப்போது தனித்து நிற்கிறோம்."

"தனிப்பட்ட நபர்களின் செல்வாக்கைப் பார்த்து வோட்டுப் போடுகிற நமது மக்களிடம் இதுபோன்ற கொள்கைகளையும் திட்டங்களையும் சொல்லி வெற்றி பெற முடியுமா?"

"மக்கள் இப்போது சிந்திக்க ஆரம்பித்து விட்டார்கள். அதனால் எங்களது முயற்சிக்கு நல்ல வெற்றி கிடைக்கும் என்று நம்புகிறோம். இவற்றோடு தி.மு.க. ஆட்சியில் மேல்மட்ட அளவில் ஊழல்கள் நடக்காவிட்டாலும் கீழ்மட்டத்தில் நடக்க ஆரம்பித்து விட்டன. அதிகார துஷ்பிரயோகங்களும் நடக்கின்றன. பல மில்கள் மூடிக் கிடப்பதால் தொழிலாளர்கள் பாதிக்கப்பட்டிருக்கிறார்கள். இவற்றையெல்லாம் நாங்கள்தான் சட்டசபையில் அழுத்தமாக எடுத்துச் சொல்ல முடியும். அதனால்தான் மேலும் நாங்கள் பலம் பெறுகிற வகையில் புதுக்கோட்டையிலும் எங்கள் கட்சி வேட்பாளரை வெற்றி பெறச் செய்யச் சொல்லுகிறோம்!" என்றார் சங்கரய்யா.

முள்ளூர் என்னும் கிராமத்தில் தேர்தல் பிரசாரத்தில் ஈடுபட்டிருந்த மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி வேட்பாளரான குமாரவேலைச் சந்தித்த போதும், சங்கரய்யா கூறியதைத்தான் கூறினார். கூடுதலாக, "நான் போராட்ட குணமுள்ளவன் என்பது அனைவருக்கும் தெரியும் என்பதால், மாற்றுக் கட்சி நண்பர்கள் கூட நான் வெற்றி பெறுவதையே விரும்புகிறார்கள்!"



அழகிப் போட்டிகளால் என்ன ஆதாயம்? ஃபிலிப்பைன்ஸ் நாட்டில் அழகிப் போட்டி நடந்த போது அப்பகுதி மேயர், 'வருமான வரி கட்டாமல் பாக்கி வைத்திருப்பவர்'களிடமிருந்து வசூலித்துக் கொடுப்பதற்கு ஏற்ப அழகிப் போட்டியில் எக்ஸ்ட்ரா பாயிண்ட்ஸ் அளிக்கப்படும்' என்று அறிவித்து விட்டார். அவ்வளவுதான்! அதிகாரிகளுக்கு 'பெப்பே' காட்டியவர்கள், அழகிகளின் முற்றுகையில் அம்பேல்! பாக்கியிருந்த வருமான வரித் தொகையில் 90% வசூலாகி விட்டதாம்!

-பானுமதிவேங்கடேஸ்வரன்

என்றார்.

ஆமாம், ஆளுங்கட்சியான தி.மு.க. வேட்பாளர் மாரி.அய்யா என்ன சொல்கிறார்? அண்டக்குளம் என்னும் கிராமத்தில் வோட்டுக் கேட்டுவிட்டு, வேறொரு கிராமத்துக்குச் சென்று கொண்டிருந்த அவரது காரை வழியில் நிறுத்திக் கேட்டோம்.

"நாங்கள் அதிகார துஷ்பிரயோகம் எதுவும் செய்யவில்லை. பல இடங்களில் கடந்த பொங்கலுக்குத் தரப்பட்டிருக்க வேண்டிய வேஷ்டி, சேலைகள் இன்னமும் தங்களுக்கு வழங்கப்படாததைத்தான் குறையாகச் சொன்னார்கள். விலைவாசி உயர்ந்ததும் இப்போது அது கட்டுக்குள் கொண்டு வரப்பட்டிருப்பதும் உண்மைதான். அது கூட கிராமத்து மக்களைப் பாதிக்கவில்லை. எப்படியெனில், இவர்கள் விவசாயிகள். நெல்லை உற்பத்தி செய்பவர்கள் என்பதால் அரிசி வாங்குவதில்லை. ஏழை எளிய மக்களுக்கான ரேஷன் அரிசி விலை உயரவில்லை. எனவே, அது நகர மக்களைத்தான் பாதித்தது. இப்போது அதுவும் சரியாகி விட்டது!"

"இது சேஷன் இல்லாமல் நடக்கும் தேர்தல் என்பதால் அதிகமாகச் செலவு செய்வதாகச் சொல்கிறார்களே?"

"நீங்களே பார்க்கிறீர்களே, என்னோடு இன்னொரு கார் வருகிறது. அவ்வளவுதான். சேஷன் இல்லாவிட்டாலும் முன்பு போலவே எங்களது தேர்தல் நடவடிக்கைகளைத் தேர்தல் கமிஷன் அலுவலர்கள் வீடியோ எடுத்துக் கொண்டுதான் இருக்கிறார்கள். அதோடு, பணம் இல்லையே என்கிற குறைதான் எங்கள் தொண்டர்களுக்கு!" என்றார் மாரி.அய்யா.

இத்தனை பரபரப்புக்களுக்கு மத்தியில் இ.காங்கிரஸ் என்ன செய்து கொண்டிருக்கிறது? ஏறத்தாழ தொகுதி முழுவதும் சுற்றிப் பார்த்த நம் கண்களில் கைச்சின்னம் தென்படுவதே அரிதாகத்தான் இருந்தது.

அப்படியானால், "நாங்கள் ஒன்றாக இருந்த போது, வேட்புமனு தாக்கல் என்றால் குறைந்த பட்சம் இரண்டாயிரம் பேருடன் ஊர்வலமாகச் செல்வோம். இப்போது குமரி.அனந்தன் தமது வேட்பாளரோடு வெறும் அறுபத்தைந்து பேருடன் சென்றுதான் வேட்புமனு தாக்கல் செய்தார். அவர்களுக்கு ஏது தொண்டர்கள்?" என்று நம்மிடம் சொன்னாரே த.மா.கா. பிரமுகரும் புதுக்கோட்டை நகராட்சி சேர்மனுமான முகம்மது கனி! அது உண்மைதானா? இ.காங்கிரஸ் வேட்பாளரான சாமிநாதனையே சந்தித்துக் கேட்டோம்.

"இந்தத் தேர்தலில் மற்றவர்கள் ஏராளமாகச் செலவு செய்கிறார்கள். அதனால் பரபரப்பாகத் தெரிகிறார்கள். என்றாலும் இந்தத் தொகுதியில் எங்கள் கட்சிக்கென்று நாற்பதாயிரம் வோட்டுகள் உண்டு. அது அப்படியே எங்களுக்கு விழும். அதோடு விலைவாசி உயர்வு. இதற்குப் பல காரணங்கள் இருந்தாலும் தி.மு.க. ஆட்சிக்கு வந்தாலே அரிசி விலை உயர்ந்து விடுகிறது என்கிற எண்ணம்தான் மக்கள் மத்தியில் வந்திருக்கிறது. இதெல்லாம் எங்களுக்குச் சாதகமான விஷயங்கள்!" என்றார் சாமிநாதன்.

ஆக மொத்தம் புதுக்கோட்டை மக்கள் யாருக்குத்தான் வாக்களிக்கப் போகிறார்கள்? ஜாதி அடிப்படையில் வாக்களிப்பார்களா என்றால், போட்டி அ.தி.மு.க. வேட்பாளர் ஒருவரைத் தவிர மற்ற ஐவருமே ஒரே ஜாதியைச் சேர்ந்தவர்கள். அதனால் ஜாதி அடிப்படையில் யாரும் வெற்றி பெற முடியாது.

ஆறு வேட்பாளர்களுமே தொகுதி மக்களுக்கு நன்கு அறிமுகமானவர்கள்தான் என்பதால் அதிலும் யாரும் முன்னணி வகிப்பதாகச் சொல்லி விடமுடியாது.

எனவே, கட்சிகளின் அடிப்படையில்தான் இந்த முறை புதுக்கோட்டை மக்கள் வாக்களித்தாக வேண்டும். இந்த வகையில் பார்த்தால் தி.மு.க. வேட்பாளர் முன்னணியில் இருக்கிறார் என்றுதான் சொல்ல வேண்டும். ஆனாலும் சென்ற பொதுத் தேர்தல் மாதிரி 'கையில் எடுத்தது கண்டனர்; இற்றது கேட்டனர்' என்பது போன்ற அத்தனை சுலபமாக வெற்றி பெற்றுவிட முடியாது என்றே தோன்றுகிறது.

**— இளங்கோவன், ஸ்ரீநிவாசன்**

படங்கள் : **ராஜகுமாரன்**






1997 பிப்ரவரி 9
தாது தை 27
மலர் : 55
இதழ் : 28

**கல்கி**

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்.



# தட்டிக் கேட்கும் த.மா.கா!

தமிழ் மாநில காங்கிரஸை எப்படியாவது தம் பக்கம் வளைத்துப் போட்டுக் கொள்ள வேண்டும் என்பது காங்கிரஸ் தலைவர் கேசரியின் ஆசை. ஆனால், மூப்பனார் தம் கட்சியின் நிலையைத் தெளிவாக்கி கேசரிக்குக் கடுக்காய் கொடுத்திருக்கிறார்!

நாடாளுமன்றத்தில் 150 உறுப்பினர்களைக் கொண்ட ஒரு கட்சி, மத்திய அரசுக்கு, வெளியிலிருந்தபடி ஆதரவு கொடுக்கும் வினோதம் நீண்ட நாட்களுக்குத் தொடர முடியாது. ஸ்திரமான ஆட்சி அமைய வேண்டுமானால், காங்கிரஸ், மத்திய அமைச்சரவையில் பங்கேற்க வேண்டும் என்பதைத் தமது சொந்தக் கருத்தாக முன்வைத்துள்ளார். எனினும், ஐக்கிய முன்னணியின் வழிநடத்தல் குழுவுடைய (steering committee) சம்மதம் இதற்குத் தேவை என்பதையும் சுட்டிக்காட்டியிருக்கிறார்.

த.மா.கா. ஆதரவு கிடைத்தால் தாம் பிரதமராகலாம் என கேசரி போடக்கூடிய தந்திரக் கணக்கை முறியடிப்பதுடன், கட்சிக் கண்ணோட்டத்துக்கு அப்பாற்பட்டும் மூப்பனாரின் குரல் ஒலிக்கிறது. ஸ்திரமான அரசே நாட்டின் இன்றைய தேவை என்ற நோக்கம் புரிகிறது.

குடியரசுத் தலைவர் நியமன விஷயத்திலும் இதே போல் நடுநிலையுடன் பேசியிருக்கிறார் அவர். சங்கர்தயாள் சர்மா மற்றும் ஒருமுறை அப்பொறுப்பை ஏற்காத பட்சத்தில், துணை ஜனாதிபதியான கே.ஆர். நாராயணன்தான் குடியரசுத் தலைவராக வேண்டும். பிரதமருக்கு நெருக்கமானவர்கள், இந்த மரபை ஒதுக்கிவிட்டு, கர்நாடக ஆளுனர் குர்ஷித் ஆலம் கானை




அப்பதவிக்குச் சிபாரிசு செய்து வருவதாகச் செய்திகள்.

கூட்டணி கட்சியைச் சேர்ந்தவராயினும் பிரதமரின் இந்த நடவடிக்கைக்கு பலத்த எதிர்ப்பைப் பதிவுசெய்திருக்கிறார் மூப்பனார். ஐக்கிய முன்னணி கூட்டணியைச் சேர்ந்த பெரும்பான்மைக் கட்சிகள் கே.ஆர். நாராயணனைத்தான் ஆதரிக்கின்றன என்பதைத் தெளிவுபடுத்தியிருக்கிறார்.

தமிழகத்திலும் இந்த ஆரோக்கிய அரசியலின் அடையாளங்களை த.மா.காவிடம் பார்க்கிறோம்.

சட்டசபையில் சக்கைப் போடு போட்டிருக்கிறார் சிதம்பரம் தொகுதி எம்.எல்.ஏ., அழகிரி! காவிரிப் பிரச்னையில், பேச்சு - வார்த்தைகளை கருணாநிதி கச்சிதமாகவே வழிநடத்தினார் என்பதைச் சுட்டிக்காட்டிய அவர், பிரதமர் தேவேகௌடா நடுநிலையுடன் நடந்து கொள்ள வில்லை என்பதையும் குறிப்பிட்டிருக்கிறார். 'ஆதலால், தி.மு.க.வும் த.மா.கா.வும் பிரதமரின் தலைமைக்கு எதிர்ப்பு தெரிவிக்க வேண்டும்' என்றும் துணிந்து கூறியுள்ளார் அழகிரி. ஐக்கிய முன்னணி ஆட்சிக்கு அளித்து வரும் ஆதரவை விலக்கிக் கொள்ளாவிட்டாலும் கர்நாடகாவின் பிரதமராகவே நடந்து கொண்டு வரும் தேவேகௌடாவுக்கு இனியும் ஆதரவு தரக்கூடாது என்பது அழகிரியின் வாதம். இதற்காக மூப்பனாரின் கண்டனத்துக்கு ஆளானாலும் பரவாயில்லை என்று துணிந்து பேசியுள்ளார் அழகிரி!

இந்த வாதம், தோழமை கட்சியான ஆளும்கட்சிக்கும் தர்மசங்கடத்தை ஏற்படுத்தியிருக் கிறது. கருணாநிதி, தம்மளவில் பிரதமரை நியாயப்படுத்தும் நிலைக்குத் தள்ளப்பட்டிருக்கிறார். "பிரதமர் தலையிட்டிருந்தால் கூட பிரச்னை சுலபத்தில் தீர்ந்திருக்காது. தமிழக அரசு, காவிரி நடுவர் மன்றம் மூலமாக இறுதி வரை போராடும்" என்று கூறி சமாளித்திருக்கிறார்.

இவ்வாறு குறை நிறைகளை விருப்பு வெறுப்பின்றி எடுத்துச் சொல்லும் த.மா.கா.வின் விமர்சனப் பார்வை மற்றொரு விஷயத்திலும் தெரிகிறது : பிப்ரவரி முதல் தேதி அன்று பாட்டாளி மக்கள் கட்சி நடத்தவிருக்கும் ஈழத் தமிழ் மாநாடு மிக அபாயகரமானது என்பதை சட்டசபையில் எடுத்துச் சொல்லியிருக்கிறார் அழகிரி.

'கடந்த கால அனுபவத்தின் அடிப்படையில் பார்த்தால், அந்த மாநாடு ஒரு தேச விரோத




மாநாடாகவே அமையும் என்ற முடிவுக்கு வர வேண்டியிருக்கிறது. தேசிய அளவிலான பல கட்சிகளையும், மாநில அளவிலான பல கட்சிகளையும் விட்டுவிட்டு, வகுப்புவாதக் கட்சியான பி.ஜே.பி.யுடன் மட்டும் இணைந்து இந்த மாநாட்டை நடத்த பா.ம.க. ஏன் முற்பட வேண்டும்? இதற்கான அனுமதி ஏன் வழங்கப்பட வேண்டும்?' என்று கேள்விகள் எழுப்பியிருக்கிறார். இவ் விஷயத்தில் தமிழக அரசு தனது நிலையைத் தெளிவுபடுத்த வேண்டும் என்று வற்புறுத்தியுமிருக்கிறார்.

அழகிரியின் கேள்விகளுக்கு, முதல்வர் கருணாநிதியிடம் முழுமையான பதில் இல்லை. ஜெயின் கமிஷன் வாக்குமூலத்தில் தாம் கூறியது போல், ஈழப் பிரச்னை விஷயத்தில் மத்திய அரசின் கொள்கையே மாநில அரசின் கொள்கையுமாகும் என்பதற்கு மேலாக அவரால் எதுவும் கூற முடியவில்லை.

பா.ம.க. தலைவர்களின் பேரில் முன்னெச்சரிக்கையாக நடவடிக்கை எடுத்தாலோ, அவர்கள் திட்டமிட்டுள்ள கூட்டத்தைத் தடைசெய்தாலோ வன்முறை விளையலாம் என்கிற முதல்வரின் கணக்கில் பிசகில்லை.

எனினும், ஏற்கெனவே ஒருமுறை மிகப் பட்டவர்த்தனமாக தேச விரோத மாநாடு நடத்திய ஒரு தலைவரைக் கண்டிக்கவோ, விமர்சிக்கவோ, எச்சரிக்கவோ முதல்வர் தவறியிருக்கிறார் என்பது நெருடலான உண்மை.

'பிப்ரவரி 1 அன்று நடத்தப்படும் மாநாட்டில் தேச விரோத முழக்கங்கள் இருக்காது' என பாட்டாளி மக்கள் கட்சித் தலைவர் ராம்தாஸ், தமக்கு வாக்களித்திருப்பதாகக் கூறுகிறார் முதல்வர்.

'முதல்வரின் நம்பிக்கை அன்றைய தினம் சோதனைக்கு உள்ளாகும்' என்பதே அழகிரியின் நியாயமான கவலை.

தமிழக சட்டசபையில் 'பிருதிக் கண்மேற்சென்றிடித்தல்' பண்பு வளர்ந்து வருவதைக் காண மனம் நிறைகிறது.

# எம்.ஜி.ஆரின் சாதனையை ரஜினி முறியடிக்க முடியாதாமே...?

● அ. கிருஷ்ணகுமார், பு. புளியம்பட்டி.

? ஜெ. கட்சிப் பணத்தைப் பயன்படுத்ியது குறித்து...?

! தமிழ்நாட்டையே தமது சொந்த சொத்து போல் பாவித்து ஆட்சி நடத்தியவர், கட்சிப் பணத்தைக் 'கடன்' வாங்கவா யோசிக்கப் போகிறார்!

● கி. முருகன், மாப்பிள்ளைக்குப்பம். ❒

? தமிழக அரசு வழங்கப் போகும் குடும்ப அட்டைகளின் வண்ணங்களின் வேறுபாடு மக்களிடையே பேதங்களை ஏற்படுத்தாதா? தாழ்வு மனப்பான்மையைத் தோற்றுவிக்காதா?

! அட! இப்படியாவது மூன்றே மூன்று ஜாதிகளுக்குள் மக்கள் அடங்கினால் நல்லதுதானே!

● நி. ரங்கசாமி, மதுரை.

? நேதாஜி பிறந்த நாள் நூற்றாண்டு விழாவுக்காக மாணவர்களுக்கு விடுப்பு விடுவதில் என்ன பயன்? கருத்தரங்கு நடத்தி, சொற்பொழிவுகள் ஏற்பாடு செய்தாலாவது பயனுண்டே...?

! நமது தலைவர்களை வெறும் விடுமுறைத் தலைவர்களாகத்தான் வைத்திருக்கிறோம். அதிலிருந்து நேதாஜி மட்டும் தப்ப முடியுமா என்ன...?

● வே. ந. கதிர்வேல், வேலூர் – 6.

? 'தவறுகளை பத்திரிகைகள் கட்டிக்காட்டினால் ஆட்சியாளர்கள் கோபப்படக்கூடாது' என்று மூப்பனார் கூறியிருப்பது பற்றி...?

! த.மா.காவும் இனி கட்டிக்காட்டப் போகிறது என்று அர்த்தம். சட்டமன்றத்தின் தற்போதைய கூட்டத் தொடரில் அதற்கு ஆரம்ப விழா நடத்தியாகி விட்டது.

● எஸ். ஏ. கேசவன், குருமலை.

? அனைத்து இதழ்களும் அவ்வப்போது விலையை ஏற்றிவிட்ட நிலையில், கல்கி மட்டும் தரத்தைக் கூட்டுவதோடு நிறுத்தி, ரூபாய் மூன்றிலேயே தொடர்கிறதே...?

! அதானே!

● இரா. மாதவராமன், கிருஷ்ணகிரி.

? படவுலகிலும் அரசியலிலும் எம்.ஜி.ஆரின் சாதனையை ரஜினியால் முறியடிக்க முடியாது என்கிறாரே திருநாவுக்கரசு?

! எம்.ஜி.ஆரின் சாதனைகளை முறியடிக்கா விட்டால் என்ன... எம்.ஜி.ஆர். பெயரைச் சொல்லி ஆட்சிக்கு வந்தவர்களின் அக்கிரமங்களை முறியடிக்கத் துணையிருந்தாரே, அது போதும்.

● நீடா. சி. இளஞ்செழியன், சாலியமங்கலம்.

? சிற்றிதழ்கள் வாசிப்பீர்களா? அவை பற்றி உங்கள் கருத்து என்ன...?

! சிற்றிதழ்கள் இப்போது குழு மனப்பான்மையுடன் ஒன்றை ஒன்று சாடிக் கொள்வதில் இறங்கி விட்டன. காரம் இருக்கிற அளவுக்கு சாரம் இல்லை.

● என். விஷ்ணுசந்திரன், இலந்தம்பட்டி.

? லாடம் கட்டிக் கொண்டிருக்கிறோம்; அ.தி.மு.க. குதிரை விரைவில் சீறிப் பாயும் என்கிறாரே காளிமுத்து?

! லாடம் இருந்தென்ன? குதிரை இருந்தென்ன? ஜாக்கி ஒழுங்காக இல்லையே!

● அ. பாலசுப்பிரமணியன், த. கீழக்காடு.

? இன்று திரைப்பாடல்கள் சீரழியக் காரணம் கவிஞர்களா? ரசிகர்களா?

! ரசிகர்களைக் குறைசொல்லாதீர்கள். கண்ணதாசனையும் பட்டுக்கோட்டையையும் அவர்கள் ஒருபோதும் புறக்கணித்ததில்லை. ஆபாசப் பாடல்களை எழுதுவது இன்றைய கவிஞர்களின் ஏகபோக சந்தோஷமாகி விட்டது. நேற்று வந்த பழனிபாரதி பிரகாசமாய் முன்னேறுவார் என்று நினைத்தேன். 'நேசம்' பார்க்கும்வரை... பாடல் வரிகளை



• சென்னாருக்கு வேலை!



• கனிந்த நேரம்



• நிறைந்தது...



• எது...?

மிக அதிகமாக சென்ஸார் 'சாப்பிட்டிருப்பது' இந்தப் படத்தில்தான் என்று நினைக்கிறேன்.

● **ஆ. அழகேஷ், பூதப்பாண்டி.**

*? தங்க இறக்குமதி தாராளமாக்கப்பட்டது குறித்து...?*

! கடத்தல் குறைய வேண்டும் என்பதற்காக எடுக்கப்பட்டுள்ள இந்த நடவடிக்கையின் பிதாமகர் மன்மோகன் சிங்.

● **இ. ராதாகிருஷ்ணன், பட்டுக்கோட்டை.**

*? 'அ.தி.மு.க.வை அழிக்க கருணாநிதியாலும் அவர் மகனாலும் ஒருபோதும் முடியவே முடியாது...' என்று திருநாவுக்கரசு பேசியுள்ளாரே?*

! அதற்கு ஜெயலலிதாவும் அவரது உடன்பிறவா சகோதரியுமே போதும் என்பதுதான் உலகறிந்த விஷயமாயிற்றே!

● **ஜி. கதிரேசன், சிறுமுகை.**

*? பழனிக்குப் பாதயாத்திரை சென்று கொண்டிருந்த கதாகரனைக் கைது செய்தது சரிதானா?*

! கைது செய்கிற சமயம் பார்த்து அவர் பாத யாத்திரை புறப்பட்டார் என்பதே சரி.

● **ஆர். ராஜதுரை, சீர்காழி.**

*? 'தேர்வுகளில் வெற்றி பெற வேண்டுமானால் மேல்மருவத்தூர் கோயிலுக்கு மாலை போட்டுக் கொள்ள வேண்டும்' என்று கரூர் அரசு பெண்கள் உயர்நிலைப் பள்ளி தலைமையாசிரியர் கூறியிருப்பது...?*

! இதற்குப் பெயர்தான் உணர்ச்சிபூர்வமான பினாக்மெயில்! அன்பே உருவான கடவுளுக்கு இழைக்கப்படும் அபசாரம்.

● **டேவிட் மகிழவேணி, மதுராந்தகம்.**

*? நிர்வாகச் சீர்கேடுகளைச் சுட்டிக்காட்ட எதிர்க்கட்சி அவசியம் என்கிற சூழ்நிலையில், மக்கள் நலன் கருதி, புதுக்கோட்டையில் ஒரு எதிர்க்கட்சி அன்பர் தேர்வாகி வர கருணாநிதியே வழிவகுத்துத் தருவாரா?*

! பொதுத் தேர்தலில் த.மா.கா. கணிசமாக வெற்றி பெற ஒத்துழைத்ததன் மூலம் அவர் இதை ஏற்கெனவே செய்து விட்டாரே.

● **எஸ்.ஏ.என். செந்தில்குமார், சூலூர்.**

*? மரணமடையும் சிறைக் கைதிகளின் பிரேதப் பரிசோதனையை வீடியோ படமெடுக்குமாறு மனித உரிமை கமிஷன் தமிழக அரசைக் கேட்டுக் கொண்டிருக்கிறதே?*

! பிரேதப் பரிசோதனையில் வெளிப்படும் உண்மைகள் பூசி மெழுகப்படுகின்றன என்பதால் இப்படிச் சொல்கிறார்கள். வீடியோ எடுப்பவர்களும் அநீதிக்குத் துணை போனால் என்ன செய்வது?



• விதிவிலக்கு அல்ல!



• சாதனை..

● **மு. கருணாநிதி, தேவராயனேரி.**

*? 'எங்கள் தலைவி முதல்வராக இருந்த போது கஜானாவை நிரப்பி வைத்துவிட்டு வந்திருக்கிறார்' என்று காளிமுத்து கூறியிருக்கிறாரே?*

! உண்மைதான். ஆனால் அது அரசாங்க கஜானா இல்லை என்பதனால்தானே இத்தனை சிக்கல்களும்.



• ...சவால்!

● **ப. சங்கர், திருப்பூர்.**

*? படித்த இளைஞர்களுக்கு வேலை வாய்ப்பு கொடுக்க முடியாத அரசாங்கம், ராணுவத்தில் பணிபுரிந்து ஓய்வு பெற்ற படை வீரர்களுக்கு மீண்டும் வேலை வாய்ப்பு அளிப்பது நியாயமா?*

! ஓய்வு பெற்றவர்களுக்கு பென்ஷன் உண்டு என்றாலும் அவர்கள் உயிரைப் பணயம் வைத்து ராணுவத்தில் சேர்ந்தனர் என்பதற்காக இந்தச் சலுகை தரப்படுகிறது. தவறில்லை.



• ஆரம்ப விழா!

● **வி. சத்தியப்ரியன், சென்னை - 15.**

*? வாழ்க்கையில் வெற்றி பெற பணபலம், உடல்பலம், ஆள்பலம் - எது தேவை?*

! மனபலம் மட்டும் இருந்தால் இந்த மூன்றும் கூட - குறைய எப்படி இருந்தாலும் சமாளித்து ஜெயிக்கலாம்.

● **எஸ். விஜயலதா, தூத்துக்குடி.**

*? தமது சொத்துக்களையெல்லாம் கட்சிக்கு எழுதி வைத்த எம்.ஜி.ஆர். - கட்சியிலிருந்து கடன் வாங்கும் ஜெயலலிதா - கமெண்ட்ஸ்...?*

! எம்.ஜி.ஆரின் ஒரே அவமானம் - ஜெ!

❒ ரூ. 25 பரிசு பெறுபவர் : கி. முருகன், பூங்கா இல்லம், மாப்பிள்ளைக்குப்பம் - 610 105.

**நா**ம் சந்தித்த ஐந்து பேரும் 'தங்கப்' பெண்மணிகள். சமீபத்தில் நடைபெற்ற வெவ்வேறு இந்தித் தேர்வுகளில் தென்னகத்தில் முதலாக வந்தவர்கள்.

**"எதுக்குங்க இந்த இந்தியைப் படிக்கிறீங்க? என்னத்த அதிலே கண்டீங்க? நம்ம மாநில அரசு தமிழ் - இங்கிலீஷ் ரெண்டே போதும்ன்ற கொள்கையை வச்சிருக்காங்களே, அதைப் பத்தி என்னதான் நினைக்கறீங்க?" கேட்டதும் கொட்டினார்கள்.**

**உஷா நந்தினி :** *(சென்னை பல்கலைக் கழகத்தில் இந்தியில் எம்.ஏ. முடித்துவிட்டு, இப்போது பி.எட். படிக்கிறார். மொழிபெயர்ப்புக்கான பட்ட மேற்படிப்பில்தான் இவருக்கு முதல் ராங்க்)*

அப்பா மத்திய அரசுத் துறையிலே சிவில் எஞ்சினியர். ஐந்தாம் வகுப்பு வரை பம்பாயிலேதான் படிப்பு. அப்பாவுக்கு சென்னைக்கு மாற்றலாக, அப்போதிலிருந்து தமிழக வாசம்தான். சின்ன வயதிலிருந்தே எனக்கு மற்ற பாடங்களைவிட இந்தியில் மிக அதிகமான மதிப்பெண்கள் கிடைக்கும். அதனாலே இந்தி மேலே ஒரு தனி ஈடுபாடு. பி.எஸ்ஸி நியுட்ரிஷன் படிச்சேன். "அப்பவே இந்தி பி.ஏ. படிக்கணும்னு நினைச்சாலும், சென்னை மாநில கல்லூரியிலே அந்த கோர்ஸ் இருக்குன்றது தெரியாம போயிடுச்சி. பிறகு எம்.ஏ. இந்தி படித்தேன்.

தமிழ் என் தாய் மொழி. அதை யாரும் குறை சொன்னால் எனக்குப் பிடிக்காது. அதே சமயம், நம் தேசிய மொழியான இந்தியைக் குறைத்துப் பேசுவதும் தப்பு. இங்கே இந்தி எதிர்ப்பு என்பது பாலிடிக்ஸ் மட்டுமே. இந்தியை எதிர்ப்பதாகக் கூறும் பலரது குழந்தைகள் இந்தி பிரசார சபாவில் படிக்கிறார்கள்.

எதற்கெல்லாம் எதிர்ப்பு இருக்கிறதோ, அதற்கெல்லாம் டிமாண்ட் இருப்பது இயற்கை. இந்தி ஆசிரியையாக தமிழகத்தில் வேலை செய்ய வாய்ப்பு பிரகாசமாகவே இருக்கிறது.

**பொன் இசக்கியம்மாள் :** *(என்.ஏ. இந்தி இலக்கியத்தில் 'தங்கம்'. இப்போது இந்தியில் எம்.பில் படித்து வருகிறார்.)*

குரோம்பேட்டையில் எம்.எஸ்.எம். மெட்ரிகுலேஷன் பள்ளியில் படித்த போதும் சரி, வைணவக் கல்லூரியில் பி.காம். படித்தபோதும் சரி, தமிழ்தான் செகண்ட் லாங்வேஜ். எனக்கு இந்தியைத் தாய்மொழியாகக் கொண்ட ஸ்நேகிதிகள் பலர் உண்டு. அவங்களுக்குத் தமிழ் தெரியும். அப்படியிருக்கும்போது நானும் இந்தி கத்துக்கிட்டா என்னன்னு தோணிச்சு. பள்ளியில் படிக்கும்போதே இந்தி பிரசார சபாவில் படிக்கத் தொடங்கி, பத்தாம் வகுப்பு படித்துக் கொண்டிருக்கும்போதே இந்தியில் 'ப்ரவீன்' பாஸ் செய்தேன்.

இந்தியாவைப் பொறுத்தவரை தகவல் தொடர்புக்கு அதிகபட்ச ஸ்கோப் உள்ள இந்திய மொழி இந்திதான். தமிழா? இந்தியா? என்று பட்டி மன்றம் நடத்துவது தேவையில்லாதது. இரண்டுமே மொழிகள். ஒன்று தாய் மொழி. இன்னொன்று இந்தியாவில் அதிகம் பேசப்படும் மொழி. எங்கள் குடும்பத்தில் யாருக்கும் இந்தி தெரியாது. என் பெற்றோருக்கு வடநாட்டில் மாற்றலாகக்கூடிய வேலையும் இல்லை. இருந்தாலும் என் வருங்காலத்துக்கும் இந்தி படிப்பது மிகவும் பயன்



* உஷா





* இசக்கியம்மாள்

படும் என்பதுதான் உண்மை. இந்தியில் தட்டெழுத்தும் சுருக்கெழுத்தும் கூட பயின்றிருக்கிறேன். வட இந்தியாவில் வாழும் (அல்லது இங்கிருந்து அங்கு வேலை மாற்றல் பெற்ற) ஒருவர் எனக்குக் கணவராக அமைந்தால், அவருக்கு உதவவும், அங்கு வேலை தேடிக் கொள்ளவும் என்னால் முடியும்.

இங்கே மொழியை வைத்துக் கொண்டு அரசியல்வாதிகள் குழப்பம் விளைவிப்பது கவலை தருகிறது. ஒரு புது தலைமுறையை தொடக்கத்திலிருந்தே மொழியின் அடிப்படையில் தயார்ப்படுத்துவது வேறு; வளர்ந்தவர்களை மொழி மாற்றம் என்று அதிர்ச்சிப்படுத்துவது வேறு. மருந்தின் பெயர்களை தமிழில் எழுத வேண்டும் என்ற வேண்டாத அரசு உத்தரவால், இதைத் தவறாகப் புரிந்து கொள்ளக் கூடிய சாத்தியத்தால், றையுமே அறிவதுதான் யாருக்குமே வருங்காலப் பாதுகாப்பு.

**உஷா** : (பி.ஏ. ஹானர்ஸுக்கு ஒப்பான "திஷ்னாட்"டில் முதலிடம். மற்றபடி கணிதத்தில் எம்.எஸ்ஸி., பி.எட். (இந்தி) கூட.)

"சூர்தாஸ் மற்றும் மீரா பஜன்ஸ் மீது கொள்ளை ஆசை. அர்த்தம் புரிந்து பாட வேண்டும் என்ற முயற்சியில், அம்மா உதவினார் (மைசூர்

# ஹிந்திக்கு வாக்களிக்கும் தமிழ்ப் பெண்கள்!



நோயாளிகளின் வாழ்க்கையோடு விளையாடுவதாகவே எனக்குப் படுகிறது.

**ரஜிதா** : (இந்தி இலக்கியத்தில் எம்.ஏ. இந்தி மொழிபெயர்ப்பில் பட்ட மேற்படிப்பு. சமீபத்தில் முடித்த பி.எட்டில் தங்க மெடல்)

மாநில அரசு வேலை, மத்திய அரசு வேலை இரண்டில் ஒன்றைத் தேர்வு செய்யலாம் என்றால், மிகப் பெரும்பாலானோர் பல்கலைக்கழகத்தில் எம்.ஏ. இந்தியில் அவரும் கோல்ட் மெடலிஸ்ட்). இந்தியில் ஈடுபாடு வந்து படிக்கத் தொடங்கினேன். பள்ளியில் எடுத்துக் கொண்டது தமிழ்தான். இந்தியில் எழுத்துக்கள் வெகு



எதைத் தேர்ந்தெடுப்பார்கள் என்று நமக்குத் தெரியும். அப்படி முன்னுரிமை கொடுக்கப்படும் மத்திய அரசு வேலைக்கு, இந்தி தெரிந்திருப்பது மிகவும் நல்லது. கிணற்றுத் தவளையாக இல்லாமல், பதவி உயர்வு வேண்டுமென்றால், வட இந்தியாவில் மாற்றல் கிடைக்கும். அங்கே இந்தி தெரிந்தால்தான் எளிதாகக் காலம் தள்ள முடியும். ஓர் அவசரத்துக்கு உதவி பெறக்கூட ஆங்கிலம் மட்டும் உதவிடாது.

குழந்தைப் பருவத்தில், என் இந்தி டீச்சரைப் பார்த்து நான் பிரமித்திருக்கிறேன். அவரைப் போலவே நானும் ஆக வேண்டும் என்பது என் லட்சியக் கனவாகவே இருந்தது. இப்போது நங்கநல்லூரில் உள்ள ஒரு பள்ளியில் இந்தி ஆசிரியையாக மனநிறைவோடு இருக்கிறேன்.'

மும்மொழிக் கொள்கைக்குத்தான் ஆதரவு. மாநில மொழி, ஆட்சி மொழி, ஒரு வெளிநாட்டு மொழி என்ற

* அனுஷா



## சுட்ட பழம் :

''சட்டசபையில் எம்.எல்.ஏ. இல்லாத எங்கள் கட்சிக்கு முதல் அன்னமாக புதுக்கோட்டை மக்கள் போட வேண்டும். அதன் பிறகு அள்ள அள்ளக் குறையாத அன்னமாக எம்.எல்.ஏக்கள் வருவார்கள். இந்த நூற்றாண்டுக்குள் காங்கிரஸ் ஆட்சி தமிழகத்தில் உருவாகும்.''



— குமரி அனந்தன்

## கனிந்த சிந்தனை :

'அரிசி விற்கிற விலையில் இப்படி அன்னத்தை உதாரணமாய்ச் சொல்லி குமரிஅனந்தன் வயிற்றெரிச்சல் கொட்டிக்கறாரே!' தமிழன் புலம்பத் துயாராவது தெரிகிறது.

பொறுக்க வேணும்! புதுக்கோட்டையிலிருந்து ஒரு காங்கிரஸ் எம்எல்ஏ. தேர்வாகி சட்டசபைக்கு வந்து விட்டால், அரிசி மட்டுமா... கோதுமை, காய்கறி, கீரை, பட்டுப்புடைவை, பாலிகாட் தலைவலி தைலம், மூக்குப் பொடி ஒன்றுவிடாமல் விலை குறையாதோ!

'அள்ள, அள்ளக் குறையாத அன்னமாக காங்கிரஸ் எம்எல்ஏக்கள் வருவார்கள்' என்று எந்த நம்பிக்கையில் சொல்கிறார் குமரியார்?' - புருவம் உயர்த்தும் சந்தேகப் பேர்வழிகளுக்கு பதில் இதுதான் :

ஊழல், வஞ்சம், சந்தர்ப்பவாதம் உட்கட்சிப் பூசல் என எதுவானாலும் அள்ள அள்ளக் குறையாத பாரம்பரியம் அல்லவா காங்கிரஸ் பாரம்பரியம்? அந்த நம்பிக்கையில்தான் குமரியார் அறிக்கை விடுகிறார்!

'இந்த நூற்றாண்டுக்குள் தமிழகத்தில் காங்கிரஸ் ஆட்சியாமே!' 'இதுதான் இந்த நூற்றாண்டின் மாபெரும் ஜோக்!' என்று சிரிக்கும் ஏளனக்காரர்களே, அவசரப்படாதீர்கள்!

'தேர்தல் பிரசார செலவுக்காக புதுக்கோட்டை மக்களிடம் நான் உண்டியல் ஏந்தி வசூல் செய்யப் போகிறேன்' என்றும் அதே மூச்சில் சொல்லியிருக்கிறார்!

தேர்தல் முடியும் வரை பொறுத்திருந்து குமரியாரின் ஜோக்குகளைக் குறித்து வையுங்கள். புத்தகமாக வெளியிட வாழப்பாடி வீட்டு வாசலில் உண்டியல் குலுக்கி நிதி திரட்டினால் போச்சு!

- சில்மிஷா

கலபம். துளசி ராமாயணத்தில் மனத்தைப் பறிகொடுத்தேன்.

கணிதம் அல்லது இந்தி இரண்டில் ஒன்றில் ஆசிரியை ஆகலாம் என்றபோது இந்தி இலக்கியத்தின் சுவையே தனி என்று என் மனம் கணக்குப் போட்டது. வட இந்தியாவுக்குப் போனால் 'இவங்களும் நம்ம ஆளுங்கதான்' என்று நம்மை அவர்கள் அங்கீகரிக்க வெகு சுலபமான வழி இந்திதான்.

தேர்தலிலிருந்து ஆட்சி அமைப்பது வரை எல்லாமே இங்கு 'மெஜாரிட்டி' அடிப்படையில்தான் இயங்குகிறது எனும்போது மெஜாரிட்டி இந்தியர்கள் பேசும் இந்தியை மட்டும் ஒதுக்க நினைப்பது சரியல்ல. அதைப் பாசத்துடன் பயிலுவதுதான் புத்திசாலித்தனம்!

அனுஷா : ('ப்ரவீன்' கோர்ஸில் முதல் ராங்க்)

ஆறாம் வகுப்புவரை தமிழ். பத்தாம் வகுப்பு வரை இந்தி. இப்போது ப்ளஸ் டூவில் தமிழ் - என்று மாறி மாறி இரு மொழிகளையும் தேர்வு செய்திருக்கிறேன் என்றால் அதற்குக் காரணம் இரு மொழிகள் மீதுமே எனக்குள்ள பற்றுதான். வருங்காலத்தில் ஐ.ஏ.எஸ் படிக்க ஆசை.

உலகின் பல நாடுகளில் தொடர்பு மொழி ஒன்றுதான் என்றிருக்கும்போது இந்தியாவின் ஒரு பகுதியான தமிழ்நாட்டில் மட்டும் இந்தியை சிலர் எதிர்ப்பது பொருத்தமானதாகத் தெரியவில்லை.

எனக்கு தமிழ், இந்தி இரண்டுமே பிடிக்கும். இரண்டிலுமே மிக கௌரவமான மதிப்பெண்களையும் பெற்று வந்திருக்கிறேன். ஆனால் ல, ள, ழ ஆகியவற்றை எழுதும் போதும் பேசும் போதும் தவறாகப் பயன்படுத்துபவர்கள், 'தமிழுக்குக் குரல் கொடுக்கிறேன்; இந்தியை எதிர்க்கிறேன்' என்று சொல்வது சிரிப்பூட்டுகிறது.

தேச பக்தி உள்ள ஒவ்வொருவரும் இந்தியை ஏற்றுக் கொண்டுதான் ஆக வேண்டும். 'மாநில எல்லையைத் தாண்டி என் பார்வை போகாது; மற்றவர்களைப் பற்றி எனக்கு அக்கறையில்லை' என்பவரை நாட்டுப் பற்று உடையவராக எப்படி ஏற்றுக் கொள்வது? தமிழையும் தாய்மொழி என்ற கோணத்தில் நெகிழ்வோடு படிக்க வேண்டும். இந்தியையும் நம் தேசிய மொழி என்ற பாசத்துடன் அறிந்து கொள்ள வேண்டும். இதுதான் நியாயம். நான் முதலில் ஓர் இந்தியக் குடிமகள். பிறகுதான் தமிழ்க்குடிமகள்.

— ஜி.எஸ்.எஸ்.

அட்டை வண்ணப்படம், படங்கள் : யோகா

# “மனுஷியாக மதியுங்கள்!”

“இதோ இவர்தான் எங்கள் கல்லூரியின் சிறந்த மாணவி!”

இடம் : கம்ப்யூட்டர் விழிப்புணர்ச்சிக்கு கிராமங்களில் வழிகாட்டும் ஸ்ரீமதி இந்திராகாந்தி மகளிர் கல்லூரி, திருச்சி.

அறிமுகப்படுத்தியவர், கல்லூரி முதல்வர் கே. மீனா.

அவர் கைகாட்டிய இடத்தில் நின்று கொண்டிருந்தவர், மாணவி எஸ். ஆனந்தி.

எளிமையான உருவம், மண்வாசனை வீசும் முகம். அழுத்தமான, கோர்வையான பேச்சு.

– இதுதான் ஆனந்தி! பி.காம்.



• ஆனந்தி



• தோழிகளுடன்

இரண்டாவது வருடம் படிக்கிறார். கும்பகோணம் அருகிலுள்ள ஆலத்தூர் கிராமம் சொந்த ஊர்.

‘பெண் அடிமைத்தனம்’ பற்றிய ஆழமான, ஆறாத வடு அவர் மனத்தில் இருப்பது, அவர் பேசும் போது தெரிந்தது.

பாரதிதாசன் பல்கலைக்கழகக் கல்லூரிகளுக்கு இடையிலான பேச்சுப் போட்டி என்றால், அது ஆனந்தி இல்லாமல் இல்லை. பதினைந்து முறை இதுவரை பரிசுகள் வாங்கிக் குவித்திருக்கிறார்!

இந்திராகாந்திதான் தமது ‘இன்ஸ்பிரேஷன்’ என்று கூறும்போது கண்கள் ஜொலிக்கின்றன.

பெண் சுதந்தரம் என்பது எழுத்திலோ,

காலேஜ் ஸ்டார்:



# கல்கி – பாலு ஜுவல்லர்ஸ் இணைந்து வழங்கும் வாரம் ஒரு சவரன் போட்டி – 5

'தினம் நூறு பிரச்னை; படுத்தால் தூக்கம் எங்கே வருகிறது?' என்று புலம்பாதீர்கள்! என்றாவது ஆழ்ந்து உறங்கி, அற்புதமான கனவு கண்டிருப்பீர்களே! உங்களால் மறக்கவே முடியாத கனவைக் கூப்பனில் எழுதி, 17.2.97க்குள் அனுப் புங்கள். சிறந்தவை பிரசுரமாகும். மிகச் சிறந்த ஒரு கனவுக்கு ஒரு சவரன் பரிசு.

ஆசிரியர் தீர்ப்பே இறுதி.

**சவரன் போட்டி - 5**
**மறக்க முடியாத கனவு :**

பெயர்:..............................................................

முகவரி:............................................................

.......................................................................

.......................................................................

பேச்சிலோ உள்ள அளவு நடைமுறையில் இல்லை என்று வருத்தப்படும் இவர், 'ராகிங்'கை எதிர்க்காதது நமக்கு லேசான வியப்பு.

"சீனியருக்கும், ஜூனியருக்கும் இடையே ஏற்படுத்தும் நல்லுறவு அது; ஆனால் 'லக்ஷ்மணன்கோடும்' அதற்கு உண்டு!"

வரதட்சணை பிரச்னை பற்றி அடுத்த நூற்றாண்டில் பெண்கள் கவலைப்பட மாட்டார்கள் என்றார்.

"எப்படி?"

"படிப்பு, வேலை என எல்லாத் துறைகளிலும் ஆண்களை விட இப்போது பெண்கள் கைதான் ஓங்கியுள்ளது. அதனால் ஆண்கள் இனி வரதட்சணை கேட்டு நிர்பந்திக்க முடியாத நிலையில் இருப்பார்கள்."

"இந்தக் கல்லூரியின் முதல்வர் இவரைப் பற்றிக் குறிப்பிடும்போது பெருமை வழிந்தது குரலில்.

"எங்கள் காலேஜ், என்.எஸ்.எஸ்சின் ஆக்டிவ் மெம்பர் ஆனந்தி;

"நாங்க தாயனூர் கிராமத்தினை தத்து எடுத்திருக்கோம், முதலைப்பட்டி கிராமத்தில் சமுதாயக்கூடம் அமைத்து பெண்களுக்கு கைத்தொழில் கற்றுத் தரோம். ரத்ததானம் செய்யறோம், முக்கியமாய் கிராமப்புறப் பள்ளிகளில் கம்ப்யூட்டரை அறிமுகப்படுத்தறோம்.

"இந்த சமூக சேவை அனைத்திலும் ஆனந்தியின் பங்கும் பாராட்டப்பட வேண்டிய ஒன்று" என்றார்.

எதிர்கால சார்ட்டர்ட் அக்கவுண்டண்ட் கனவில் இருக்கும் ஆனந்தி, தாம் சம்பாதிக்கும்போது அதன் ஒரு பகுதியைப் பெண்கள் முன்னேற்றத்துக்காகச் செலவழிக்கவும் திட்டமிட்டுள்ளார்.

ஆக்கப்பூர்வமான மேடைப் பேச்சு மூலம் பெண்களிடையே விழிப்புணர்ச்சி ஏற்படுத்த முடியும் என்று திடமாக நம்பும் இவர், ஆண்களை வேண்டிக் கொள்வது ஒன்றுதான்.

"பெண்களை நீங்கள் தெய்வமாகவும் மதிக்க வேண்டாம், கீழே போட்டு நசுக்கவும் வேண்டாம்! சக மனுஷியாய் மதியுங்கள், போதும்!"

திருச்சியிலிருந்து
**கிருஷ்ணா**

'விவசாயிகளுக்கு மழை பெய்தால்தான் பிழைப்பே... ஆனால் நெசவாளர்களுக்கு அப்படியில்லை. மழைதான் அவர்கள் சத்ரு. அதிலும்பட்டு நெய்பவர்களை இந்த மழை புலம்ப விட்டு விடும். தறியில் இழைகள் துவண்டுபோய், பிசுபிசுப்போடு கிடக்கும். அடித்துநெய்தால் அறுந்து ஜீவனை விடும். மழைநாளில் தனக்கு போர்வையில்லாத நெசவாளிகூட தன் தறிக்குப் போர்வை தேடுவான்!'

# ஆசை நெசவு 5

**இந்திரா சௌந்தர்ராஜன்**

**பா**னுவின் வீட்டின் மேல் பாய்ந்த இடிச்சப்தத்தைத் தொடர்ந்து 'அம்மாடி... பானு...' என்கிற மந்தா கிழவியின் அலறல் சப்தம் கூடப் பெரிதாக அந்த மழை இரவை வெட்டிப் பிளக்கிறது.

வீட்டுக்குள் ஒழுகுகிறதே என்று திண்ணையில் பேத்தி பானுவுடன் ஒடுங்க வந்தவள் இயற்கை உபத்ரவத்திற்காக எழுந்து பின்பக்கம் செல்லப்போக, கொல்லைத் தென்னையின் தலையில் விழுந்த இடியும் அந்த விவரிக்க முடியாத ஒளி மின்னலும் அருகில் நிற்கும் மந்தாவின் பூஞ்சை விழிகளை விருட்டென்று பறித்துக் கொள்ள, அதன்பிறகுதான் மந்தா அந்த அலறு அலறினாள்!

சின்னத் தூறலுக்கே தாங்காத மின்கம்பங்கள் இந்த இடி மின்னல் நிமித்தம் சட்டென்று தங்கள் சப்ளையை வேறு நிறுத்திக் கொள்ள, இப்போது இருட்டின் சாம்ராஜ்யம் வேறு.

தடவித் தடவி வரும் பானு, மந்தாவை இருட்டில் தேடுகிறாள்.

''பாட்டி எங்க இருக்கே... என்ன ஆச்சு?'' மேனியை சிலிர்ப்பிக்கும் மழை நனைசலோடு விழிகளைக் கசக்கி நோக்குகிறாள்.

"பானு இங்கதாண்டி இருக்கேன். மின்னலைப் பார்த்ததுல இருந்து கண்ணு வேற தெரியலடி....''- மந்தாவின் புலம்பலில் அதிர்ந்து போகிறாள். ஐய்யய்யோ...!

**வி**டிந்து விட்டது.

வானத்தில் பொட்டு மேகத்துண்டு கூட இல்லாத ஒருவகை நிர்மலம். மந்தா கிழவியின் கண்களைப் பறிக்கவென்றே இடி இடித்து மழைபெய்த மாதிரி ஒரு தோற்றம்.

வீதியெல்லாம் கூட நீர் வடிந்து அலம்பி விட்ட மாதிரி இருக்கிறது. வாசற்படி முருங்கை மரங்கள் மட்டும் தன் மேல் அமர்ந்து, பின் எழும்பிப் பறக்கும் காக்கைகளின் உந்துதல் நிமித்தம் அவ்வப்போது இலைநீரை கீழே தெளித்து மழை பெய்த தடயமாய் நிற்கின்றன.

மந்தாவின் குச்சு வீட்டு முன்னால் கூட இப்போது கூட்டம்.

"கிழவி கண்ணு போயிடுச்சுடி.... இனி எப்படிக் கடை விரிப்பா?"

"இந்த வயசுல இப்படி ஒரு சிக்கலா அவளுக்கு? அடப் பாவமே!"

-ஆளாளுக்கு ஆயாசித்தபடி வீட்டுத் திண்ணை மேல் அமர்ந்து புலம்பும் மந்தாவைப் பார்த்து வருந்தி முகம் தூக்குகிறார்கள்.

"பாழாப்போன மின்னல்... என் உசுரைக் கொண்டு போகாம என் கண்ணைக் கொண்டு போயிருச்சே... நான் என்ன பண்ணுவேன்?"

மந்தாவும் பதிலுக்குப் புலம்புகிறாள். அருகில் சோகமாய் பானு. அந்த நிலையிலும் அவள் அவ்வப்போது மோகன்ராம் வீட்டுப் பக்கமாய் ஏறிட்டு ஏறிட்டு ஏமாந்து கொண்டிருக்கிறாள்.

செய்தியறிந்து யார் யாரெல்லாமோ வந்து குசலம் விசாரிக்கிறார்கள். ஆனால் அவன்... ஒரு வேளை இன்னமும் மயக்கத்திலேயே இருக்கிறானா?

கேள்விக் குமைச்சலோடு உழல்பவள் எதிரே இப்போது வீதி மணியம்!

''என்னம்மா இப்படி ஆயிடிச்சேன்னு இடிஞ்சு போயிட்டியா? கவலப்படாதே. வாலீஸ்வரன் டாக்டர் நல்லா பார்ப்பாரும்மா. முதல்ல கூட்டிக்கிட்டு போய் காட்ற வழியப் பார்...'' என்கிறார்.

''ஆமா இன்னிக்கு கடை?''

''என்ன பண்றதுன்னு தெரியலியே.... அஞ்சுபடி மாவும் அரைப்படி சட்னியும் அப்படியே இருக்கு.''

''ஏன் பானு... நீதான் கடை போடக் கூடாதா? சரக்கு வீணாப் போயிடப் போவுது.''

யார் கருத்தும் அவன் காதில் விழுந்த மாதிரி தெரியவில்லை. பார்வை மோகன் ராம் வீட்டுப்புறமே இருக்கிறது.

வழக்கமாக இந்த வேளையில் ரங்காச்சாரி டீக்கடையைக் குறிவைத்து கிளம்பியிருப்பான் அவன்.

குளித்து முடித்து நெற்றியில் சின்ன குங்குமக் கீறலோடு பளிச்சென்று இருப்பான். ரங்காச்சாரி டீக்கடையில் தினத்தந்தி, தினமலர் என்று தினசரிகள் விரித்துக் கிடக்கும்.

அதில் ஒரு கூட்டம் லாட்டரி முடிவுகளைப் பார்த்து பரிசு விழாத சீட்டுக்களை பந்தாக சுருட்டி எறிந்தபடி இருக்கும். இன்னும் சிலர் அந்தக் காலையிலேயே அரசியல், அக்கப் போரில் உருண்டு கொண்டிருப்பார்கள். 'சர்ர்ர்ர்..'

நடு நடுவே கண்ணாடித் தம்ளரில் ஒரு உறிஞ்சு!

மோகன் ராம் இந்தக் கூட்டத்தில் நுழைவது தெரியாமல் நுழைந்து பேப்பரையும் பார்த்து விட்டுத் திரும்புகிறவன்.

திரும்பும்போது மந்தா இட்லியையும் தோசையையும் பொட்டலமாய் கட்டி வைத்து நீட்டுவாள். கடன் சொல்லாமல் காசு கொடுத்து விட்டு, அதை வாங்கிக் கொண்டு நடப்பான். காசில்லாத நாளில் வாங்காமல் போய்விடுவான். மந்தா அந்த செய்கைக்காக ஆச்சரியப்பட்டுப் போவாள்.

''மோகா நீ தப்பிப் பொறந்துட்டேடா, தப்பிப் பொறந்துட்டே...'' என்பாள்.

சாதாரண நாளிலேயே இது தவறாதே... இன்று என்ன ஆயிற்று அவனுக்கு? அவன் விட்டால் அழுது விடுவான் போல் இருந்தது.

இந்த நேரம் பார்த்துத் தானா தாமு வர வேண்டும்?

''என்னா பாட்டி கடை இல்லியா இன்னிக்கு... உன் கடை சரக்குன்னா உஸ்தா இருக்கும்னு வந்தேன்'' என்றபடி வருகிறான்.

''வா தாமு... கிழவிக்கு ராத்திரி



இடிமழைல கண் போயிருச்சப்பா. அதான் கடை போடலை" என்று வரவேற்பளிக்கிறான் ஒருவன்.

"அடப்பாவமே! கண்ணு போயிருச்சா... அப்ப கஷ்டம்தான்."

- தாமு பதிலுக்குப் பரிதாபப்பட்ட விதமும் அப்படியே பானுவைப் பார்த்த விதமும் அவளை உலுப்புகிறது.

"என்னா பானு, என்னா பண்ணப் போறே?" இது அவனது அடுத்த கேள்வி. பதில் சொல்லாமல் உள்ளே ஓடினாள் பானு. போய் மறைவாக நின்று கொண்டாள். அநியாயத்துக்கு மூச்சிறைத்தது. அவனும் அவன் பார்வையும் மனக்கண்ணில் மிரட்டியது. முந்திய நாளில் அவன் கவுண்டர் வயல் காட்டில் பேசியது வேறு ஊர்வலமாய்ப் போய் முன்னாய் குத்தியது.

தாமு மிக உரிமைப்பட்டவன் போல இப்பொழுது வீட்டுக்குள்ளேயே நுழைய ஆரம்பித்தான்.

அவன் பயங்கரமானவன் என்கிற அபிப்ராயம் இருப்பதால் யார் வீட்டுப் படி அவன் ஏறினாலும் எங்கு வந்தாய் என்று கேட்க யாருக்குமே துணிச்சல் கிடையாது. பிடிக்கிறதோ - பிடிக்கவில்லையோ வழிசல் சிரிப்போடு வரவேற்று உட்கார்த்தி வைத்து நைச்சியமாகப் பேசித்தான் எல்லோருக்கும் பழக்கம்.

அதே ஜமாவோடு உள்நுழைபவன் பானுவைக் கடிக்கிற மாதிரி பார்க்கிறான்.

"என்ன உள்ள ஓடிவந்துட்டே? என் கேள்விக்கு பதிலே சொல்லாம..." எதிரே நின்று கொண்டு தாடையைத் தடவியபடி பேசுபவன் முன் ஒரு புறாக்குஞ்சு போல் நடுங்கியபடி நிற்கிறாள் பானு.

**து**ல்லியமான அந்த நொடிகளில் மோகன்ராம் கூட அவள் வீட்டுக்கு வெளியில்...

"படுத்துக் கிடந்தா என்ன? அந்தப் பேப்பரை ஒருநாள் படிக்கலேன்னா என்னா குறைஞ்சிடப் போவுது?" என்கிற மகாலட்சுமியின் கேள்வியை ஒதுக்கியபடி தலைக்கட்டோடு நடக்கிறான்.

பல்லில் வேலங்குச்சியை விளையாடவிடும் விருத்தாசலம் செட்டியாரிலிருந்து விழித்த வினாடியில் சுருட்டுக்கு நெருப்பு வைத்து விட்ட பிசுக்குத் தாத்தா வரை அவனை வேடிக்கை பார்க்கிறார்கள்.

"எங்க மோகன், கிழவிய பாக்கவா?"

"எதுக்கு?"

"விஷயம் தெரியாதா? ராத்திரி மின்னல்ல அதுக்குக் கண்ணு அம்பேல் ஆயிடிச்சல்ல...!?"

- நிஜமாலுமே மோகனுக்கு அந்த நடு வீதியில்தான் செய்தி தெரியவருகிறது. என்ன காரணத்தாலோ மகாலட்சுமி சொல்லியிருக்கவில்லை. அவளும் கூட எட்டிப் பார்த்திருக்கவில்லை.

ஒரு பாதிரியாரிடம் ஒரு ஜமீந்தார் வந்து, "பாதிரியாரே! நான் தேவாலயம் போவதில்லை. ஏன் தெரியுமா? அங்கு வேஷதாரிகள் அதிகம் இருப்பதால்தான்" என்றார்.

"அதுக்காக நீங்க சர்ச்சுக்குப் போகாம இருக்க வேண்டாம்" என்றார் பாதிரியார். "அத்தனை பேர் போகும் போது இன்னும் ஒருத்தருக்கா இடமில்லாம போயிடும்!"

- ந.க.பரமசிவம்

---

மோகன்ராம் நடையில் இப்போது சற்று வேகம்.

வேட்டியில், ஸ்லீப்பர் செருப்பு போட ஆசைப்படும் மழைநீர்ப் புள்ளிகளை உத்தேசித்து வேட்டியை மடித்துக் கட்டிக் கொண்டு நடக்கிறான்.

கிழவி வீட்டு வாசலை நெருங்கியபோது கிழவியின் கண்களில் கரகரவென கண்ணீர்.

பார்க்கப் பரிதாபம் உளப்பெடுத்துக் கொள்ளும் உருவப்பாடு. மோகன்ராம் மனம் க்ஷணத்தில் உருகிக் கரைகிறது. நெருங்குகின்றவன் மந்தாகிழவியின் கைகளை இறுகப் பற்றிக் கொள்கிறான்.

"மந்தா நான் மோகன்ராம்..." என்கிறான். சப்தம் உள்ளே பானு காதிலும் விழ, அவள் விடைக்கிறாள். ஆனால் தாமு சற்றுத் தள்ளி பின்புறமாய்ப் போய் நின்று கொண்டு சிகரெட்டை பற்றவைத்துக் கொண்டிருந்தான். அவன் காதில் விழுந்திருக்க நியாயமில்லை.

பானுவுக்குப் பதைக்கிறது. 'நேற்றே அடிக்க வேண்டும் என்று அலைந்தானே - இப்போது பார்த்து விட்டால்?' கேள்வி வந்து கொத்தி பயம் அவளது அழகிய கண்ணை ஆட்சி செய்ய ஆரம்பிக்கிறது.

சமயோசிதமாக அவனை நெருங்கி திடும்மென்று ஸ்னேகமாய் சிரிக்கிறாள். வெளிப்பேச்சு அவன் காதில் விழுந்து விடக்கூடாது என்கிற மாதிரி பலமாக எதைஎதையோ பேச ஆரம்பிக்கிறாள்.

"கவலைப்படாதே. பெரிய ஆஸ்பத்திரியில தான் இந்த மாதிரி கேஸை பார்ப்பாங்க. நான் கூட்டிக்கிட்டுப் போறேன். பத்து மணிக்கு வரேன் தயாரா இரு" என்று ஆறுதலின் எல்லையைத் தொட்டவன், சட்டென்று பானு நினைப்பு வந்தவனாக, "ஆமா எங்கே உன் பேத்தி?" என்று கேட்க, பதில் பட்டென்று வந்தது.

"மோகா... உள்ள அந்த தாமுவோட சிரிச்சு சிரிச்சுப் பேசிக்கிட்டிருக்கா. காதுல விழலை?" - பக்கத்திலிருந்தவள் கேட்ட பிறகுதான் அந்த சிரிப்பும் பேச்சும் கூட காதில் விழுந்தது. சட்டென்று முகம் ஒருமாதிரி ஆகியது. இனி அங்கு நிற்கவே கூடாது என்கிற மாதிரி ஒரு அபிப்பிராயம் வினாடியில் உருவாகி விட்டது.

"சரி நான் வரேன்..." - கிளம்பி விட்டான்.

"**அ**ப்பாடா..." - உள்ளே பானுவிடம்



கூட பெருமூச்சு. தாமு நடுவில் ஒரு ஐந்நூறு ரூபாய்த் தாளை எடுத்து பானு எதிரே நீட்டு கிறான்.

"எதுக்கு?"

"பாட்டியோட வைத்திய செலவுக்கு..."

"வேண்டாம் - எங்கிட்ட இருக்கு."

"பொய் சொல்லாதே பானு. பிடி."

"இல்ல வேண்டாம். இத திருப்பிக் கொடுக்கற சக்தி கூட எனக்கு இப்ப கிடையாது."

"உன்னை யார் கேட்டா?"

"கேக்காட்டியும் கடன், கடன்தானே?"

"இது கடன் இல்லை. அட்வான்ஸ்னு நினைச்சுக்கோ."

"அட்வான்ஸா?"

"ஆமா... நீ என் கூட சேர்ந்து தொழில் செஞ்சா நான் உனக்குச் சம்பளம் தரணுமில்லியா? அதுக்கு இது அட்வான்ஸ்."

"வேண்டாம் தாமு... உன் பேச்சே சரியில்லை..."

"என்ன பானு... என்னைப் பத்தி தெரிஞ்சு தானே சிரிச்சு பேசுனே. அப்ப சரியா இருந்தது - இப்ப இல்லையா?"

"தாமு நீ என் அண்ணன் மாதிரி - வேண்டாம். வெளிய போயிடு."

"அண்ணனை ஒரு தங்கச்சி இப்படித்தான் துரத்துவாளா?"

"சரி நீ இரு... நான் வரேன்" - அம்பாரமாய் அதற்குள் பெருகிவிட்ட வியர்வையோடு வெளியே நகரக் கிளம்பியவளை சட்டென்று தோளைப் பற்றி நிறுத்துகிறான். கடூரமாய் முறைக்கிறான்.

"ஒண்ணு மட்டும் ஞாபகத்துல வை. உன்னைக் கட்ட ஒரு பய வர மாட்டான். வெச்சுக்க வேணும்னா நான் நீன்னு வருவாங்க. உன்னை மாதிரி ஆக்சிடெண்ட் கிராஸ் கேசுங்களுக்கெல்லாம் என் மாதிரி ஆளுங்களும் - பம்பாயும்தான் கதி. நீயா வந்தா அது ஒரு மாதிரி - நான் வந்து இழுத்துக்கிட்டு போனா அது வேற மாதிரி. ஆனா ஒண்ணு. இந்த இரண்டுல ஒண்ணு உன் விஷயத்துல நடக்கத்தான் போகுது. அதை நீ பாக்கத்தான் போறே..."

- பேசின ஜோரில் அச்சு அசல் சினிமா வில்லனைப் போலவே பாதி புகைத்த சிகரெட்டை தரையில் போட்டுத் தேய்த்து விட்டுக் கிளம்புகிறான். வெளியே வந்து அழுதபடி இருக்கும் கிழவி மேல் ஒரு அலட்சியப் பார்வை வேறு!

உள்ளே நொறுங்க ஆரம்பித்திருந்தாள் பானு!

**ப**த்து மணி.

சொன்னது போல் வந்து விட்டான் மோகன்ராம்!

வரும்போதே குதிரை வண்டியையும் கூட்டிக் கொண்டு வந்து விட்டான்.

வந்தவன் நேராக பானு எதிரில் போய் நின்ற நொடியில் அவளிடம் திகைப்பு. சாந்துப் பொட்டும் கண்ணாடியுமாக நிற்பவன் அவளைப் பார்த்து விதிர்க்கிறான்.

இது என்ன இத்தனை நெருக்கத்தில்? நேர் எதிரில்...?

"வா... வாங்க..." வாய் குழற வரவேற்பு தருகிறாள்.

"நேத்து என் மருந்துச் செலவுக்குப் பணம் கொடுத்தியாமே?" - அவனிடம் சீவினாற் போல் கேள்வி.

"ஆ... ஆமா அதுக்கென்ன?"

"இந்தா பிடி" - அவள் நீட்டும் பணத்தைப் பார்க்கவும் அவனிடம் சடைப்பு.

"இதுக்கென்ன இப்போ அவசரம்?" - வாங்கியபடியே கேட்கிறான்.

"எனக்கு கடன் பிடிக்காது. பிடி." - அவளிடம் பேச்சோடு அவசரமும் துளி கோபமும் கூடத் தெரிகிறது. எதனால் என்று பானு வால் ஊகிக்க முடியவில்லை.

இதற்குள் சப்தம் கேட்டு புரண்டு படுக்கும் மந்தா எழுந்து அமர்ந்து கொள்கிறாள். அவள் கண்ணில் மருந்து வைத்துக் கட்டியிருப்பதை அப்பொழுதுதான் பார்க்கிறான் மோகன்ராம்.

"ஆமா யார் வந்து உனக்கு கட்டு போட்டது?" ஆச்சரியத்தோடு கேட்க, பட்டென்று பதில் மந்தாவிடம்.

"சொன்னா வருத்தப்பட மாட்டியே...?"

"எதுக்கு வருத்தப்படணும். நல்லதுதானே நடந்திருக்கு...?"

"நடந்தது நல்லதுதான்... ஆனா அத நடத்திக் கொடுத்தவனைத்தான் யாருக்குமே பிடிக்கறதில்லை."

"மந்தா புதிர் போடாம சொல். நான் வண்டிக்காரனை அனுப்பணும்."

"நீ அனுப்பிட்டு வா சொல்றேன்."

"இதோ பார்! நான் நின்னு பேசற நிலையில் இல்லை. தலைக்கு மேல எனக்கு வேலை. வானம் வேற மிரட்ற மாதிரி கருத்துக்கிடக்கு. ஒரு கெடமாவது இன்னிக்கு நெஞ்சாத்தான் அடுத்த வாரமாவது கதி அறுக்க முடியும். நீ சொல்றியா? இல்ல நான் கிளம்பட்டா?" அவன் கேள்விக்கு பதில் அந்த சரிந்த குச்சு வீட்டின் பின்புறம் இருந்து வந்தது.

"நான்தாண்டா...!" என்கிற அந்த பதிலோடு அங்கே சுசீலா!

(தொடரும்)

# “மக்களை செய்து



உத்தியோக ரீதியில் சினிமாக்காரராக இருந்தாலும் சினிமாத்தனம் துளியும் இல்லாத ஒரு நபர் உண்டென்றால் அவர் பி. லெனின். சுமார் இருபது வருடங்களுக்கு மேலாக, திரைப்பட எடிட்டிங்கில் குறிப்பிடத்தகுந்த பல உயரங்களைத் தொட்டுப் பார்த்து, தென்னக எடிட்டர்களுள் முதன்மையாக நிற்பவர். எடிட்டிங் தவிர ஷார்ட்-பிலிம் இயக்குநராக இருமுறை தேசிய விருது பெற்றவர். இன்றைய தமிழ் சினிமாவின் அவலப் போக்கு பற்றி மிகவும் கவலைப்படும் லெனின் ‘உலகத் தரத்தில் தமிழ்ப்படங்கள் உருவாவது ஒன்றும் அத்தனை கஷ்டமில்லை’ என்பதோடு, அதற்கான வழிகளையும் சொல்கிறார். திருவனந்தபுரம் திரைப்பட விழாவுக்குச் சென்று, அப்போதுதான்

**— எடிட்டர் பி. லெனின் பேட்டி**

# மூளைச்சலவை விட்டார்கள்!”

**திரும்பியிருந்தார் லெனின். சுமார் மூன்றரை மணி நேரத்துக்கும் மேலாக கல்கிக்கு அவர் அளித்த பிரத்தியேகப் பேட்டியிலிருந்து :**

> **“முதலில் முதல்வர் ஒருநடை தரமணி இன்ஸ்டிடியூட்டுக்குப் போய் வர வேண்டும். நாளுக்கு நாள் எத்தனையோ புதுப்புதுக் கருவிகள் வந்து கொண்டே இருக்கின்றன. ஆனால் திரைப்படக்கல்லூரியில் பயில்பவர்களுக்கு அவற்றின் அறிமுகம் கூடக் கிடையாது.”**

**“தமிழ்த் திரையுலகமே இந்த வருடத் திரைப்பட விழாவைப் புறக்கணித்திருந்தது. நீங்கள் மட்டும் விழா தொடக்கத்திலிருந்து முடிவு வரை இருந்து, படங்களைப் பார்த்துவிட்டு வந்திருக்கிறீர்கள். இது பற்றி யாரும் உங்களிடம் சண்டை போட வில்லையா?”**

“நிறையப் பேர் கேட்டார்கள். இன்னமும் நேரில் பார்க்கும் போதும் தொலைபேசியிலும் ‘நீங்கள் ஏன் போனீர்கள்?’ என்று மாற்றி மாற்றிக் கேட்டுக் கொண்டு தானிருக்கிறார்கள். எல்லோருக்கும் என் பதில் இதுதான். நான் சினிமாவைக் காதலிக்கிறேன். என்னால் எக்காரணம் கொண்டும் எந்தவிதத்திலும் அதைப் புறக்ணிக்க முடியாது. நல்ல படங்களைத் தேடித் தேடிப் பார்ப்பதிலேயே என் வாழ்க்கை கழிந்து கொண்டிருக்கிறது. அப்படி இருக்கையில் ஒட்டு மொத்தமாக உலக நாடுகள் பலவற்றிலிருந்து நல்ல படங்களைத் தேடித் தொகுத்து நம் ஊரில் ஒரு திரைப் பட விழா நடக்கிற தென்றால் அதற்கு எப்படி நான் போகாமலிருப்பது? எப்படிப்பட்ட அரிய வாய்ப்பு அது! குழு மனப்பான்மையுடன் இந்த நல்ல வாய்ப்பைப் புறக்கணிப்பது எனக்குச் சரியாகப் படவில்லை. இந்தியத் திரையுலகமே ஒட்டுமொத்தமாக இந்த விழாவைப் புறக்கணித்து, விழாவே நடக்காமல் போயிருந்தால் சரி. இவர்கள் செய்தது புறக்கணிப்பே இல்லை. திரைப்பட விழா இயக்குநர் மாலதி ஸஹாய் சொன்னதுபோல யாரும் விழாவைப் புறக்கணிக்கவில்லை; சிலர் கலந்து கொள்



**"மோசமான படங்களை எடுப்பது சுலபம். அத்தகைய படங்களுள் ஒன்றிரண்டு வெற்றியும் பெற்றுவிடுகிற போது, நல்ல படங்களை எடுக்க வேண்டும் என்கிற கனவோடு வருகிறவர்கள் கூட இந்த மாயையில் விழுந்து விடுகிறார்கள். காமராஜர் சொன்னதுபோல ஒரே குட்டையில் ஊறிய மட்டைகளாகி விடுகிறார்கள்."**



னாமல் இருந்தார்கள், அவ்வளவுதான்!"

**"இந்த வருடம் கலந்து கொள்ளவில்லை, சரி. ஆனால் எல்லா வருட விழாக்களுக்கும் தமிழ்ப்படத் துறையினர் போகாமல் இருப்பதில்லை. எத்தனையோ நல்ல படங்களைப் பார்க்கத்தான் செய்கிறார்கள். அப்படியும் 'நாமும் இது போல் தரமான படங்களைத் தரவேண்டும்' என்கிற எண்ணம் ஏன் பெரும்பாலானோருக்கு இங்கே வருவதில்லை?"**

"அதுதான் சோகமான விஷயம். மோசமான படங்களை எடுப்பது சுலபம். அத்தகைய படங்களுள் ஒன்றிரண்டு வெற்றியும் பெற்றுவிடுகிற போது, நல்ல படங்களை எடுக்க வேண்டும் என்கிற கனவோடு வருகிறவர்கள் கூட இந்த மாயையில் விழுந்து விடுகிறார்கள். காமராஜர் சொன்னதுபோல ஒரே குட்டையில் ஊறிய மட்டைகளாகி விடுகிறார்கள். என்னுடைய நம்பிக்கையெல்லாம் ஃபிலிம் இன்ஸ்டிடியூட் மாணவர்கள் மேல்தான். அதுவும் இப்போது இன்ஸ்டிடியூட்டுக்கு வருகிற மாணவர்களெல்லாம் உண்மையிலேயே நல்ல சினிமா தாகம் உள்ளவர்களாக இருப்பது சந்தோஷமாக இருக்கிறது."

**"ஆனால், நீங்கள் குறிப்பிடுகிற மாதிரி 'நல்ல படங்களை' இதுவரை எந்த ஒரு இன்ஸ்டிடியூட் மாணவரும் எடுத்ததாகத் தெரியவில்லையே? வியாபாரரீதியில் பலர் வெற்றி பெற்றிருக்கிறார்கள் தாம். ஆனால், வியாபார வெற்றி என்பது வேறு; நல்ல படம் என்பது வேறு அல்லவா?"**

"ஒப்புக் கொள்கிறேன். ஆனால், யோசித்துப் பாருங்கள். அரசும் சரி, சினிமாத்துறையும் சரி. திரைப்படக் கல்லூரி மாணவர்களின் எதிர்காலத்துக்கு எந்த ஒரு உத்திரவாதமும் தருவதில்லை. ஒரு கலைக்கல்லூரியில் பி.காம். படிப்பவரோ, பொறியியல், மருத்துவம் இப்படி தொழிற்கல்வி பயில்பவரோ– தங்கள் எதிர்காலத்துக்கு நிச்சயமான ஒரு பாதை கிடைக்கப் பெற்று விடுகிறார்கள். ஆனால் திரைப்படக் கல்லூரியில் படிப்பவர்களின் கதி? மூன்று வருடம் கோர்ஸ் முடித்து விட்டபின் அரசாங்கமே அவர்களுக்கு 'நீங்கள் ஓர் இயக்குநர், அல்லது ஒளிப்பதிவாளர் அல்லது எடிட்டர்' என்று சான்றிதழ் வழங்குகிறது. அந்தச் சான்றிதழை வைத்துக் கொண்டு இவர்கள் இயக்குநராகவோ, ஒளிப்பதிவாளராகவோ ஆகிவிட முடிகிறதா? யார் வாய்ப்புத் தருகிறார்கள்? யாராவது ஃபீல்டில் உள்ள இயக்குநரிடம் உதவியாளராகச் சேர்ந்து மறுபடி கிளாப் அடிப்பதிலிருந்து தொடங்க வேண்டி இருக்கிறது. வெறுத்துப் போய்விட மாட்டார்களா இளைஞர்கள்? மூன்று வருடமோ, ஐந்து வருடமோ யாராவது ஒரு மசாலாப்பட இயக்குநரிடம் உதவியாளராக இருந்து, அவரையே பயில வேண்டி வந்த பின் எப்படி 'நல்ல' படம் எடுக்க முடியும்? அல்லது நல்ல படம் எடுக்க விடத்தான் செய்வார்களா? பாட்டும் கூத்தும் சண்டைக் காட்சிகளுமாகத் தான் எடுக்க நேரும். பிழைப்பு என்பது முதல் பிரச்னை ஆகி விட்ட பின்னால் சினிமாவைக் கலையாக அணுகுவதெல்லாம் சாத்தியமில்லாமல் போய் விடுகிறது. இந்த துரதிர்ஷ்டம் நம் நாட்டில் மட்டும்தான் இருக்கிறது."

**"நீங்கள் சொல்வதைப் பார்த்தால் இதற்கு ஒரு முடிவே இல்லை போலத் தோன்றுகிறதே?"**

"முடிவு நிச்சயம் இருக்கிறது. அரசு மனம் வைக்க வேண்டும். திரைத் துறையோடு நீண்ட காலத் தொடர்பு கொண்ட முதல்வர் கலைஞர், திரைப்படக் கல்லூரி மாணவர்களின் நலனுக்காகக் கொஞ்சம் சிரத்தை காண்பித்தால் போதும். வெளிச்சம் பிறந்து விடும்."

**"என்ன செய்ய வேண்டும் என்கிறீர்கள்?"**

"முதலில் அவர் (முதல்வர்) ஒருநடை தரமணி இன்ஸ்டிடியூட்டுக்குப் போய் வர வேண்டும். நாளுக்கு நான் எத்தனையோ புதுப்புதுக் கருவிகள் வந்து கொண்டே இருக்கின்றன. ஆனால் திரைப்படக்கல்லூரியில் பயில்பவர்களுக்கு அவற்றின் அறிமுகம் கூடக் கிடையாது. அடிப்படைத் தேவைகளான ஒரு ஸ்டீம் பேக் மூவியாலா, Avid Editing System கூடக் கிடையாது! வெறும் தியரி படித்து விட்டுக் குப்பை கொட்ட முடியுமா?"

**"விஷயம் சற்று விலகிப் போகிறது. நல்ல படங்கள்**

**எடுக்க அரசு எப்படி உதவ முடியும் என்கிறீர்கள்?"**

"சொல்கிறேன். ஏற்கெனவே பலமுறை இதை நான் சொல்லியும் ஒரு பயனும் இல்லை. மறுபடியும் சொல்கிறேன். இன்றைக்கு, கோடிக்கணக்கில் செலவு செய்து படங்கள் எடுக்கிறார்கள். ஆனால் ஒரு திரைப்படம் - அதனளவில் முழுமையானதாகவும் அழகாகவும் அமைய அதிகபட்சம் பதினைந்து அல்லது பதினாறு லட்சங்கள் போதும். ரிச்னஸ் என்பது, கொட்டும் பணத்தில் இல்லை. நாம் எடுக்கும் விதத்தில்தான் இருக்கிறது. இந்தப் பதினைந்து, பதினாறு லட்சத்தில் 'ரிச்'சாக, நல்ல படங்கள் எடுக்க முடியும். பாலுமகேந்திராவின் சந்தியாராகம், வீடு, சமீபத்தில் வெளிவந்திருக்கும் மலையாளப் படம் 'தேஷாடனம்' இதெல்லாம் உதாரணம்.

"திரைப்படக் கல்லூரி மாணவர்கள், வருடத்திற்கு மூன்று ப்ராஜெக்ட் பிலிம் எடுக்கிறார்கள். அது, அவர்கள் கோர்ஸ் முடித்த தன் அடையாளம். அதை வைத்துக் கொண்டுதான் அவர்கள் பின்னால் வாய்ப்புத் தேட வேண்டும். அந்த ப்ராஜெக்ட் படங்கள் எடுக்க அவர்களேதான் செலவு செய்கிறார்கள். அரசாங்கம் ஏன் வருடம் தோறும் மூன்று பேருக்கு தலா பதினைந்து லட்சம் தரக்கூடாது என்று கேட்கிறேன்? காசைக் கொடுத்து; 'மசாலாவெல்லாம் வேண்டாம்; தரமான படங்களாக எடுங்கள்' என்று உத்தரவிட்டால் சந்தோஷமாகச் செய்ய மாட்டார்களா?"

**"அது சரி. இதற்கு எந்த அடிப்படையில் நிதி ஒதுக்குவது என்பது ஒருபுறம் இருக்க, வீடு, சந்தியாராகம் போன்ற படங்கள் போல கலைப்படமாக எடுத்தால் வியாபாரரீதியில் தோல்வி வைத்தானே சந்திக்க வேண்டி வருகிறது?"**

"உங்கள் இரண்டு வாதமும் தவறு. முதல் விஷயம் நிதி. இதற்காகப் புதிதாக ஏதும் அரசு ஒதுக்க வேண்டாம். ஏற்கெனவே அதற்கொரு வழி இருக்கிறது. வருஷா வருஷம் எழுபத்தைந்து படங்களுக்கு அரசு மானியம் தருகிறதல்லவா - தலா ஐந்து லட்சம்? அது அநாவசியம். மோசமான, ஓடாத கமர்ஷியல் படங்கள் பலவற்றுக்கே அந்த நிதி போய்ச் சேருகிறது. அதைக்கூட நாம் ஆட்சேபிக்க வேண்டாம். எல்லா வருஷமும் எழுபத்தைந்து படங்கள் இந்த மானியத்துக்குத் தேர்வாவதில்லை. அதிகபட்சம் நாற்பது, நாற்பத்தைந்து படங்கள்தாம். அது போக மீதி? முப்பது லட்சத்துக்கு மேல் ஒதுக்கிய நிதி மீதமாகிறதல்லவா? அதைப் பிரித்துக் கொடுக்கலாமே? ஒரு வேடிக்கை தெரியுமா? நம் அரசு, மானியம் பெறத் தகுதியான படங்களை எந்த அடிப்படையில் தேர்ந்தெடுக்கிறது என்று நினைக்கிறீர்கள்? நல்ல, தரமான படங்கள் என்ற அடிப்படையிலா? இல்லவே இல்லை! ஆறு முதல் இருபது பிரிண்ட்கள் வரை மட்டுமே போடப்பட்டிருந்தால் அந்தப் படம் மானியம் பெறத் தகுதி பெற்று விடுகிறது! இது எத்தனை வேதனை தரும் வேடிக்கை பாருங்கள்! அரசே இப்படி ஒரு அளவுகோல் வைத்துக் கொண்டிருந்தால், எப்படி நல்ல படங்கள் எடுப்பார்கள்?"

**"நீங்கள் சொல்கிறபடியே பார்ப்போம். அரசு தலா பதினைந்து லட்சம் கொடுத்து, இன்ஸ்டிடியூட் மாணவர்கள் கலைப்படம் எடுத்தால், யார் வெளியிடுவது? எந்த தியேட்டர் அதை வாங்க முன்வரும்?"**

"ஏ.ஸி. தியேட்டர் கலாசாரம் என்பது இப்போது வந்ததுதானே? நம் மக்கள் டூரிங் டாக்கீஸில்தானே நேற்று வரை படம் பார்த்துக் கொண்டிருந்தார்கள்? ஒவ்வொரு மாவட்டத் தலைநகரிலும் 200-300 பேர் மட்டும் அமர்ந்து பார்க்கும் விதமான குட்டித் தியேட்டர்களை அரசு கட்டலாம். இதற்கு அதிகம் செலவாகாது. அரசுப் பணத்தில் தயாராகும் அத்தகைய நல்ல படங்களை அங்கே திரையிட்டு, வருமானத்தையும் அரசே எடுத்துக் கொள்ளலாம். நல்ல படங்களுக்கு மக்கள் கூட்டம் வருமா என்று கேட்காதீர்கள். கேரள, வங்காள ரசிகர்களைக் காட்டிலும் எந்தவகையிலும் நம் ரசிகர்கள் தரத்தில் சளைத்தவர்களில்லை. மசாலாக்களைக் கொடுத்துக் கொடுத்தே அவர்களை மூளைச்சலவை செய்து வைத்திருக்கிறார்கள் நம்மவர்கள். மனம் வைத்தால் அதிலிருந்து மீளுவது கஷ்டமில்லை."

**"டூரிங் தியேட்டர், அரசு தியேட்டர் என்றெல்லாம் கேட்க நன்றாக இருக்கிறது. ஆனால் நடைமுறையில் இதெல்லாம் எத்தனை தூரம் சாத்தியம் என்று நினைக்கிறீர்கள்?"**

"சாத்தியமானதுதான். மனம் வைக்க வேண்டும். அவ்வளவு தான். சில வருடங்கள் முன்பு, டென்மார்க்கில் நடந்த ஒரு திரைப்பட விழாவில் என் 'நாக்-அவுட்' குறும் படத்தைத் திரையிடத் தேர்வு செய்திருந்தார்கள். அதற்காக நான் போயிருந்தேன். அங்கேயெல்லாம் இதுமாதிரி



**"நம் அரசு, மானியம் பெறத் தகுதியான படங்களை எந்த அடிப்படையில் தேர்ந்தெடுக்கிறது என்று நினைக்கிறீர்கள்? நல்ல, தரமான படங்கள் என்ற அடிப்படையிலா? இல்லவே இல்லை!"**

குட்டித் தியேட்டர்கள் தாம். ஒரு பார், ஒரு ரெஸ்டாரன்ட், ஒரு தியேட்டர் இணைந்த சின்னச் சின்ன கூடாரங்கள். இரு நூறு பேர் உட்கார்ந்து படம் பார்க்கலாம். ஒரே பணியாளர் தான். அவரே டீ ஆற்றித் தருவார். டிக்கெட் கிழித்துத் தருவார். புரொஜக்டரையும் அவரே இயக்குவார். நான் போயிருந்த சமயம் அப்படியொரு பணியாளரிடம் பேச்சுக் கொடுத்தேன். என் படம் அங்கு திரையிடப்படுகிறது என்பது தெரிந்ததும் 'நீங்கள் டிக்கெட் வாங்க வேண்டாம். போய் உட்காருங்கள்' என்று சொல்லி விட்டார். நான் அவருடனேயே புரொஜெக்டர் அறையிலேயே அமர்ந்தேன். அப்போது அவர் சொன்ன ஒரு தகவல் எனக்குத் தூக்கிவாரிப் போட்டது. 'இந்த விழாவில் என் ஷார்ட் பிலிம் ஒன்றும் திரையிடப்படுகிறது. நீங்கள் பார்க்க முடிந்தால் மகிழ்வேன்!' - சினிமாக்காரன் என்றால் வானத்திலிருந்து குதித்தவன் அல்ல என்பதை எனக்கு நிரூபித்த சம்பவம் அது!"

**"நீங்கள் நாக்-அவுட், குற்றவாளி என்று இரண்டு ஷார்ட்-பிலிம்கள் எடுத்திருக்கிறீர்கள். பொதுவாக இங்கே ஷார்ட்-பிலிம்கள் என்றாலே பலருக்கும் ஏதும் தெரியவில்லையே?"**

"அது உண்மைதான். மக்களை விடுங்கள். சினிமாத் துறையினரில் பலருக்கே இது பற்றி ஏதும் தெரியாது. 'நீங்கள் ஏதோ ஷார்ட்-பிலிம் எடுத்தீர்களாமே, விருதெல்லாம் கொடுத்தார்களே - ஷார்ட் பிலிம் என்றால் என்ன?' என்று பலர் என்னிடம் கேட்டிருக்கிறார்கள். வங்காளத்தில் நிறைய ஷார்ட் பிலிம்கள் எடுக்கிறார்கள். ஒரு முழு திரைப்படம் ஏற்படுத்தும் தாக்கத்தை விட பத்து, பதினைந்து நிமிடங்களுக்கு மிகாத இந்தக் குறும்படங்கள் அதிக தாக்கம் தரும். என் 'நாக்-அவுட்' வெளியாகி, தமிழ் நாடெங்கும் திரையிடப்பட்டபோது, மக்கள் மத்தியில் அதற்கு நல்ல வரவேற்பு இருந்தது. 'ஏ' சென்டர் என்று சொல்லப்படும் நகரத்து மக்களை விட, B & C எனப்படும் புறநகர், கிராமத்து மக்கள் அதை மிக விரும்பி ரசித்தார்கள். பாசாங்கில்லாத கிராமத்து மக்கள் அந்தப் படம் பற்றி என்னிடம் மனமாறப் பாராட்டியபோது, நம் மக்களின் தரம் சற்றும் தாழவில்லை என்பதை எனக்கு மீண்டும் மீண்டும் உணர்த்தியது. தொடர்ந்து அடுத்த ஷார்ட் பிலிம் 'குற்றவாளி' எடுக்கிற துணிச்சலையும் அந்தப் பாராட்டே எனக்குத் தந்தது."

**"நீங்கள், பொதுமக்களிடமிருந்து ஆளுக்கு ஒரு ரூபாய் வசூலித்து ஒரு ஷார்ட் பிலிம் எடுக்கவிருப்பதாக இருந்ததே, அந்தத் திட்டம் என்ன ஆயிற்று?"**

"நிச்சயமாக எடுக்கப் போகிறேன். இதுவரை சுமார் பதினைந்தாயிரம் ரூபாய் வசூலாகி இருக்கிறது. 'கட்-அவுட்' என்பது அந்தப் படத்தின் டைட்டில். இது தவிர, நம் ஊரில் மூலைக்கு மூலை நிற்கிற சிலைகளெல்லாம் ஒரு நாள் திடீரென்று காணாமல் போய் விட்டால் என்ன ஆகும் என்பதை வைத்து ஒரு குறும் படத்துக்கான ஸ்கிரிப்ட் தயார் செய்து வருகிறேன். இரண்டும் விரைவில் வரும்."

**"பொதுமக்களிடம் நிதி கேட்டுப் போகிறதென்றால் எப்படி? எங்கெங்கே வசூலித்தீர்கள்?"**

"பஸ் ஸ்டாண்ட், ரயில் நிலையம், மார்க்கெட் இந்த மாதிரி பொது இடங்களில் போய்க் கேட்டேன். என் நோக்கத்தை எளிமையாகச் சொன்னதும் சந்தோஷமாக உதவி செய்தார்கள். திருவண்ணாமலையில் ஒரு பழக்கடைக்காரர் நிதி கொடுத்ததோடு கூட, "நீங்க நல்லா செய்வீங்கன்னு தெரியும் சார். பிரமாதமா வரும் படம்" என்று வாழ்த்தவும் செய்தது இன்னும் என் கண்களில் நிற்கிறது."

**"ஓர் எடிட்டராக, குறும்பட இயக்குநராக உங்களால் சாதிக்க முடிந்த அளவுக்குத் திரைப்பட இயக்குநராக ஜெயிக்க முடியாமல் போய் விட்டது பற்றி வருத்தம் உண்டா?"**

"ஒரு வருத்தமும் கிடையாது. சொல்லப் போனால் வியாபார சினிமாவில் நான் மூழ்கி விடாதது பற்றி சந்தோஷம்தான். நதியைத் தேடி வந்த கடல், பண்ணைப்புரத்துப் பாண்டவர்கள், சொல்லத் துடிக்குது மனசு - இந்த மூன்று படங்கள் நான் இயக்கி, வெளிவந்து, தோற்றவை. 'எத்தனை கோணம், எத்தனை பார்வை' என்கிற படம் ஜெயகாந்தனின் கதையைத் திரைப் படமாக்கிய முயற்சி. அந்தப் படம் இன்னும் வெளிவரவே யில்லை. காரணம், தயாரிப்



**"உங்க மானேஜரை ஏன் சஸ்பெண்ட் பண்ணினாங்க?"**

**"லஞ்சத்துக்கு ஏற்ற உபசரிப்பு; அதுவே எங்கள் தனிச் சிறப்புன்னு அவர் டேபிள்ல எழுதி வச்சிருந்தாராம்!"**

**— எஸ். முகம்மது யூசுப்**

பாளருக்கே வெளிச்சம். வெளி வந்த என் மூன்று படங்களின் தோல்விக்கு நான் யாரையும் குற்றம்சாட்ட விரும்பவில்லை. பலரது கருத்துக்களுக்கு இடம் கொடுத்து, படங்கள் நீர்த்துப் போனதென்றாலும் என் சம்மதத்தோடேயே அவை நடந்தன என்பதால் தவறு என்னுடையது தான்."

**"இயக்குநராக ஜெயிக்க முடியாததால்தான் நீங்கள் எடிட்டரானீர்களா?"**

"அதெல்லாமில்லை. பத்தொன்பது வயதில் சினிமாவுக்கு வந்தேன். என் தந்தை, இயக்குநர் பீம்சிங் கொடிகட்டிப் பறந்தவர். ஆனாலும் அவர் மூலம் நான் வரவில்லை. செட் அஸிஸ்டெண்ட்டாக, உதவி இயக்குநராக, உதவி எடிட்டராக இன்னும் சினிமாவின் பல்வேறு துறைகளில் அடிபட்டுக் கற்றுக் கொண்டேன். என் சுயவிருப்பம், ஆத்ம திருப்திப்படி இயங்க, பிறர் குறுக்கீடு இல்லாத டிப்பார்ட்மென்ட்டில் உட்கார விரும்பினேன். எடிட்டிங், சரியான தேர்வாக அமைந்தது. சந்தோஷமாகச் செய்து கொண்டிருக்கிறேன்."

**"நீங்கள் வன்மையாகச் சாடுகிற மசாலாப் படங்களைத் தானே எடிட் செய்ய வேண்டி வருகிறது? அது பற்றி உறுத்தல் இல்லையா?"**

"என் தனி விருப்பம் என்பது வேறு; தொழில் வேறு. அப்படியும் எனக்கு உவப்பாக இல்லாத படங்களை நான் எடிட் செய்வதில்லை. நிறைய மலையாளப் படங்களுக்கு நான் இப்போது செய்து கொண்டிருக்கிறேன். இருப்பினும் சில நண்பர்களின் வேண்டுகோளுக்காக அவற்றை மறுக்க முடியாத சூழ்நிலை உருவானால் தமிழ்ப் படங்களிலும் சில பகுதிகளை மட்டும் நான் தொகுத்துத் தருகிறேன். அடிப்படையில் நான் ஒரு ஹ்யூமனிஸ்ட். ஒரு மனிதனாக நான் பிறரைத் திருப்திப்படுத்த முடிவதால்தான் கலைஞனாகவும் ஜீவிக்க முடிகிறது."

**"நீங்கள் அணியும் மதச் சின்னங்களும் பேச்சில் அவ்வப்போது காட்டுகிற மேற்கோள்களும் உங்களை ஓர் ஆன்மீகவாதியாகக் காட்டுகின்றன. உங்கள் பெயருக்கும் இதற்கும் உள்ள முரண்பாடு பற்றி யோசித்ததுண்டா?"**

"ஆன்மீகவாதியென்றெல்லாம் சொல்லாதீர்கள். இறை நம்பிக்கை உண்டு. அதைத் தவிர வேறு ஏதும் முத்திரை வேண்டாம். வள்ளலாரில் எனக்கு ஆழ்ந்த ஈடுபாடு உண்டு. காரணம் அவரது உலகளாவிய பார்வை. 'வாடிய பயிரைக் கண்ட போதெல்லாம் வாடினேன்' என்பதில் பக்தி உணர்வா தெரிகிறது? ஒரு மிகப் பெரிய சுற்றுப்புறவியலாளராக வள்ளலார் காட்சி தரவில்லை? 'ஒத்தாரும் உயர்ந்தாரும் தாழ்ந்தாரும் எவரும் ஒன்றாய் உலகியல் நடத்த வேண்டும்' என்கிறார். இதைத்தானே பிறகு சோஷலிஸம் என்றார்கள்? என் பெயர் — அதற்கு நான் பொறுப்பில்லை. என் பெற்றோர் இட்டது அது."

"நம் ஊரில் மூலைக்கு மூலை நிற்கிற சிலைகளெல்லாம் ஒரு நாள் திடீரென்று காணாமல் போய் விட்டால் என்ன ஆகும்?"



**"தொழில் அடிப்படையில் நீங்கள் இங்கே நீடித்திருப்பதானாலும் உங்கள் எதிர்பார்ப்பு, சினிமா பற்றிய தீர்மானம் இவற்றுக்குத் தீனி போட இயலாத சூழ்நிலையில் என்றாவது கோடம்பாக்கத்திலிருந்து ஓடிவிடலாம் என்று தோன்றியதுண்டா?"**

"கிடையாது. எதிர்பார்ப்பு இருந்தால்தானே ஏமாற்றம்? எனக்கு இங்கே இப்போது இவ்வளவுதான் சாத்தியம் என்று தெரியும். என்னாலானது நல்ல சினிமா, நல்ல சினிமா என்று கத்திக் கொண்டிருப்பேன். என்றாவது யார் காதிலாவது விழாமலா போகும்? சொல்லப்போனால் எனக்குரிய அங்கீகாரம் கிடைக்கிறதா இல்லையா என்பது பற்றிக் கூடக் கவலைப்பட மாட்டேன். நாக்-அவுட் விருது வாங்கியதென்றால் அது கலைக்குக் கிடைத்த வெற்றி. எனக்குக் கிடைத்ததாகச் சொல்ல மாட்டேன். எத்தனையோ பெரிய கலைஞர்கள் உதித்த மண் இது. அவர்கள் முன் நானெல்லாம் ஒன்றுமே இல்லை என்றுதான் உண்மையிலேயே நினைக்கிறேன். இங்கு தாக்குப் பிடித்துக் கொண்டிருப்பது சினிமா மேல் எனக்குள்ள மாறாத காதலால்தான்."

**"ஒருவேளை உங்கள் இலக்குகளை இங்கே அடைய முடியாமல் போனால்?"**

"கவலையே பட மாட்டேன். என்னிடம் சொந்தமாக ஒரு கார், ஸ்கூட்டர் கூட இல்லையென்றாலும் எல்லா வாகன லைசென்ஸும் இருக்கிறது. ஒன்றும் இல்லாவிட்டால் லாரி ஓட்டிக் கூட வாழ்க்கையை சந்தோஷமாகக் கழிப்பேன். லாரி ஓட்டுவது கூட ஒரு கலைதானே?"

சந்திப்பு : **ஔரங்கசீப்**

படங்கள் : **ஸ்ரீஹரி**

'ராணி' பத்திரிகை ஆசிரியர் அ.மா. சாமி வித்தியாசமானவர். தான் ஆமா சாமி என்பதை வெளிப்படையாகச் சொல்லிக் கொள்வதில் பெருமைப் படுகிறார் அவர். (ஆதித்தனார் மாணவர் சாமி)!

'குரும்பூர் குப்புசாமி'யாகத் தொடர்கதை எழுதினாலும், நுணுக்கமான ஆராய்ச்சிக் கட்டுரை எழுதினாலும், 'எல்லோருக்கும் எளிதில் புரியும்படியாக, சுவையாக எழுத வேண்டும்' என்று ஆதித்தனார் பள்ளியில் பாடம் படித்த சாமி, படித்த பாடத்தில் நூற்றுக்கு நூறு வாங்கியிருப்பதை 'தமிழ்க்கிறிஸ்துவ இதழ்கள்' புத்தகம் புலப்படுத்துகிறது.




ஒன்றல்ல, நூறல்ல.... ஆயிரத்து அறுநூறு கிறிஸ்துவ இதழ்கள் பற்றிய விவரங்களைத் தேடிப்பிடித்துத் தொகுத்திருக்கும் சாமி ஒரு கிறிஸ்தவர் இல்லை என்பதில் யாராவது சின்னதாக ஆச்சரியப்பட்டால், இஸ்லாமியர் இல்லாத இவர் இதற்கு முன் இதே போல இஸ்லாமிய இதழ்கள் பற்றியும் இன்னொரு புத்தகம் வெளியிட்டிருக்கிறார் என்பதற்கும் சேர்த்து ஆச்சரியப்பட்டுக் கொள்ளலாம்.

எது கிறிஸ்தவ இதழ் என்பதற்கு, 'கிறிஸ்தவத்தைப் பற்றிய இதழாக இருக்க வேண்டும்.... அல்லது கிறிஸ்தவர் மட்டுமே படிக்கத் தகுந்த இதழாக இருக்க வேண்டும்' என்று விளக்கம் சொன்னாலும், அதை நெகிழ்த்தி, கிறிஸ்தவர்கள் நடத்திய வேறு இதழ்கள் பற்றியும் சொல்லிப் போகிறார் சாமி.' அதோடு நிறுத்தாமல், தமிழ்நாட்டில் கிறிஸ்தவ மதத்தின் வரலாற்றையும் விரிவாகத் தருவது இந்தப் புத்தகத்தின் சிறப்பு.

தெரிந்த செய்தியில் கூட தெரியாத அம்சம் எதையாவது சேர்த்துத் தருகிறார் சாமி. கூடன்பர்க் 1455-ல் வெளியிட்ட பைபிள்தான் உலகில் அச்சடிக்கப்பட்ட முதல் புத்தகம் என்பது எல்லோருக்கும் தெரியும். அது காகிதத்தில் அச்சாகவில்லை. தோலில் அச்சடிக்கப்பட்டது. 200 காப்பி தயார் செய்வதற்காக பத்தாயிரம் கன்றுக்குட்டிகளைக் கொல்ல வேண்டி வந்தது என்பது தெரியுமா?

புத்தகத்தில் கண்ட இன்னும் சில 'முதல்'கள் –

கடல் கடந்து கிறிஸ்தவம் பரவிய முதல் நாடு தமிழ்நாடு. இலத்தீன் மொழிக்கு அப்புறம் அச்சேறிய முதல் மொழி தமிழ். (1554-ல் போர்ச்சுக்கல்லில் 'கார்த்தியா' என்ற பெயரில் தமிழ், போர்ச்சுகீஸ் மொழிகளில் வெளியான இந்த நூலின் தமிழ்ப் பகுதியை எழுதித் தர தூத்துக்குடியைச் சேர்ந்த மூன்று மீனவத் தமிழர்கள் போர்ச்சுக்கல் போய் வந்தார்களாம்!). முதல் தமிழ்ப் பத்திரிகை 1812-ல் வெளியான 'மாசத் தினச் சரிதை'.

தமிழ் அல்லாத முதல் கிறிஸ்தவ இதழும் (ஆர்மீனிய மொழி) சென்னையிலிருந்துதான் வெளியானது - 1794-ல். (அதற்கு முன் ஆர்மீனிய நாட்டிலேயே பத்திரிகை கிடையாதாம்!).

இன்னும், இந்தியாவில் முதலில் வெளிவந்த குழந்தைகள் இதழ் பாலதீபிகை (1840) தமிழ்தான். இந்திரா காந்தியின் எமர்ஜென்சி காலத்தில் தடைசெய்யப்பட்ட முதல் பத்திரிகையும் கிறிஸ்தவத் தமிழ்ப் பத்திரிகையான 'சபதம்' தான்.

அ.மா. சாமி அடுக்கும் ஆயிரத்து அறுநூறு கிறிஸ்தவப் பத்திரிகைகளில், ஒரே ஒரு இதழ் மட்டும் வெளியாகிக் காணாமல் போனவையும் உண்டு; 1841-ல் தொடங்கி டபிள் செஞ்சுரியை நோக்கி நடைபோடும் 'உதய தாரகை'யும், தொண்ணூறு வயசான 'சர்வ வியாபி'யும் கூட உண்டு!

இதழ்களின் பெயர்களில் தான் எத்தனை வகை? 'இலவசம்' என்ற பெயரில் சும்மாவே விநியோகிக்கப்பட்டு அப்புறம் கொம்பு முளைத்தது - 'இரட்சண்யக் கொம்பு'.... பல பத்திரிகைகளின் பெயர்களில், 'இயேசு அழைக்கிறார்'... இயேசு – ஆசிர்வதிக்கிறார், இருக்கிறார், நேசிக்கிறார், வருகிறார், சந்திக்கிறார்,

## "நான் சொந்த வீடு கட்டிக் கொள்ள நிதி அனுப்புங்கள்!"

தருகிறார், தொடுகிறார், விசாரிக்கிறார், சுகமளிக்கிறார், மன்னிக்கிறார்.

இதழ் ஆசிரியர்களும் சுவாரசிய மானவர்களே... 'இலவசமாகக் கொடுத்தாலும் படிக்காமல் போடுகிறீர்களே' என்று அங்கலாய்ப்பவர்கள்... 'காசு கொடுத்தால்தான் புத்தகம்' என்று கண்டிஷனாகச் சொல்கிறவர்கள், 'நான் சொந்த வீடு கட்டிக் கொண்டு, உங்களுக்குத் தொடர்ந்து ஊழியம் செய்ய நிதி அனுப்புங்கள்' என்று கோரிக்கை விடுப்பவர்கள்... 'இந்தப் பத்திரிகையை முஸ்லீம்களுக்குக் கொடுக்க வேண்டாம்' என்று கண்டிப்பான வேண்டுகோள் விடுக்கும் 'கல்வாரியின் அழைப்பு' பத்திரிகை ஆசிரியர் **மைதீன்**... மரணப் படுக்கையில் இருந்த போதும் கூட புரூப் பார்த்து, அச்சடிக்கக் கையெழுத்துப் போட்ட பேலீசு அடிகளார் (1870 லேயே, bombshell என்பதற்கு தீக்குடுக்கை என்ற தமிழ்ச் சொல்லைப் பயன்படுத்தியவர் இவர்!)...

பெரும்பாலான இதழ்கள் கிறிஸ்தவச் செய்திகளை மட்டுமே தாங்கி வந்தாலும், 'சர்வவியாபி' இதழில் வடுவூர் துரைசாமி அய்யங்கார் 'மரகதம் அல்லது கருங்குன்றத்துக் கொலை' துப்பறியும் தொடர்கதை எழுதி இருக்கிறார்! காண்டேகர் நாவல் மொழிபெயர்த்து வெளியிட்ட 'நல்ல ஆயன்', இருமுறை இதழ் பொழுது போக்கு இதழாக மாறியதால் நிறுத்தப்பட்டது!

"இந்தப் பத்திரிகை 'ராணி' சைஸ்"... "இது தினத்தந்தியை இரண்டாக மடித்த அளவில் வெளி வந்தது" என்பது போல அங்கங்கே தட்டுப்படும் வரிகளில், தாம் பணிபுரியும் பத்திரிகைக் குடும்பத்தோடு இரண்டறக் கலந்த சாமி தென்படுகிறார்.

தமிழ் நூல்களைப் பதிப்பிக்க சுவடி தேடி அலைந்த 'தமிழ்த் தாத்தா' உ.வே.சா போல, இந்த அரிய நூலைப் பதிப்பிக்க 1600க்கும் மேற்பட்ட பத்திரிகைகளின் பிரதிகளைத் தேடித் தமிழகம் எங்கும் அலைந்த அ.மா. சாமியை, (இன்னும் வயதான பிறகு) 'கிறிஸ்தவத் தாத்தா' என்று அழைத்தால், 'கிறிஸ்துமஸ் தாத்தா' சாண்டாகிளாஸ் ஆட்சேபிக்க மாட்டார்!

*(தமிழ்க் கிறிஸ்தவ இதழ்கள் - ஓர் ஆய்வு/அ.மா. சாமி/நவமணி பதிப்பகம், 12, 2 வது பெருஞ்சாலை, நகர வளர்ச்சிக் குடியிருப்பு, சென்னை - 600 004/ரூ. 130/-)*

- இரா. முருகன்

## பார்வைக்கு வந்தவை

● *சிகரங்களைத் தொடுவோம்/டாக்டர் மா.பா. குருசாமி/வளர்தமிழ் பதிப்பகம், 44, ஆர்.ஓ.பி. மெயின் தெரு, சென்னை – 14/ரூ. 70*

தனிமனித வளர்ச்சி – உயர்வுக்கான வழிகளைச் சொல்லும் நூல். ஆசிரியரின் நடை மிக அழகாக உள்ளது.

● *சிலம்பு புதிய பார்வை/நலங்கிள்ளி/சேகர் பதிப்பகம், 66/1 பெரியார் தெரு, எம்ஜி.ஆர். நகர், சென்னை – 78/ரூ. 90.00*

சிலப்பதிகார ஆராய்ச்சிக் கட்டுரைகள். ஆய்வு மாணவர்களுக்கு உபயோகப்படும்.

● மனமும் தியானமும்/சுவாமிஜி இறையன்பன்/பிரியா நிலையம், 45, மூத்து முதலி தெரு, சென்னை – 14/ரூ. 65.00

மன அமைதி – செழுமைக்கு வழிகள் தேடும் நூல். கட்டுரைகளின் நீளம் சற்று குறைந்திருந்தால் இன்னும் சிறப்பாக இருந்திருக்கும்.

● சுதந்தர சோகங்கள்/பொன். செல்வகணபதி/பொன்னா பதிப்பகம், ஆர்.6/2 வைகை தெரு, பெசன்ட் நகர் விரிவு, சென்னை - 90/ரூ. 35.00

இவர்களுக்குக்
கோட்டையுண்டு
கொடியுமுண்டு
குதிரை மட்டுமில்லை
அதனால்தான்
ஜனங்கள் மேல்
சவாரி செய்கிறார்கள்

– வீரியமுள்ள புதுக்கவிதைகள்.

● மண்ணில் இருக்குது மோட்சம்/தே. சுவாமிநாதன்/ஜெயக்கொடி பதிப்பகம், 5, டவுனால் 5-வது தெரு, அரக்கோணம் - 1/ரூ. 30.00

திருக்குர்-ஆனைக் கவிதை நடையில் எளிமையாக விளக்கும் முயற்சி.

● வெண்மையில் எத்தனை நிறங்கள்/ரமணிசந்திரன்/அருணோதயம்/சென்னை - 4/ரூ. 45.00

விறுவிறுப்பான நாவல். பெண்களுக்குப் பிடிக்கும்.

● நிழல் சுடுவதுண்டு/சத்தியப்பிரியன்/இமயம் பதிப்பகம், 8, நீலா தெற்கு வீதி, நாகைப்பட்டினம் – 1/ரூ. 40.00

சில சிறுகதைகளும் குறுநாவல்களும் கலந்த தொகுப்பு. விறுவிறுப்பான நடை, ஆசிரியரின் சிறப்பு.

● பகவான் ஸ்ரீ ரமண மகரிஷி/ஜனகன்/கங்கை புத்தக நிலையம், சென்னை – 17/ரூ. 30.00

ரமணரின் வாழ்க்கை வரலாறு. நூலின் கட்டுக்கோப்பில் மேலும் கவனம் செலுத்தியிருந்தால் ரஸம் கூடியிருக்கும்.

# 39

# குறையொன்றுமில்லை

"லக்ஷ்மணா! உன் தந்தையை இழந்தாயடா!" என்று ராமன் ஏன் 'பிரித்துப்' பேசுகிறான்...?

ஆசார்யர்களும் மஹான்களும் இந்தப் பேச்சுக்குத் தரும் விளக்கத்தைப் பாருங்கள் :

ராமன் சொல்கிறானாம் – "லக்ஷ்மணா, உன்னையும் அப்பா சிருஷ்டி பண்ணினார். நானும் அவருக்குப் பிறந்தேன். என்னோடு கூட வனவாசம் வந்திருக்கும் நீ எல்லா கைங்கர்யங்களையும் பண்ணிக் கொடுக்கிறாய். எப்படிப் பண்ணிக் கொடுக்கிறாய்...? ஒரு தந்தை தன் தனயனுக்கு என்னென்ன வேண்டும் என்று பார்த்துப் பார்த்து செய்வாரோ... அதைப் போல செய்கிறாய். அதனால், நீ இருப்பதால், தந்தை இல்லாத குறையே எனக்குத் தெரியாது. இப்போது அப்பா மறைவினாலே உனக்குத்தானடா தந்தை இல்லாமல் போனார்..." என்று சொல்கிறானாம்.

எத்தனை உயர்ந்த வாக்கியம் அது! சகோதர வாத்ஸல்யமும் அதில் தெரிகிறது, தந்தையினிடத்தில் பகவான் கொண்ட அன்பும் தெரிகிறது.

"ஊரை விட்டு காட்டுக்குப் போனேன் என்கிற செய்தியைக் கேட்கத் தாங்காமலே பிராணனை விட்டாயே... நீ உயிர் நீத்தது தெரிந்த பின்னரும் நான் உயிரோடு இருக்கிறேனே! நீ என்னிடத்தில் வைத்த அன்பு எங்கே? நான் உன்னிடம் காட்டும் அன்பு எங்கே...!" என்று ராமபிரான் வருத்தப்படுகிறான்.

'புத்ரன் தன்னைவிட்டுப் போனான் என்றால், பதினாலு ஆண்டு காலம் சென்று திரும்பி வந்துவிடப் போகிறான். ஆனால் கொஞ்சம் கூடப் பிரிவாற்றாமை தாங்காமல் பிராணனை விடக்கூடிய தந்தை எத்தனை புத்ரர்களுக்கு உண்டு! எனக்குக் கிடைத்தது மாதிரி



தந்தை யாருக்குக் கிடைப்பார்!' என்று பேசுகிறான்.

அந்த ஒப்பற்ற தந்தைக்கும் நிகரானவன் லக்ஷ்மணன் என்று லக்ஷ்மணன் செய்த காரியத்தைக் கொண்டாடுகிறான்.

ராமனைப் பிரியாமல், கூடவே இருந்து விட்டதால் அபக்யாதியே ஏற்படலை லக்ஷ்மணனுக்கு. பரதன் அப்படி இல்லை. கொஞ்ச காலம் ராமனைப் பிரிந்து கேகய நாட்டுக்குப் போனான். அவன் மாமா யுதாஜித் என்பவர் வந்து, அவனை அழைத்துப் போனார். கொஞ்சம் பிரிந்த பரதனுக்குத் தீராப் பழி ஏற்பட்டு விட்டது. அந்த சிரமத்தை அனுபவித்தான் பரதன்.



இந்த விஷயத்தை நாம் கிரஹிக்கணும் - லக்ஷ்மணன் பிரியாமல் இருந்ததால் அபகீர்த்தி இல்லை; பரதன் சிறிது காலமே பிரிந்திருந்தாலும் தீராத பழி! அதனால் இளையபெருமாள் (லக்ஷ்மணன்) செய்த காரியம் இருக்கிறதே மிக உயர்ந்தது; எல்லோராலும் செய்ய முடியாதது. - சேஷத்துவம்.

அடுத்தது பாரதந்த்ரியம். அது இன்னமும் கஷ்டம்! இட்ட வழக்காய் இருத்தல் என்பது பாரதந்த்ரியம். அசித் - அசையாத பொருளாய், அசேதன - அறிவற்ற பொருள் போல இருக்க வேண்டும்!

ஒரு புஷ்ப மாலை இருக்கிறது என்று வைத்துக் கொள்வோம் - அதை அடியேன் எடுத்து இப்படி வைக்கிறேன். "நான் இங்கே இருக்க மாட்டேன். அங்கே போகிறேன்..." என்று அந்த புஷ்ப மாலை சொல்லுமா...? வைத்த இடத்திலேயே அல்லவா இருக்கும்!

வைத்தமாநிதி என்று ஒரு பெருமாளுக்குப் பெயர். திருக்குருகூரில் - ஆழ்வார்திருநகரியில் எழுந்தருளியிருக்கும் பெருமாள். ஏன் மாநிதி அவன்...? அவன் வைக்கப்பட்ட இடம் அது. அந்த இடத்தை விட்டுப் போவானோ அவன்? எப்போது போனாலும் அவனை சேவிக்கலாம். அந்த நிதியைப் பார்க்கலாம். 'என்றைக்கு வேண்டுமானாலும் வா என்னைப் பார்க்க' என்கிறான்.

'இட்ட வழக்காய் இருத்தல்' என்பதை சம்புராமாயணத்தில் போஜராஜா ரொம்ப அழகாய்ச் சொல்கிறார். ராமபிரான் பரதனுக்கு எடுத்துச் சொல்வதைச் சொல்கிறார் - "இங்கே உன்னாலும் என்னாலும் காப்பாற்றப்பட

முக்கூர் லக்ஷ்மிநரசிம்மாச்சார்யார்



## அருள்வாக்கு

பக்தி செலுத்துவதால் முக்தி கிடைத்து விடுமென்று சொன்னால் நாம் செலுத்தும் அந்த பக்தியே நேராக முக்தியைக் கொடுத்து விடுகிறது என்று அர்த்தமில்லை. நாம் செய்கிற எதுவுமே தானாக எந்தப் பலனையும் தருவதில்லை. பலன்களைத் தருகிற பலதாதாவாக ஈச்வரனே இருக்கிறான். அவன்தான் பாப புண்யம் பார்த்து எல்லாருக்கும் எல்லாப் பலனையும் கொடுக்கிறான். அவ்விதத்தில் நாம் பண்ணுகிற பக்திக்குப் பலனாக அவன் பரம க்ருபை செய்து, ஞானத்தைத் தந்து, அந்த ஞானத்துக்குப் பலனாக மோக்ஷாநுபூதியைக் கொடுக்கிறான். ஆக, பலன் தருவது நாம் பண்ணும் பக்தியே அல்ல; அதற்குப் ப்ரதியாக ஈச்வரன் செய்யும் க்ருபைதான் பலனைத் தருவது.

பக்தி நிஜமானதாக இருந்தால் பக்தி பண்ணுகிறவன் அதற்கு ப்ரதியே எதிர்பார்க்க மாட்டான். ப்ரதி ப்ரயோஜனம் எதிர்பார்த்து விட்டால் அது வியாபாரம் தானேயொழிய பக்தி இல்லை என்றே பாகவதாதி நூல்களில் சொல்லியிருக்கிறது. இப்படி பக்தன் (ப்ரதி வேண்டாமால்) இருந்தாலும் இவனிடமிருந்து நிஜமான பக்தியைப் பெற்றுக் கொண்ட பகவானுக்கு மனசு கேட்குமா? அதனால் அவன் க்ருபை பண்ணத்தான் பண்ணுவான். ஞானத்தை அநுக்ரஹிக்கத்தான் செய்வான். பக்தனை ஸம்ஸாரத்திலிருந்து விடுவித்து மோக்ஷத்தில் சேர்க்கத்தான் செய்வான்.

-ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய ஸ்வாமிகள்.

வேண்டியது தந்தையினுடைய வார்த்தை" என்று சொல்கிறார்.

பரதன் என்ன சொல்கிறான்...? 'ஊருக்குத் திரும்பி விடுங்கள்' என்கிறான். 'அப்பாவின் ஆக்ஞை. அதை மீறி வரமாட்டேன் என்கிறான் ராமன்.

"அப்பா சொன்னது இருக்கட்டும். நீதான் வந்து ராஜ்யப் பொறுப்பை ஏற்றுக் கொள்ள வேண்டும்... வந்து விடு!" என்று பரதன் அழைக்கிறான்.

அப்போது பரமாத்மா சொல்கிறான், பரதனுடைய வார்த்தையை விட தசரதனுடைய வார்த்தை முக்கியம் என்று.

"எனக்கு மட்டுமல்ல பரதா! உனக்கும் அந்த வார்த்தை – தந்தை சொன்ன வார்த்தை முக்கியம். என்னை அப்பா பதினான்கு வருடம் காட்டுக்குப் போகச் சொன்னார். உன்னைப் பதினான்கு வருடம் பரிபாலனம் பண்ணச் சொன்னார். அவர் இருந்து, 'ராமா, நீ போக வேண்டாம்; திரும்பி வந்துவிடு' என்றால் வரலாம். ஆனால் இப்போதைய நிலையில், பதினான்கு ஆண்டுகளுக்கு நீயும் எனக்கு ராஜ்யத்தைக் கொடுக்க முடியாது. நானும் அதை ஏற்க முடியாது." - இப்படி விசேஷமாக தர்மத்தை பரதனுக்கு எடுத்துச் சொன்னான் ராமன். இருக்கும் நிலையிலிருந்து மாறக் கூடாது என்கிற தர்மம்.

ராமாயணத்தில் தர்மத்தைக் குறித்து வரும் இந்த சர்க்கத்துக்கு ராமகீதா என்றே பெயர். எப்படி பகவத்கீதை சொல்லப்பட்டதோ, அந்த மாதிரி. "அப்பா பரதா! நீ கூப்பிட்டாய் என்று நான் வந்தால் அது தர்மமாகுமா? ராஜ்யத்தில் காமம் கொண்டு வந்தேனானால் நியாயமாகுமா? சிந்தனை பண்ணிப் பார்..." என்கிறார் பகவான்.

இந்த ராம கீதாவைத்தான் நாம் மறக்காமல் ஹ்ருதயத்தில் எழுதிக் கொள்ள வேண்டும். அதிலே அழகாகச் சொல்கிறார் :

"சமுத்திரத்தில் அலை அடித்துக் கொண்டேயிருக்கிறது. அந்த அலையில் ஒரு மரக் கட்டை, இந்த திக்கிலிருந்து அடித்துக் கொண்டு வரப்படுகிறது. இன்னொரு மரக் கட்டை மற்றொரு திக்கிலிருந்து வருகிறது. அந்த இரண்டும் அலைகளால் ஒன்று சேர்க்கப்பட்டு சமுத்திர ஜலத்தில் தத்தளித்துக் கொண்டிருக்கின்றன. ஒருநாள் பெரிய அலை ஒன்று வருகிறது... அது வீசினதுமே இந்தக் கட்டை அப்படிப் போய்விடுகிறது; அந்தக் கட்டை இன்னொருபுறம் போய்விடுகிறது! இது போன இடம் தெரியலை; அது போன இடமும் தெரியவில்லை. அந்த மாதிரிதான் மனைவியோ, மக்களோ, புத்ரர்களோ... வீடோ, பொருளோ...

'அப்படியானால் கணவன் – மனைவி என்கிற உறவுக்கு என்ன அர்த்தம்?' என்று கேள்வி வரும். இந்த சம்ஸாரம் என்கிற ஜலதியில் புண்யம், பாவம் என்கிற அலைகள் ஓயாமல் இருந்து கொண்டேயிருக்கும். அதிலே இரண்டு ஆத்மாக்கள், கணவன் – மனைவி

என்கிற உறவிலே அந்த வினைப் பயனை அனுபவிப்பதற்காக, அந்த கர்மாவை அனுபவிப்பதற்காக சேர்த்து வைக்கப்படுகிறது. ஒருநாள், காலம் என்கிற அலை, ம்ருத்யு – வந்து இரண்டையும் பிரிக்கிறது. யாருக்கு யார் மனைவி? யார் பர்த்தா?! யார் தந்தை? யார் பிள்ளை?... உத்தமமான அவனல்லவோ சர்வ லோகப் பிதா. அவனல்லவோ சர்வ லோக பர்த்தா! கர்மாதீனமாக ஏற்பட்டிருக்கிற இந்த விஷயத்தை நாம் சாஸ்வதமாக நினைக்கலாமா...? எனவே சஞ்சலப்படாதே. தர்மத்துக்கு நாம் தலைவணங்குவோம். நீ சொல்கிறபடி நான் வந்து விட்டால் தர்மத்தையெல்லாம் குலைத்தவனாகி விடுவேன்'' என்றான் பரமாத்மா.

ஜாபாலி என்றொரு மஹரிஷி. அவர் கோணலாக, அதர்மமாகப் பேசினார். என்ன பேசினார் என்றால், பூர்வ காலத்திலிருந்த ஒரு மதம் குறித்து. அதற்கு லோகாயதிக மதம் என்று பெயர் – சார்வாக மதம் என்றும் சொல்வார்கள்.

பேச்சு ரொம்ப நன்றாக இருக்கும் அந்த மதத்தில். அதன்படி பிரத்யக்ஷம் ஒன்றுதான் பிரமாணம்; கண்ணுக்குத் தெரியாததெல்லாம் பிரமாணம் கிடையாது.

வேதாந்த மதமோ இதற்கு நேர் எதிர். அதன்படி பிரத்யக்ஷமெல்லாம் அனுமானம் தான். சப்தம் எல்லாம் பிரமாணம். சப்தம் என்பது வேதம்.

ஆனால் சார்வாக மதத்தில் பிரத்யக்ஷம் ஒன்றே பிரமாணம். கண்டதே காட்சி; கொண்டதே கோலம் என்கிற ரீதியில் பேசினார்கள்.

'உயிர் இருக்கிற வரைக்கும் சௌக்கியமாய், சந்தோஷமாய் இருங்கள்' என்றார்கள். இதை யாராவது வேண்டாமென்பார்களா என்ன...?! சௌக்கியத்தைத்தானே எல்லோரும் விரும்புவார்கள்!

'சௌக்யமாய் இருக்க வேண்டுமானால் நன்றாகச் சாப்பிட வேண்டும். உபவாஸம் வேண்டாம். ஏன் அந்த சிரமமெல்லாம் பட வேண்டும்? யக்ஞம், யாகாதி கர்மங்கள் வேண்டாம். நன்றாக உடம்பை 'கொழுக் மொழுக்' கென்று தேற்றிக் கொள்ளுங்கள்...' என்றார்கள்.

'உடம்பைக் கொழுக் மொழுக்கென்று தேற்றிக் கொள்ள வேணுமானால் நன்றாகச் சாப்பிட வேண்டும். நிறைய நெய் சேர்த்துக் கொள்ள வேண்டும். நெய் வாங்கவோ பொருள் வேண்டுமே...' என்று விசாரம் வந்தது.

'கவலை வேண்டாம்! கடன் வாங்கு!' என்றார்கள்! 'கடனை வாங்கியாவது நெய்யைக் குடியுங்கள். தீர்த்தத்தைப் பருகுகிற மாதிரி நெய்யைப் பருகுங்கள். அதற்குத் தேவையான கடனை வாங்குங்கள்...' – இப்படியொரு வழிகாட்டல்!

எதை 'கூடாது' என்று சாஸ்திரம் சொல்கிறதோ, அதையே பண்ணச் சொல்கிறார்கள் இவர்கள். கடனே வாங்கக் கூடாது. கடன் வாங்குவது பரம பாவத்துக்கு வழிகோலும்; அடுத்த ஜன்மத்திலே விபரீதமான கஷ்டங்களெல்லாம் ஏற்படும் என்கிறது சாஸ்திரம்.

இவர்களோ கடனை வாங்கு; நெய்யைக் குடி என்கிறார்கள்! ஏன்...? எப்படியானாலும் சரீரம் பஸ்மமாகத்தானே போகிறது என்கிற எண்ணம்! சரீரத்துக்குள்ளே, சரீரத்தைக் காட்டிலும் உத்தமமான ஆத்ம வஸ்து இருப்பதையே அவர்கள் கவனிக்கவில்லை. ஏனெனில் பரோக்ஷம்! – கண்ணுக்குத் தெரியாததை கவனிக்காமல் இருக்கச் செய்கிறது. கண்ணுக்குத் தெரியாததைத்தான் கவனிக்கவில்லை.. வேதம் சொல்கிறதே அதையாவது கவனிக்கக் கூடாதா... அதையும் ஏற்கவில்லை.

ஆதிசங்கர பகவத்பாதாள் ஜாபாலியைப் பார்த்துக் கேட்டார் – இவ்வளவு தூரம் பேசுகிறாயே... சொர்க்கம்- நரகம் என்பதை உங்கள் மதம் ஏற்கவில்லையா?

அதிர்ச்சி தரும் பதில்தான் கிடைத்தது!

(தொடரும்)

''தலைவரை கிரிக்கெட் மாட்ச் பார்க்க கூட்டிட்டுப் போனது தப்பாப் போச்சு.''

''ஏன்?''

''இவ்வளவு இடம் இருக்கிறது இவ்வளவு நாளா தெரியாம போச்சே. உடனே வளைச்சுப் போட ஏற்பாடு பண்ணுங்க'னு சொல்லிட்டாரு!''

– பா. ஜெயக்குமார்



இருள் எத்தனை அழகாக இருக்கிறது? மாசே இல்லாத என்ன ஒரு பூரணத்துவம்? மென்மையும் வழவழப்பும் செல்லக் 'குரூரமுமாக அது மேலே கவிந்து கரைகிறபோது எப்படியெல்லாம் மனம் சிறகடிக்கிறது? உடலையே காணாமல் பண்ணிவிடுகிற ரசாயனம் மாதிரி என்ன ஒரு ஜாலம் இது?

எர்ணாகுளம் ஜங்ஷனிலிருந்து புறப்பட்டு, வேகம் கொண்ட ரயில் அந்த குகையில் நுழைந்தபோது கண்களை இறுக மூடிக் கொண்டாள் அவள். இருளின் பரிபூரண ஆசியை அப்படியே எடுத்து விழுங்கி விடுகிறவள் போல. ரயிலின் பேரிரைச்சலும் கவிந்த இருளின் அமானுஷ்யமும் அவளைக் கிரக்கத்தில் கொண்டுபோக, அப்போதுதான் அது நடந்தது.

ஒரே வினாடி. சரேலென்று கிட்டே நெருங்கி, உதட்டில் அழுத்தமும் அவசரமுமாக ஒற்றி விலகிய உருவம் அவளுக்குத் தெரியவில்லை. ராட்சஸன் மாதிரி, ரயிலையே விழுங்கி இருந்த இருள்.

நடந்தது இன்னதென்று உணருமுன், ரயில் குகையை விட்டு வெளியே வந்திருந்தது. சாயங்கால வெளிச்சம். ஜன்னலுக்கு வெளியே ஓட்டமெடுக்கும் ரப்பர் மரங்கள். காட்டுச் செடிகள். கருநீலப் பூக்கள். ரயிலின் சீரான தடக் தடக்.

அவளுக்கு மூச்சு எகிறி, இதயம் நகங்கி விடும் போலிருந்தது. காற்று தோற்றுப் போய், உடல் பிசு பிசுத்து நடுங்கத் தொடங்கியது. வெட்கமும் வேதனையும் படபடப்பும் இயலாமையும் நெருக்கித் தள்ள, சட்டென்று தலை கவிழ்ந்தாள். யார்? யாருடைய வெறியின் வெளிப்பாடு அது? நிமிர முடியவில்லை. தனக்கு முன் அமர்ந்திருந்தவர்களின் முகங்களை மனசுக்குள் கொண்டுவந்து பார்த்தாள்.

மூன்று பேர். மூவருக்கும் முப்பது வயதுக்கு மேல் இருக்க முடியாது. நிச்சயம் மலையாளிகளோ, தமிழர்களோ இல்லை. அந்த உயரமும் ஆகிருதியும் மீசையற்ற முகங்களில் தெரிந்த ரொட்டிச் செழுமையும் அவர்களை வடநாட்டவராகச் சொல்லின. லே, டில்லி. அல்லது அதற்கும் மேலே. சின்னக் கண்கள். தோசைத் துடுப்பு மாதிரி வழித்தெடுத்த முகவாய். சிவந்த கன்னங்களில் சவர வழுக்கல். மிலிட்டரியாக இருக்கலாம் என்று அவளுக்குத் தோன்றியது.

ராணுவ வீரர்கள். எல்லைகளில் எதிரியுடன் மோதிவிட்டு, குடியரசு தினத்தன்று கஞ்சி மொடமொடப்புடன் நெஞ்சில் மெடல் குத்திக் கொள்கிறவர்கள். விரைத்த சல்யூட்டும்



# மூவர்

**பா. ராகவன்**

வீறு கொண்ட தோள்களும். வாகான இருளில் தனியாக ஒரு பெண் கிடைத்தால் முத்தமிடக் கூடாது என்று ராணுவச் சட்டத்தில் ஏதும் கூறியிருக்க மாட்டார்களா?

அவளுக்கு அழுகையும் துக்கமும் பொங்கி வந்தன. என்ன ஒரு கையாலாகாத்தனம்? என்ன செய்ய வேண்டும், இப்போது? உரக்கக் கத்தி, கூச்சல் போட்டு, கற்பில் கால் சதவீதம் காணாமல் போய்விட்டதாக முறையிடுவதா? யாரிடம்? அல்லது எதிரே இருக்கிறவர்களைக் கழுத்தைப் பிடித்து இழுத்துப் போய் ஓடும் ரயிலிலிருந்து தள்ளி...

உதட்டைக் கடித்துக் கொண்டு அவள் நிமிர்ந்து பார்த்தாள்.

மூன்று பேர். எவ்வித சலனமும் இல்லாத முகங்கள். ஒருவருக்கொருவர் நண்பர்களாகத்தான் இருக்க வேண்டும். ஆனால், அவள் ஏறிய இடத்திலிருந்து அவர்கள் பேசிப் பார்க்கவில்லை.

சன்னல் ஓரம் உட்கார்ந்திருந்தவன், முகத்தைத் திருப்பவேயில்லை. அவன் பார்வை ஆகாயத்தில். மாலை வெயிலின் வெளிர் வெள்ளை ரேகைகள் அவன் கன்னங்களில் இறங்கிப் பளபளத்தன.

நடுவில் இருந்தவன் ஒரே தினசரியை இரண்டாவது முறையாகப் படித்துக் கொண்டிருந்தான். அடுத்தவன் அரை உறக்கத்தில்.

யார்? யார் அதைச் செய்தது? திட்டமிட்ட செயலா? திடீரென்று எழுந்த உணர்வா? அத்தனை துணிச்சலாக இயங்கிவிட்டு, ஒரு பதற்றம் இல்லாமல் இப்படி வானம் பார்த்துக் கொண்டு, பேப்பர் படித்துக் கொண்டு, தூங்கிக் கொண்டு இருக்க முடியுமா? பாசாங்குதானா? இத்தனை துல்லியமான பாசாங்கு சாத்தியமா என்று அவளுக்குச் சந்தேகம் வந்தது. ஒரு குறுகுறுப்பினால்கூட அவளைப் பிறிதொரு தரம் ஏறிட்டுப் பார்க்காதது அவளுக்கு வியப்பாக இருந்தது.

எத்தனை நெஞ்சுரம், தீர்மானம்! யார் அல்லது எது கொடுத்த துணிச்சல்? ஒரு வினாடி. அத்தனை நேரம்கூட இருக்காது. ஒரு சீறல். ஓர் அழுத்தம். சரேலென்று விலகல். வாசனைகூடத் தெரியவில்லை. அது கடந்துபோன காற்றின் பழிவாங்கல்.

ரயிலின் சீரான ஓட்டம் அவளுக்கு அலுப்பைத் தந்தது. ஒரே ஓட்டமாக ஓடி எதிலாவது மோதி, உடல் சின்னாபின்னமாகி விடவேணும் போல் இருந்தது.

எவனோ ஒருத்தன் முத்தம் கொடுத்து விட்டது அவளுக்கு இப்போது பெரிய விஷயமாகப்படவில்லை. அது யாரென்று தெரியாத தோல்விதான் பூதாகாரமாக இருந்தது. தோல்வியின் முகம் எப்போதுமே அழகானதாக இருப்பதில்லை. விரித்த சடையும் ரத்தம் தெரிக்கிற விழிகளும் ஏளனத்தில் விரிகிற உதடுகளின் ஓரங்களில் வழிகிற எச்சிலும் கூர்நகங்களின் பிடியில் சிக்கிச் சிதறுகிற பூவிதழ்களும்...

அதன் பிடிகளிலிருந்து தன்னை விடுவித்துக் கொள்ளப் பார்த்தாள் அவள். 'ஹெஹ்ஹெஹ்ஹே' என்று பிடியை மேலும் இறுக்கியது அது.

"விடு. விட்டுடு. நான் போயிடறேன். வேற கம்பார்ட்மெண்ட்டுக்கு."

அது சிரித்தது. தோளைப் பிடித்து இருக்கையில் அழுத்தியது. "எழுந்து போனால் தோற்றது உறுதி ஆயிடறது. பரவாயில்லையா?"

அவள் குமுறிக் கொண்டிருந்தாள். தோல்வி! அவமானம்? அதன் உருவம் இதுதானா? இப்படித்தான் பல்லைக் காட்டிக் கொண்டு கெக்கெக்கே என்று இளிக்குமா?

நகைப்பும் ஏளனமும் வெளிச்சத்துக்குத்தான் என்று அவளுக்குத் தோன்றியது. இருளுக்கு ஏது கேலிச் சிரிப்பும் கேடு கெட்ட குணங்களும்? சூரியன் உடைந்து தூளாகி, உலகம் முழுவதும் இருளைத் தழுவி விட வேண்டும் என்று நினைத்தாள்.

குகையை விட்டு ரயில் வெளி வராதிருந்தால் இத்தனை அவஸ்தை இருந்திருக்காது. குத்திக் கிளறும் துக்கமும் அவமானமும் பொங்கும் விழிகளிலிருந்து உதிரும்

## உள்ளே வரலாமா?

# எங்களுக்கு வேண்டாம் தங்க நகை!

❖ இருபத்தாறு வாரங்கள் உள்ளே வரத் தயங்கிய 'சுகி'யை தொடர் தொடங்கும்போதே மனதிற்குள்ளே இடம் பிடிக்க வைத்தது ஸ்யாமின் கை வண்ணம்.
சேலம், சக்தி அருளானந்தம்.

❖ 'உள்ளே வரலாமா?' தொடர் எங்கள் உள்ளங்களின், உள்ளே குடி புகுந்து கொண்டது. ஸ்ரீராம்-சுகன்யா பாத்திரப் படைப்பு மிக அருமை. கதையின் முடிவு மனத்தில் வசந்தத்தைப் பரப்பியது. கதாசிரியருக்கு மில்லியன் டாலர் பாராட்டுகள்!
ஆவணத்தாங்கோட்டை, ப. ராமகிருஷ்ணன்.

❖ தங்க நகைப் பரிசு எங்களுக்கா? வேண்டாங்க. கதை எழுதினவங்களுக்கும் ஸ்யாமுக்கும் குடுங்க. கதையை முடிக்கிறேன் பேர் வழின்னு எங்களுக்கும் ஸ்ரீராம் குடும்பத்துக்கும் இருந்த நெருக்கமான தொடர்பை வெட்டிட்டீங்களே. ஓ.கே. மிஸஸ்.சுகன்யா ஸ்ரீராமோட அட்ரஸ் கொடுக்க முடியுமா, ப்ளீஸ்?
திருவெண்ணெய்நல்லூர், பா. சித்ரா.

❖ வசந்தியின் பிரச்னை மிகவும் சாதாரணமானது. அதற்கு அவளை சைக்கியாட்ரிஸ்ட்டிடம் அழைத்து சென்றும், புதுமணத் தம்பதிகளை அவசர அவசரமாக தேனிலவுக்கு அனுப்பியும் சுகன்யா எடுக்கும் அதிரடி நடவடிக்கைகள் தேவைதானா? பெண்ணின் பெற்றோரிடத்தில் உண்மையைச் சொல்லி, அவர்கள்மூலம் பிரச்னையை தீர்ப்பதுதான் சிறந்த வழி!
தஞ்சாவூர், வெ. முருகானந்தம்.

❖ முதல் காதலையும், முதல் அபிப்பிராயத்தையும் மறக்க, மாற்ற முடியாது. சுகன்யாவின் முடிவு தெளிவானது. கதை முழுதும் அந்த கேரக்டரையே சுற்றி வந்தது சிறப்பு!
பொன்மலை, ஆர். பிரகாஷ்.

கடுநீரும் துடிக்கும் நரம்புகளும் பீறிட்டெழக் காத்திருக்கும் ஓலக் குரலும் இருளின் பாதுகாப்பான வருடலில் ஆறுதல் பெறக் கூடும் என்று நினைத்தாள்.

எல்லாம் நினைப்புத்தான். நிஜத்தின் கோர முகத்துக்கு முகமூடியே கிடையாது.

ரயிலின் வேகம் குறைந்தாற்போல இருந்தது. அவள் வெளியே பார்த்தாள். ஏதோ ஸ்டேஷன் வருகிறது. காப்பி, காப்பி என்று கத்திக்கொண்டு ஒரு கூட்டம் வரும். புதிதாக ஏறும் பயணிகளில் ஓரிருவர் அவளுக்கு அருகே காலியாக இருக்கும் இரண்டு இருக்கைகளை நிரப்பலாம். அப்போது படபடப்பு அடங்கிச் சற்றுப் பாதுகாப்பாக உணர முடியும்.

ஆனால் யாருக்கு யார் பாதுகாப்பு? எதற்குப் பாதுகாப்பு? வெற்றி வீரனாக, நினைத்ததைச் சாதித்து விட்ட பெருமிதத்துடன் எதிரே அவன் உட்கார்ந்திருக்கிறான். ஒரே ஆள்தான். மூன்று வடிவங்கள். மூன்றில் எந்த வடிவத்தில் அந்த வக்கிரம் ஒளிந்து கொண்டிருக்கிறது என்பதுதான் கேள்வி. கண்டு பிடிப்பதில்தான் சவால். ஆனால் கண்டு பிடித்து என்ன ஆகப் போகிறது? 'நீயே என்னைக் கட்டிக் கொள்' என்று மன்றாடுவதா? மறுபடியும் அந்த பூதம் கெக்கெக்கே என்று இளிக்க ஆரம்பித்தது.

மற்றொரு தோல்வியை அவள் அந்த ஸ்டேஷனில் சந்திக்க வேண்டி வந்தது. அவள் எதிர்பார்த்ததுபோல அவள் பக்கத்து இருக்கைகளுக்கு யாரும் வரவில்லை. எழுந்து, இறங்கிவிடலாமா என்று தீர்மானிப்பதற்குள் ரயில் கிளம்பி விட்டது.

பொங்கிய துக்கத்தை விழுங்க முடியாமல் பல்லைக் கடித்துக் கொண்டு வெற்றிடத்தை வெறித்துப் பார்த்துக் கொண்டிருந்தாள்.

சட்டென்று கண் முன்னே பேப்பர் நீண்டது.

"வான்ட் டு ஹாவ் எ லுக்?"

மூவரில் ஒருவன். இவனா? இவன்தானா? கேட்டு விடலாமா?

அவள், அவனை உற்றுப் பார்த்தாள். முகத்தில் குறும்பு இல்லை. கேலி இல்லை. சாதாரண - மிகச் சாதாரண முகம். ஒரு சக பயணியிடம் காட்டக்கூடிய கண்ணியம் குலையாத பார்வை. அவள் மற்ற இருவரைப் பார்த்தாள். அவர்கள் முகத்திலும் திருட்டுத்தனமில்லை. குறுகுறுப்பு இல்லை. பயணக் களைப்பும் வீடு போய்ச் சேரும் வேட்கையும்தான்.

திடீரென்று அவளுக்கு ஓர் எண்ணம்

# நம்பூதிரி (படும்) பாடு!

கேரள இடது கம்யூனிஸ்ட் கட்சியின் மூத்த தலைவர் ஈ.எம்.எஸ். நம்பூதிரி பாடு அங்கு மனிதவள மேம்பாட்டுத் துறையின் தலைவராக இருக்கிறார். இந்தத் துறையின் மெம்பர் செகரட்டரி ஸ்ரீதரன். ஈ.எம்.எஸ்ஸின் புதல்வர். இவருக்கு சம்பளம் என்ன தெரியுமா? 12,500 ரூபாய் – மாதத்துக்கு. நம்பூதிரி பாடின் மற்றொரு மகன் சசிதரன், மருமகள், மகள் எல்லோரும் இ. கம்யூனிஸ்ட் கட்சிக்குச் சொந்தமான சிந்தா பப்ளிகேஷன்ஸிலும் ஏ.கே.ஜி. டிரஸ்டிலும் தேசாபிமானி என்கிற கட்சிப் பத்திரிகையிலும் வேலை பார்க்கிறார்கள். தலா 7,500 ரூபாய் சம்பளம்.

நம்பூதிரிபாடின் மருமகன் தாமோதரன், மத்திய அரசுப் பணியிலிருந்து ஓய்வுபெற இன்னும் இரண்டு மாதங்கள்தான் உள்ளன. அதற்குள் கேரள அரசு அவரை அறிவியல், தொழில்நுட்பத் துறையின் நிர்வாக இயக்குநர் மற்றும் சேர்மனாக நியமித்து, அறிவித்து விட்டது.

மாநிலத்தில் பல இளைஞர்கள் வேலை வாய்ப்புக்காகக் காத்திருக்கிறார்கள் என்பது ஒருபுறமிருக்க, இ.கம்யூனிஸ்ட் கட்சி உறுப்பினர்களான பல இளைஞர்களே வேலையற்று இருப்பது அரசுக்கும் கட்சிக்கும் தெரியாததல்ல.



• நம்பூதிரிபாடு

''இந்த வரையில் நம்பூதிரிபாடு குடும்பத்தில் மட்டுமாவது வேலையில்லாத் திண்டாட்டத்தை நீக்கியிருக்கிறதே அரசும் கட்சியும்!'' என்று கிண்டலடித்திருக்கிறது கேரள JYF.

அரசியல் நேர்மைக்குப் பெயர் போன நம்பூதிரி பாடு இப்போது என்ன செய்வதென்று புரியாமல் திணறிக் கொண்டிருக்கிறார்.

திருவனந்தபுரத்திலிருந்து : **எஸ்.எஸ். மணி**

---

.தோன்றியது. ஒருவேளை அது ஒரு பிரமையோ? உடனே இல்லை என்று தீர்மானமாகச் சொல்லிக் கொண்டாள்.

ஒரு கணத்துக்கும் குறைவான நேரம்தான். ஆனாலும் அந்த திடீர் ஸ்பரிசமும் உரசலும் அழுத்தமும் வெப்பமும் அந்நிய சுவாசமும் மறுபடி எண்ணிப் பார்த்தால் உருவமற்ற நிகழ்வாக ஞாபகம் வரத்தான் செய்கிறது. அது மறந்து விடக் கூடியதல்ல. புனிதமான விஷயங்கள் மட்டுமல்ல; இதுவும் ஆயுசுக்கும் நினைவை இடறிக் கொண்டுதான் இருக்கும் என்று தோன்றியது. கல்யாணம் ஆன பிறகு, குழந்தை பிறந்த பிறகு, பேரன் பிறந்த பிறகு, விறகுப் படுக்கையில் விழுகிற விநாடி வரை.

எதிர்பாராவிதமாக செய்தித்தாள் நீட்டியவனுக்கு அவள் மனசுக்குள் நன்றி சொன்னாள். இருள் அளவுக்கு இல்லாவிட்டாலும் ஓரளவுக்கு இது ஒரு திரையாக உபயோகமாகவே செய்கிறது. எழுத்துக்கள் அவள் கண்களில் உதிர்ந்து கொண்டிருந்தன. தாளைக் கிழித்துக்கொண்டு அவள் கவனம் அந்த மூவரின் மேலேதான் இருந்தது.

மனசுக்குள் அவன் சிரிப்பான். இது அவன் வாழ்க்கையில் ஓர் அபார வெற்றியாக இருக்கும். தன் துணிச்சலுக்கும் தீரத்துக்கும் தோள் தட்டி மாலை போட யார் இருக்கிறார்கள் என்று எக்காளமிட்டுக் கொண்டிருப்பான். வாழ்க்கைக் கடலில் விளையாடி ஓய்ந்து, கரையோரம் கால் துவள உட்காருகிற நேரம் அவன் தன் மனைவியிடம் இதைச் சொல்வானா?

'அன்றொரு நாள் சென்னையிலிருந்து கேரளா போகிற ரயிலில் என் எதிரே ஒரு பெண் இருந்தாள். சின்னப் பெண். தனியாக வந்திருந்தாள். எர்ணாகுளத்துக்கு முன்னாலா, பின்னாலா, ஞாபகமில்லை. இருட்டாக ஒரு குகையை ரயில் கடக்கிறபோது...'

அப்போது தலை நரைத்திருக்கும் அவன் மனைவி என்ன சொல்வாள்? கேவிக் கேவி அழுவாளா?

அந்த அழுகைகூடத் தனக்காக இரக்கப்பட்டு அழுததாக இருக்காது. தனக்காக யார் இரக்கப்படுவார்கள்? இரக்கப்பட வேண்டிய விஷயம்தானா? கேலியும் எள்ளலும் குத்திக் கிளறிப் பார்க்கிற வெறியும் மேலோங்கி நிற்கிற உலகில் இரக்கமெல்லாம் அகராதிச் சொல்தான் என்று அவளுக்குத் தோன்றியது.

இப்போது என்ன செய்ய வேண்டும்? மௌனத் திரை போட்டு, மனதுக்குள் குமுறிக் கொண்டிருப்பது பைசா பிரயோஜனமில்லை என்று தெரிந்தே இருந்தாள். ஆயினும் வார்த்தைகளை விட மௌனம் பாதுகாப்பானது என்று அவளுக்குத் தோன்றியது. மௌனமும் இருள் மாதிரிதான். எதையும் மூடி மறைத்து விடுகிற வித்தகம் அதனுள் ஒளிந்திருக்கிறது. வழவழப்பும் குரூரமும் கலந்த அதே வித்தகம்.

அவள் இறங்க வேண்டிய ஸ்டேஷன் வந்ததும் பேப்பரை மடித்து எதிரில் வைத்தாள். யாரையும் பார்க்கவில்லை. தன் பெட்டிகளை எடுத்துக் கொண்டாள். கதவருகே போய் நின்று கொண்டாள். ஏதோ ஒரு வகையில் இந்தப் பயணம் மறக்க முடியாததாகி விட்டது. தோல்வி, அவமானமெல்லாம் இரண்டாவது நபர் எதிரில்தான் என்று அவளுக்குத் தோன்றியது. கண்ணை மூடிக் கொண்டு, இருளில் அமிழ்ந்து விட்டால் சுகம்தான்.

சிலீரென்று தூறல் முகத்தில் விழ, அவள் ரயிலிலிருந்து இறங்கினாள். வண்டி மீண்டும் கிளம்பும் வரை அங்கேயே நின்றிருந்தாள். ரயில் புறப்பட்டபோது, சன்னல் வழியே உள்ளே பார்த்தாள்.

மூவரில் ஒருவன் வானத்தைப் பார்த்துக் கொண்டிருந்தான். ஒருவன் பேப்பர் படித்துக் கொண்டிருந்தான். ஒருவன் உறக்கத்திலிருந்தான். அதே அரை உறக்கம்.




"ஒரு வாரத்துக்குள் தொகையைச் செலுத்தவில்லையெனில் தங்களுக்கென்று ஒதுக்கப்பட்டிருக்கும் ஃப்ளாட்டை மற்ற வாடிக்கையாளர்களுக்குக் கொடுத்து விடத் தயங்க மாட்டோம். நம்முடைய ஒப்பந்தத்தின் 18 வது ஷரத்தை நோக்கவும்."

"எவ்வளவு கொடுக்கணுமாம்?" என்றாள் ராஜேஸ்வரி மிகுந்த கவலையுடன். வீடு வாங்கத் தீர்மானித்ததிலிருந்து அவளுக்கு நரை தெரிய ஆரம்பித்திருக்கிறது. உடம்பில் ஒரு தளர்ச்சி.

"ஒன்றரை லட்சம்" என்றான் சிவராமன்.

"எல்லாம் கொடுத்தாச்சுன்னு போன தடவை சொன்னானே?"

"அது என்னவோ 'எஸ்கலேஷன் க்ளாஸாம்.' சிமெண்ட் விலைவாசி உசந்ததுக்காக..."

"ஏந்தான் இப்படி வீட்டில போய் எல்லாப் பணத்தையும் போட்டு மாட்டிண்டமோ!"

"ஒரு வருஷமா இதோ இப்ப ஆறது, அப்ப முடியறதுன்னு சொல்லிண்டே இருக்கானே தவிர முடிக்கிற வழியா இல்லை."

"காண்ட்ராக்ட்ல ஒரு வருஷத்தில் கட்டி முடிக்கப்படும்னு சொல்லிருக்கானே அதைப் பத்திப் பேச்சே இல்லை."

"இவங்கிட்ட மாட்டிண்டுட்டோம்."

"எவ்வளவோ பேர் சொன்ன தேதிக்குக் கட்டி முடிக்கிறா. நமக்குன்னு ஒருத்தன் ஆப்ட்டான். விதி!"

"இப்ப கட்டாட்டி என்ன ஆகும்?"

"ஃப்ளாட்டை மத்த பேருக்கு அலாட் பண்ணிடுவானாம்."

"கட்டின பணம் எல்லாம்?"

"குடுத்துருவான். அசல் மட்டும் வரும். அதான் கண்டிஷன்."

"மத்தளத்துக்கு ரெண்டு பக்கமும் இடின்னு, கட்டினாலும் கஷ்டம்; கட்டாட்டாலும் கஷ்டம். ஒன்றரை லட்சத்துக்கு எங்க போவேள்?"

சிவராமன் அவளை ஏற இறங்கப் பார்த்தான்.

"என்ன பார்க்கறேள்? என் நகையெல்லாம் வித்தாச்சு."

"உன் நகையை யார்றி கேட்டா? நீ ஒண்ணு!"

"இப்ப என்ன செய்யறது?"

"ஏதாவது உருப்படியா யோசனை சொல்லேன். அப்பாவைக் கேட்டு, அண்ணாவைக் கேட்டு வாங்கித் தரேன்னு..."

"அவாகிட்டல்லாம் இத்தனை பணம் எங்க இருக்கும்? லோன் கின்னு வாங்கிக்கலாமே?"

"எல்லா லோனும் வாங்கியாச்சு - எச்.டி.எஃப்.சி., எல்.ஐ.சி."

"சீட்டு ஏதாவது புடிக்கலாமா?"

"பார்க்கலாம். முதல்ல வக்கீலைப் புடிக்கணும். இவன் மேல கேஸ் போடணும். என்னமா ஏமாத்திருக்கான் தெரியுமா!"

மேற்குறித்த உரையாடல் சிவராமனுக்கும் ராஜேஸ்வரிக்கும் சென்னை 33-ல், அனுக்ரஹா என்கிற ஃப்ளாட்டில் நடைபெற்றது. அதன் சொந்தக்காரர் ஆள்வார்பேட்டையில் ஒயின் ஸ்டோர் வைத்திருக்கிறார். தண்ணி லாரி ஓட்டுகிறார். வருஷா வருஷம் வாடகையை உயர்த்திக் கொண்டே போகிறார். எதிர்த்து வாதாட முடியவில்லை. "அவன்லாம் முரடன். அவங்கிட்ட வம்பு வெச்சுக்காதீங்கோ அத்திம்பேரே. சாமான்லாம் இழுத்து வீதில எறிஞ்சுருவான்" என்று மச்சினன் எச்சரித்ததால் ஆயிரத்து ஐந்நூறில் ஆரம்பித்து இப்போது மூவாயிரம் ரூபாயில நிற்கிறது வாடகை! அதனால்தான் 'பிரமிட் பில்டர்ஸ்' விளம்பரத்தைப் பார்த்ததும் தீர்மானித்து விட்டார்கள். சொந்தமாக ஃப்ளாட் வாங்கிவிடுவது என்று. 'கஷ்டமோ நஷ்டமோ, நமக்குன்னு ஒரு நிழல் இருந்தா இந்த வீட்டுக்காரன் பிடுங்கல் இல்லை பாரு. வருஷா வருஷம் வாடகையை ஏத்திண்டு...'

விளம்பரம் தேன் தடவி எழுதியிருந்தது. ஒரு வருஷத்துக்குள் கட்டி முடிக்கப்படும் அவர்களுடைய 'அருண்' அபார்ட்மெண்ட்ஸ். இருபத்து நாலு மணி நேரமும் காவல். லிப்ட் வசதிகள். ஷாப்பிங் சென்டர். கற்கண்டு மாதிரி போர்வெல் தண்ணீர். கேளிக்கைக்கான பொது இடம். ஸ்டாண்ட்பை ஜெனரேட்டர், டிஷ் ஆண்டென்னா, எல்லாம் 'நம்ப முடியாத' விலையில். பத்து லட்சம், ரிஜிஸ்ட்ரேஷனையும் சேர்த்து ரொம்ப



## சுஜாதா

சல்லிகை என்று பி.எஃப். லோன் எடுத்து முன் பணம் கட்டி விட்டான்.

ஆரம்பித்தது வம்பு. மூணு மாசத்துக்கு ஒருமுறை லட்சம் லட்சமாகக் கேட்டுக் கொண்டே இருந்தார்கள். அங்கே இங்கே பாய்ந்து எல்லாக் கடன் சாத்தியங்களையும் பயன்படுத்தி தகிடுதத்தம் பண்ணி, இது வரைக்கும் கட்டிப் பார்த்ததில் பதினோரு லட்சம் கட்டியாகி விட்டது.

இப்போது இன்னும் ஒன்னரை லட்சம் கேட்கிறார்கள்.

''கட்ட ஆரம்பிச்சானாங்கறதே சந்தேகமா இருக்கு.''

"அதெல்லாம் ஆரம்பிச்சுட்டான்" என்றான்.

"இதுவரைக்கும் இடத்தைக் கூட பார்க்கலை."

"சாயங்காலம் அழைச்கண்டு போய்க் காட்டறேன். இப்ப போய் முதல்ல பில்டரைப் பார்த்து நாக்கைப் புடிங்கிக்கறாப்பல நாலு கேள்வி கேட்டுட்டுத்தான் வரப் போறேன். படவா ராஸ்கல் 'சூட்'டை போடறேன் வான்னு."

எல்டாம்ஸ்ரோடு கார்ப்பரேஷன் பள்ளிக்கு எதிரே இருந்த சந்தில் பில்டரின் அலுவலக முன் அறையில் ஒரு பெண் உட்கார்ந்து தன் நகப்பூச்சில் கவனத்துடன் போன் பேசிக் கொண்டிருந்தாள். சிவா வந்ததை கவனிக்கவில்லை. "ஆயிரம் திருப்தியடைந்த வாடிக்கையாளர்கள்" என்று போஸ்டரில் சிவராமனையும் ராஜேஸ்வரியையும் போல ஒரு தம்பதி வாய் நிறைய சிரித்துக் கொண்டிருந்தார்கள்.

"செல்வராஜ் வேணுங்களே."

"பெங்களூர் போயிருக்காரே."

"எப்ப வருவார்?"

"சொல்ல முடியாது. ஒரு ப்ராஜெக்ட் முடியற ஸ்டேஜ்ல இருக்கு."

"நம்ம ப்ராஜெக்டை எப்ப முடிப்பீங்க?"

"எது ஸார்? மெட்ராஸ்ல எட்டு சைட்டு இருக்கு."

"அருள்."

''அதை தாமோதர் பார்த்துக்கறாரு. சந்திக்கிறீங்களா?"

தாமோதர் என்பவர் அறை முழுதும் சிகரெட் குடித்துவிட்டு புகையை விரட்டிக் கொண்டிருந்தார்.

"திடீர்னு ஒன்னரை லட்சம் கொண்டான்னு கேக்கறீங்க. என்மாதிரி மிடில் க்ளாஸ் ஆசாமியெல்லாம் என்ன பண்ணுவோம்? பேமெண்ட்டே வேண்டாம்னீங்க போன தடவை?"

தாமோதர் காலை ஆட்டிக் கொண்டே லெட்டரைப் படித்தார்.

"பணத்தைக் கட்டிடுங்க. கைல சாவி கொடுத்துருவோம். மார்கழி மாசம் போகட்டும்னு காத்திருக்கோம். அவ்ளவ்தான். பவர், வாட்டர் எல்லாம் ஆயிடுத்து. கட்டடம் முடிஞ்சிருச்சு."

"பத்து லட்சத்தில் ஆரம்பிச்சு பதினாலு ஆயிருச்சே!"

"ஸோ?"

"இது நியாயமா?"

"காண்ட்ராக்டைப் படிச்சிங்க இல்லை."

"பொறுப்பில்லாம பேசறீங்க"

தாமோதரின் முகம் இறுகியது.

"பாருங்க, ஃப்ளாட் வேண்டாம்னா சொல்லிடுங்க. அந்த லொக்கேஷனுக்குச் சதுர அடிக்கு இப்ப மதிப்பு ரெண்டாயிரம் கொடுக்க நாலு பார்ட்டி முழுப் பணத்தோட தயாரா இருக்குது. நீங்க குடுத்த பணத்தைத் திருப்பிக் கொடுத்துருவோம். என்ன சம்மதமா? ரேணு, அந்த பி ஃபோர் பாரம் ஒண்ணு கொண்டு வாம்மா. சார்க்கு வீடு வேண்டாமாம்."

சிவராமன் திடுக்கிட்டு, "வேண்டாம்னா சொன்னேன்?"

"பின்ன? போங்க சார்! உங்க டயமும் எங்க டயமும் வேஸ்ட் ஆறது. நான் இந்தக் கம்பெனியில் எம்ப்ளாயி. நீங்க மிஸ்டர் செல்வாவை கேக்க வேண்டிய கேள்வியெல்லாம் என்னைக் கேக்கறீங்க."

வக்கீல், ஒப்பந்தத்தைப் படித்துவிட்டு, "இந்த மாதிரி ஓரவஞ்சனை காண்ட்ராக்டை நான் இந்த இருபத்தஞ்சு வருஷ அனுபவத்தில் பார்த்ததே இல்லைப்பா. எப்படி நீ இதில எல்லாம் சைன் போடுவ? இவன் இப்ப வீடு கொடுக்காமலே நாமம் போட்டாலும் உன்னால ஒண்ணும் செய்ய முடியாதபடி எஸ்கலேஷன், போர்ஸ் மெஜூர் எத்தனை போட்டிருக்கான்! அவனை ஒண்ணும் பண்ண முடியாது."

"ஒரு வருஷத்தில் முடிச்சுக் கொடுப்பேன்னு எழுதிக் கொடுத்திருக்கானே கிருஷ்ணமாச்சாரி, அது ப்ரீச் இல்லையா?"

"எழுதிக் கொடுத்து எத்தனை வருஷமாச்சு?"

"ஏறத்தாழ ரெண்டு வருஷம்."

"கேஸ் போடலாம். ஆனா இழுத்தடிக்கும். ஒண்ணு பண்ணு. ஒரு வக்கீல் நோட்டீஸ் ட்ராஃப்ட் பண்ணிக் கொடுக்கறேன். 'இனிமே ஒரு காசு பெயராது. ப்ளாகாட் வீட்டை ஒப்படைக்கப் போறியா இல்லையா'ன்னு கடுமையா கேட்டு. அவனால மத்த பேருக்கு விக்க முடியாது. சும்மா பூச்சி காட்டறான். பணத்தைக் கட்டறதுக்கு முன்னால கன்ஸ்ட்ரக்ஷன் சைட்டுக்கு போய், 'அருள்'னு கட்டடம் இருக்கா, இல்லை அது வெறும் மேப்பா, எந்த ஸ்திதில இருக்குன்னு பார்த்துட்டு எங்கிட்ட வா."

"அந்த ஆள் குடும்பக் கட்டுப்பாடுங்கறதை தப்பாப் புரிஞ்சுக்கிட்டிருக்கார்னு நினைக்கறேன்."

"எப்படி சொல்றே?"

"இரண்டு குடும்பத்தோட நிறுத்திட்டேன்னு சொல்றாரே!"

- வெ. ராஜாராமன்

"அப்புறம்?"

"அப்புறம் என்ன? பணம் கட்டிட்டு விரல் சப்பிண்டு உக்கார்றது. இப்ப கட்டாதே, அவ்வளவுதான்" என்று சிரித்தார்.

"இவங்கள்ளாம் வக்கீல் நோட்டீசுக்கு பயப்பட மாட்டாங்க."

"இதான் கடைசி, ஸ்கூட்டர்ல."

"ஏன்?" என்றான் ராஜேஸ்வரி.

"வித்துறப் போறேன்."

சிதம்பமான் காலனி முடிந்து குடிசைகள் ஆரம்பிக்கும் விளிம்பில் இருந்தது, 'அருள்'. ரோடில் பாதியை அடைத்து சரளையும் மண்ணும் கொட்டியிருக்க, முதல் மாடி வரை முடிந்திருந்தது. இரண்டாவது மாடியில் மர வாசல்களும் சன்னல் சட்டங்களும் பதித்திருந்தன. இடித்த பழைய வீட்டின் தேக்கு மரக் கதவுகளும் சன்னல்களும் விற்பனைக்கு சாய்ந்திருந்தன.

"என்ன பொய் சொல்றான் பாரு. மார்கழி மாசம் முடிய காத்திருக்கானாம். இது முடிய இன்னும் ஒரு வருஷம் ஆகும்."

ஓரத்தில் தூளி கட்டி குழந்தை தூங்கிக் கொண்டிருந்தது. ஒரு பெண் மணலில் காலை நீட்டிக் கொண்டு, எண்ணெய் தடவிக் கையகலக் கண்ணாடியில் தலைவாரிக் கொண்டிருந்தாள்.

"ஏம்மா கட்டடம் கட்டறவங்கள்ளாம் எங்க?"

"பத்து மணிக்குத்தான் வாராங்க. காண்ட்ரக்ட்டுகாரவங்க."

"நீ யாரு?"

சித்தாளுங்க. வூட்டுக்காரரு கொள்த்து வேலை செய்றாரு."

"இந்த கட்டடம் எப்ப முடியும்?"

"தெரியாதுங்களே."

"சிமெண்ட்டெல்லாம் இருக்காதா?"

"தெரியாதுங்களே."

"கனெக்சன் கொடுத்துட்டாங்களா?"



"தெரியாதுங்களே."

"இவளைப் போய்க் கேட்டா" என்றாள் ராஜேஸ்வரி.

'**வீ**ட்டின் பேரில் கடன் கொடுக்கப்படும்' என்று அந்த பெனிபிட் பண்டு பெயர்ப் பலகையிலேயே எழுதியிருந்தது. உள்ளே கிரானைட் இழைத்து மயன் மாளிகை போல இருந்தது. உயரமான உத்தரங்களில் அரை வட்டம் பதித்த கண்ணாடி. சன்னல்களிலிருந்து பொன்னிற வெளிச்சம் கசிய, 'டை' கட்டிய இளைஞர்கள் கம்ப்யூட்டரில் கொத்திக் கொண்டிருந்தார்கள்.

"எனக்கு ஒன்னரை லட்சம் ரூபாய் கடன் வேணும்" என்றான்.

"கோலாட்டரல் என்ன வெச்சிருக்கீங்க?"

"ஒரு ஃப்ளாட்டு கைக்கு வரப் போறது."

"டாக்குமெண்ட்ஸ் பில்டர் கொடுத்துட்டானா?"

"இல்லை."

"டாக்குமெண்ட் இல்லாம நாங்க எந்த உத்தரவாதத்தில் கொடுக்க முடியும்? வேணும்னா மேனேஜரைப் பாருங்க, கோல்டு ஏதாவது இருக்கா? இப்ப சத்தியத்துக்கு?"

"எல்லாத்தையும் வித்தாச்சு."

"பில்டர் யாரு?"

"பிரமிட்."

"அவங்களுக்கும் நாங்க அட்வான்ஸ் கொடுத்திருக்கோம். இன்னும் முடிக்கலையா? அட ராமா!"

"ஏங்க?" என்றான் சிவராமன் கவலையுடன்.

"நீங்க எங்க மேனேஜரைப் பார்த்துருங்க."

ராஜேஸ்வரி அறைக்கு வெளியே காத்திருக்க, மேனேஜரின் ஏசி அறைக்குள் பணக் கஷ்டத்தைச் சொன்னான்.

மேனேஜர் குறுக்கிடாமல் கேட்டுவிட்டு, "சார், வீட்டுப் பத்திரம் உங்க கைக்கு வராம கடன் கொடுக்க முடியாது."

"ஏதாவது ஒருவழி சொல்லுங்களேன். இந்த சிக்கல்லருந்து மீள."

"பில்டிங் மூணு மாசத்தில் கம்ப்ளீட் ஆகுமா?"

"ஆகணும்."

அந்த இளைஞன் யோசித்து, "அப்படின்னா உங்களுக்கு ஒரே வழி. ஷார்ட் டர்ம் அதிக வட்டிக்கு ப்ரைவேட் பினான்சியர்ஸ் கிட்ட லோன் எடுங்க. வீடு எப்படியும் மார்ச்ல கிடைச்சுரும். என்ன ரெண்டு மாசம்தானே? கந்து வட்டில விகிதம் கொஞ்சம் அதிகம்தான். அஞ்சு வட்டிம்பாங்க. அதாவது ஒரு மாசத்துக்கு அஞ்சு பர்சண்ட். இப்ப ஒன்னரை லட்சம் எடுத்தா மாசத்துக்கு ஏழாயிரத்து ஐநூறு ரூபாய் வட்டி கட்ட வேண்டி வரும். ரெண்டு மாசம்தானே? பத்திரம் கைக்கு வந்ததும் எங்க கிட்ட வாங்க. அதை கோலாட்டரலா வெச்சு பதினெட்டு பர்சண்ட் லோன் கொடுக்கறோம். மாசா மாசம் கட்டித் தீர்த்துறலாம். வக்கீல் என்ன சொன்னார்?"

"வக்கீல் பணம் கட்டாதேங்கறாரு."

"அப்படியெல்லாம் பைத்தியக்கார காரியம் செய்யாதீங்க. வித்துருவான். இப்ப ரியல் எஸ்டேட்ல பூம்."

"யாருகிட்ட போகணும்?"

"சிமன்லால்னுட்டு சினிமாக்காரங்களுக்குக் கடன் கொடுப்பார். இந்த அட்ரஸ்ல போய்ப் பாருங்க. வீட்டுக்கு வாடகை கொடுக்கற மாதிரி தீர்த்துறலாம். இதுதான் வழி" என்று கார்டு கொடுத்தார்.

"எல்.ஐ.சி. எச்.டி.எப்சி.ன்னு அது வேற ரீபேமெண்ட் இருக்கு சார். சம்பளத்தில கழிப்பாங்க."

"என்ன ரெண்டு மூணு வருஷத்துக்குத் தானே? அப்புறம் வீடு உங்களுது."

"சமாளிக்க முடியும்ங்கறீங்க?"

"ப்ராப்ளமே இல்லை. எல்லாரும் இப்படித் தான் வீடு வாங்கறாங்க. நாமெல்லாம் மிடில் கிளாஸ் சார்."

"உங்களைப் பார்த்தா அப்படித் தெரிய லையே தம்பி."

**சா**யங்காலம் வக்கீல் போன் பண்ணியிருந்தார். "சிவராமன் நோட்டீசை டைப் அடிச்சு வெச்சிருக்கேன். ஒரு கையெழுத்து போட்டா பில்டருக்கு ரிஜிஸ்டர் போஸ்ட்ல அனுப்ச்சரலாம்."

"தேவையில்லை மிஸ்டர் சாரி."

"ஏன்?"

"கடைசி இன்ஸ்டால்மெண்டை கொடுக்கறதா தீர்மானிச்சுட்டோம். இதுக்கு மேல பணம் கேட்டா நோட்டீஸ் விட்டுரலாம்."

"பணம் எப்படி புரட்டறதா உத்தேசம்? இஃப் ஐம் நாட் க்யூரியஸ்."

"ஷார்ட் டெர்ம்... பினான்சியர்கிட்ட வாங்கி, அப்புறம் வீட்டுப் பத்திரத்தை வெச்சு பெனிபிட் பண்ட்ல வாங்கறேன்."

"அப்படியா? சரி செய். இட்ஸ் யூர் ஃப்யுனரல்" என்றார்.

"என்ன சொன்னார் வக்கீல்?"

"என்ன சொன்னா என்ன? கடன் வாங்கறதா தீர்மானிச்சாச்சு."

"எனக்கென்னவோ அவா வித்துக்கட்டும்; போட்ட பணத்தைத் திருப்பிக் கொடுத்துறட்டும். ஏதோ பொறியில மாட்டிக்கறமோன்னு பயமாக இருக்கு."

"சேச்சே!"

"எதுக்காக இந்த வீட்டை வாங்கறோம் இப்ப?"

"சரியாப் போச்சு. அடியைப் புடிடா பாரத பட்டான்னு. நீதான் வருஷா வருஷம் வாடகை ஏத்தறான்; நமக்குன்னு ஒரு வீடு இருந்தா தொல்லையில்லன்னு ஆரம்பிச்சே."

"சொன்னேன். இப்படி தலைக்கு மேல கடன் வாங்கித்தான் வீடு வாங்கணும்னு தெரிஞ்சிருந்தா...."

"இப்ப அதைப் பத்திப் பேசறது டூலேட்."

மார்ச் மாதம் வீடு கைக்கு வரவில்லை. மே மாசம்தான் வந்தது. சிமன்லாலுக்கு அதிகப்படியாக பதினைந்தாயிரம் வட்டி கொடுக்க வேண்டியிருந்தது. வீடு கைக்கு வந்து பத்திரத்தைப் பெற்று சிமன்லால் அசலைத் திருப்பிய போது, "எதுக்கு ஐயரே அவசரம்? அப்படியே இருக்கட்டுமே" என்றான்.

"அய்யோ வேணாம் சேட்டு. இப்பவே வீட்டில் கேஸ் இல்லை. கறிகாய் வாங்க முடியலை. அப்பளத்தை காச்சி தின்னுக்கிட்டு இருக்கோம். டெலிபோன் பில் கட்டலை. இன்சூரன்ஸ் ப்ரிமீயம் கட்டலை. இன்கம்டாக்ஸ் கட்டலை. ஸ்கூட்டரை வித்தாச்சு. எக்கிப் புடிச்சுண்டு இருக்கோம்."

பிரமிட் தன் விளம்பரத்தில் சொன்ன சத்தியங்களில் பலவற்றை நிறைவேற்றவில்லை. ஆயிரம் சதுர அடி என்பது மாடிப்படியையும் சேர்த்து என்றார்கள். லிப்ட் வரவில்லை. ஆர்டர் கொடுத்திருக்கிறதாகச் சொன்னார்கள். ஸ்டான்பை ஜெனரேட்டருக்கு பவுண்டேஷன் போல்ட் மட்டும் பதித்து இருந்தது. ஷாப்பிங் சென்டருக்குப் பதில் வாடலாக காய்கறிகள் விற்கும் ஒரு அங்காடி இருந்தது. ஒரு பக்கம் காம்பவுண்ட் கட்டவில்லை. 'ரிக்ரியேஷன் ஏரியா எங்கே என்று கேட்டால் பேஸ்மெண்ட்டில் சிறிய அறையைக் காட்டினார்கள். அதில் கூர்க்கா கெரசின் ஸ்டவ்வில் சப்பாத்தி சுட்டுக் கொண்டிருந்தான். கபோர்டுகள் எல்லாம் கான்க்ரீட்டில் இருந்தன. "மரத்தில் இருக்கும் என்று நாங்கள் சொல்லவில்லையே, மரத்தில் வேண்டுமென்றால், தனியாக ஆர்டர் செய்து பொருத்திக் கொள்ள வேண்டும் என்றுதானே சொன்னோம்."

கடைசியாக கிரகப்பிரவேசம் செய்துவிட்டு அந்த வீட்டுக்குக் குடிபுகுந்த போது, நண்பர்கள் பலர் பாராட்டினார்கள். கொஞ்சம் தெம்பாக இருந்தது. காப்பி பலகாரம் சாப்பிட்டு விட்டு, "நல்ல காத்தோட்டமாக இருக்கு" என்று வீட்டை சாஸ்திரத்துக்குப் புகழ்ந்து விட்டுச் சென்றார்கள்.

இராஜேஸ்வரி, "என்ன இருந்தாலும் நமக்குன்னு ஒரு வீடு இருக்க வேண்டாமா மாமி நம்முதுன்னு."

"வாஸ்தவந்தாம்மா. பிற்காலத்தில் பொண்ணுக்கு ஜாதகம் பார்க்கறபோது, 'ஃபாதர் ஒன்ஸ் ஒன் ஹவுஸ்'னு சொன்னா பெருமையா இருக்குமே."

"அது மட்டும் இல்லை. மே மாசம் கொடுத்தான். இப்பவே விலை ஏறிப் போச்சாம்."

சம்பத் சொன்னான் : "இன்னைய தேதிக்கு இருவது லட்சம் கொடுக்கத் தயாரா இருக்கா சிவா. அப்படி ஏறிப் போச்சு ரியல் எஸ்டேட் வால்யு."

"அப்படியெல்லாம் விக்கறதா இல்லைப்பா" என்றான் சிவராமன்.

உள்ளங்கையைப் பார்த்துக் கொண்டு...) "நம்முதுன்னு ஒரு வீடு வேணாமா? எங்க அப்பாவால முடியலை. என்னால முடிஞ்சிருக்கு."

"சிவராமன் நீ ரொம்ப கெட்டிக்காரன்பா எப்படியோ சமாளிச்சுட்டே. ஆபீஸ்ல லஞ்சம் வாங்காம ஒரு வீடு கட்ட முடியும்னு நிரூபிச்சுட்டே. எப்படிப்பா முடிஞ்சது?"

"எல்லாம் அவர்தான்" என்று அலமாரியில் இருந்த சாமியார் படத்தைக் காட்டினான்.

அந்த வீட்டுக்குக் குடிவந்த முதல்நாள் இரவு வெளியே இரைச்சல் கேட்டு, தூக்கமில்லாமல் - ஒரு சாராயக்கடை இருப்பதாகத் தெரிந்தது.

"தமிழ்ல புதுசு புதுசா வார்த்தையெல்லாம் கேக்கறது" எனறான் ராஜேஸ்வரி. சிவராமன் தன் ப்ரீப்கேசிலிருந்து அந்த மாத சம்பளச் சீட்டை உன்னிப்பாகப் பார்த்தான்.

கடன் தவணைகளையெல்லாம் கணக்கிட்டு ஆபீசில் சட்டப்படி உச்ச வரம்புவரை வெட்டி மிச்ச சம்பளம் அவன் ப்யூனுக்கு கிடைப்பதை விடக் குறைவாக இருந்தது. பெனிபிட் பண்டுக்குத் தனியாகக் கொடுக்க வேண்டும். சிரித்துக் கொண்டே சன்னலுக்கு வந்தான். "இந்த சன்னலை ஏன் மூடிட்டே?"

"நீங்களே திறந்து பாருங்கோ"

தயங்கித் திறந்தான். வேலியோரத்தில் ஒரு சிறார் பட்டாளமே வெளிக்கிருந்து கொண்டிருந்தது.

"எப்படி தரிசனம்?"

"கார்ப்பரேஷன்காராளுக்கு எழுதிப் போட்டா க்ளியர் பண்ணிடுவா" என்று திறந்த சன்னலை அவசரமாகச் சாத்தினான்.

# வி.கே.ராமசாமி

# 5

**திரைப்படம்**

**தா**ங்க முடியாத துக்கம். சொல்ல முடியாத சோகம். வருத்தத்தைப் பகிர்ந்து கொள்ளக்கூட ஆளில்லாத நிலைமை.

ராசிபுரத்தில் நண்பர்களிடம் பிரியாவிடை பெற்று, என் அண்ணனுடன் சேலத்துக்கு வரும்போது பஸ்ஸில் அழுதுகொண்டே வந்தேன். எத்தனை சந்தோஷமான நாடக கம்பெனி வாழ்க்கை? பல சிரமங்களுக்கு மத்தியிலும் எங்களுக்கு எந்தக் கஷ்டமும் காட்டாமல் சோறு போட்டு, கலையையும் கற்றுக் கொடுத்து வந்த பொன்னுசாமிப் பிள்ளையை நன்றியுடன் நினைத்துப் பார்த்தேன். இனி அந்த சந்தோஷம் அவ்வளவு தானா? ஊருக்குப் போய் என்ன செய்யப் போகிறேன்? மறுபடி பள்ளிக்குச் சென்று படிப்பைத் தொடருவதென்பது என்னால் நினைத்துப் பார்க்கவே முடியாத ஒன்றாக இருந்தது.

**சே**லம் வந்து சேர்ந்ததும் அங்கே கல்லாங்குத்து என்கிற கிராமத்தில் வசித்துவந்த ஆர்மோனியம் சுப்பிரமணியப் பிள்ளை என்பவரைப் பார்க்கப் போனேன்.

அவர் எங்கள் கம்பெனியின் ஆர்மோனிய வித்வான். வயதிலும் அனுபவத்திலும் மிக மூத்தவர். அவரைப் பார்த்து, விடைபெற்றுச் செல்லலாம் என்று அவர் வீட்டுக்கு என் அண்ணனையும் அழைத்துப் போனேன்.

"இதோ பாரு ராமசாமி! உன் ஆசை எனக்குப் புரியுது. ஆனா அப்பா, அம்மா விருப்பமில்லாம, அவங்க ஆசீர்வாதம் இல்லாம உன்னால நல்ல கலைஞனா வர முடியாது. விதிப்படி நீ ஒரு வருஷம் நாடகக்காரனா இருக்கணும்னு இருந்திருக்குது போல இருக்கு. இனிமே இதையெல்லாம் மறந்துடு. ஊருக்குப் போயி, படிச்சி முன்னுக்கு வர்ற வழியைப் பாரு. இல்லாட்டி, எதனாச்சும் வியாபாரம் செஞ்சி பொழைச்சிக்க. எங்க இருந்தாலும் நீ நல்லா வருவே." என்று வாழ்த்தி, வழியனுப்பி வைத்தார் அவர்.




**வீ**டு வந்து சேர்ந்ததும் என் பெற்றோருக்கு அப்படியொரு மகிழ்ச்சி. என்னவோ, நான் மனமாரத் திருந்தி மீண்டும் படிப்பில் ஆர்வம் கொண்டு வந்து விட்டதாகவே எண்ணி உவகை அடைந்தார்கள். ஊர்க்காரர்கள், உறவினர்களெல்லாம் வந்து என்னைப் பார்த்து, நலம் விசாரித்துப் போக, நான் என் அப்பாவிடம் தீர்மானமாகச் சொல்லிவிட்டேன்: "இனிமே படிப்பெல்லாம் எனக்குச் சரிப்பட்டு வராது."

அவர் அதிகம் வருத்தமுற வில்லை. இந்த வரைக்கும் பயல் வந்து சேர்ந்தானே; அதுவே பெரிய விஷயம் என்று நினைத்தாரோ, என்னவோ.

எங்கள் குலத் தொழிலான எண்ணெய் வியாபாரத்திலே என்னை ஈடுபடச் சொன்னார். தனியாகக் கொஞ்சம் பணம் கொடுத்து, "நான் உன் விஷயத்தில் தலையிடலை. நீயே வியாபாரம் பண்ணு. நெளிவு சுளிவுகளைத் தெரிஞ்சிக்கோ. உழைச்சி லாபம் காட்டு, பார்ப்போம்" என்றார்.

அப்போது எனக்குப் பதினைந்து வயதுதான். அப்பா சொல்கிறாரே என்று வியாபாரத்தில் ஈடுபடத் தொடங்கினேன்.

**ஆ**னால் ஆட்டத்தில் திளைத்த மனசு, வியாபாரத்தில் எப்படி நிற்கும்? நண்பர்களைக் கூட்டிக் கொண்டு,

பொழுது விடிந்தால் சினிமா, ஓட்டல், கச்சேரி என்று சுற்ற ஆரம்பித்து விடுவேன்.

என் வயதொத்த நண்பர்கள் யாருக்கும் இலேசில் கிடைக்காத நாடக கம்பெனி அனுபவங்கள் எனக்குக் கிடைத்திருந்தன அல்லவா? அந்த அனுபவங்களையெல்லாம் நண்பர்களுக்குக் கதை கதையாகச் சொல்லிக் கொண்டிருப்பேன். அவர்களும் 'ஆ'வென்று வாய் பிளந்து கேட்டுக் கொண்டிருப்பார்கள்.

இந்த ஊர் சுற்றலும் கதை அளத்தலும் ஒரு நாளல்ல; ஒரு வாரமல்ல... மாதங்கள் கணக்கில் நீடிக்க, என் எண்ணெய் வியாபாரம் படுத்து விட்டது. சரியான நஷ்டம்.

பார்த்தார் என் தந்தை. இவனுக்கு இதெல்லாம் சரிப்பட்டு வராது; முதலில் யாரிடமாவது பணியாற்றி அனுபவம் சேகரித்துக் கொள்வது அவசியம்; சம்பாதிக்கிற விஷயத்தைப் பிறகு பார்த்துக் கொள்ளலாம் என்று முடிவெடுத்து, கடைத்தெருவிலுள்ள ஒரு எண்ணெய்க் கடையில் என்னை வேலைக்குச் சேர்த்து விட்டார்.




அங்கே எனக்குச் சம்பளம் ஏதும் கிடையாது. அனுபவத்துக்காகத்தான் நாளெல்லாம் அந்தக் கடையில் கால்கடுக்க நிற்க வேண்டியதானது.

அதுவும் ரொம்ப நாள் நீடிக்கவில்லை. திடீரென்று என் நண்பன் ஒருவன் வந்தான். "இங்கே உனக்கு என்ன சம்பளம்?" என்று கேட்டான். நான், சம்பளம் ஏதுமில்லை; சும்மா தான் வேலை பார்க்கிறேன் என்று சொல்ல, "அடப்பாவி! சம்பளமேயில்லாமல் நாளெல்லாம் எவனாவது வேலைபார்ப்பானா? உனக்கு தினம் ஒன்றரை ரூபாய் சம்பளத்தில் நானொரு வேலை வாங்கித் தருகிறேன். வருகிறாயா?" என்று ஆசை காட்டினான்.

தினம் ஒன்றரை ரூபாய் என்பது அந்தக் காலத்தில் எனக்கு மிகப் பெரிய தொகை. என் ஊர் சுற்றும் இயல்புக்கு ரொம்ப ஒத்தாசையாக இருக்கும்.

"சரி, எங்கே வேலை?" என்று கேட்டேன்.

"ஆர்.வி. பேப்பர் மில்லில். ஆனால் தினமும் ராத்திரி ஷிப்ட்தான்" என்றான்.

பகல் முழுக்க ஊர்சுற்ற வசதிதான் என்றாலும் என் அப்பாவுக்குத் தெரியாமல் இரவுகளில் எப்படி வேலைக்குப் போவது? தெரிந்தால் கொன்றுவிடுவார்.

"அதொண்ணும் கஷ்டமில்லை ராமசாமி! உங்கப்பா ஒன்பது மணிக்கு சாப்பிட்டுப் படுத்துடுவாரில்லை? அவர் தூங்கினதும் நீ கிளம்பி வந்துடு. விடிகாலை அவர் எழுந்திருக்கும் முன்னால் வீட்டுக்குப் போயிடலாம்!" என்றான்.

**நா**ன் ஏற்றுக் கொண்டேன். அன்றே அந்த எண்ணெய்க்கடை உத்தியோகத்துக்குத் தலை முழுகிவிட்டு, பேப்பர் மில் வேலைக்குப் போகத் தொடங்கினேன்.

இந்த விஷயம் ரொம்ப நாளைக்கு என் அப்பாவுக்குத் தெரியாமல் தான் நடந்துவந்தது. ஆனால் அம்மாவுக்குத் தெரியும்.

'எப்படியோ, நாடகம், கூத்து என்று அலையாமல் உருப்படியாக ஒரு வேலைக்குப் போகிற, சம்பாதிக்கிற எண்ணம் வந்ததே; அதுவே பெரிய விஷயம்' என்கிற திருப்தி என் அம்மாவுக்கு.

எனக்கே ஆச்சர்யமாக இருந்தது. கிட்டத்தட்ட ஏழெட்டு மாதங்கள் ஆகிவிட்டன, நான் ஊருக்குத் திரும்பி வந்து. எப்படி மறுபடி ஓடிப்போகாமல் இருக்கிறேன்? நண்பர்கள், பெற்றோர், உறவினர்களின் அருகாமையில் எனக்கு வேறுவித அனுபவங்களும் குறிப்பாக என் அம்மாவின் ஈடு இணையற்ற அன்பும் தான் என்னைக் கட்டிப் போட்டிருக்கின்றன என்று நினைத்துக் கொள்வேன்.

**இ**ப்படி என் வாழ்க்கை புது வடிவம் பெற்று ஒருவாறு ஓடிக் கொண்டிருக்க, நாடக கம்பெனி பற்றிய தகவல்களை மட்டும் விடாமல் சேகரித்துக் கொண்டிருந்தேன். எப்போது எந்த ஊரில் கேம்ப், யார் புதிதாக வந்திருக்கிறார்கள், புதிய நாடகங்கள் என்னென்ன அரங்கேறுகின்றன என்பன போன்ற விஷயங்கள் எப்படியும் என் காதுக்கு வந்து விடும்.

அப்படித்தான் அதிர்ச்சி தரத்தக்க தகவல் ஒன்று, ஒருநாள் வந்து சேர்ந்தது.

பாலகானசபா நாடகக் குழு 'விருந்த



## மூன்றாவது முறையாக...

பணக்கஷ்டத்தால் தவித்துக் கொண்டிருந்தது அப்போது. இதனைக் கேள்விப்பட்ட எம்.ஆர். ராதா, தானே முன் வந்து, பம்பாய் மெயில், பதிபக்தி நாடகங்களை நடித்துக் கொடுக்க சம்மதித்தார்.

ராதா நடிக்க, அந்த இரு நாடகங்களுக்குமே அமோக வரவேற்பும் வசூலும் கிடைக்க, நாடகக் குழுவில் சிலருக்கு ஒரு புதிய எண்ணம் உருவாகி இருக்கிறது.

'நமது கம்பெனி சிறந்த நாடகங்களைப் போட்டு, அவ்வப்போது நல்ல வசூலானாலும் சரியான நிர்வாகம் இல்லாததால் தான் பணம் தங்குவதில்லை. பேசாமல் எம்.ஆர். ராதாவையே கம்பெனியின் நிர்வாகப் பொறுப்பை ஏற்றுக் கொள்ளச் சொன்னால் என்ன?

– இந்தச் சிந்தனை, பேச்சளவில் இல்லாமல் ஒரு விவாதமாக மாறி, மோதலில் முடிந்து, கம்பெனியே இரு குழுவாகப் பிரிந்து விட்டது.

ஒரிஜினல் பாலகானசபா, பொன்னுசாமிப்பிள்ளை தலைமையிலேயே ராதாவின் நாடகங்களைப் போட்டுக் கொண்டிருக்க, பிரிந்து வந்த கலைஞர்கள் டி.கே. ராமச்சந்திரன் (பின்னாளில் பிரபல வில்லன் நடிகராக வஞ்சிக்கோட்டை வாலிபன் போன்ற படங்களிலும் நடித்தவர்) தலைமையில் தனித்து இயங்கத் தொடங்கினார்கள். அவர்கள் தங்கள் புது முயற்சியை தர்மபுரியிலிருந்து தொடங்க முடிவு செய்து, அங்கே போய்ச் சில தனவந்தர்களின் உதவியையும் பெற்றார்கள்.

இப்படிப் பிரிந்து போனவர்கள் குழுவில் தான் என் சின்னம்மா மகன் வி.சி.மாரியப்பனும் இருந்தார்.

பிரிந்து வந்த டி.கே.ஆர். தலைமையிலான குழுவுக்குப் பொருளாதார ரீதியில் பலம் இல்லை. அவர்கள் நாடகம் நடத்தக் கொட்டகை கூடக் கிடையாது.

தர்மபுரியில் ஒரு ரைஸ்மில் ஓனரைப் பிடித்து, அந்த மில்லிலேயே நாடகம் போட அனுமதி வாங்கினார்கள்.

பொதுவாக அரிசி ஆலைகளில் நெல் காய வைக்க, மேடைபோல விஸ்தாரமாக ஓர் உயர்ந்த திண்ணை கட்டி வைத்திருப்பார்கள். அதையே 'ஸ்டேஜா'க வைத்துக் கொண்டு நாடகம் போடுவது என்று தீர்மானித்தார்கள்.

முதலில், விமலா அல்லது விதவையின் கண்ணீர் என்கிற நாடகம் போட முடிவாயிற்று.

அந்நாடகத்தில் முருகன்–முருகாயி என்று இரு நகைச்சுவைப் பாத்திரங்கள். அவற்றுள் 'முருகன்' பாத்திரத்துக்கு யாரைப் போடலாம் என்று யோசித்து, இறுதியில் 'ராமசாமி வந்தால் சரியாக இருக்கும்' என்று முடிவு செய்திருக்கிறார்கள்.

**வி**.சி.மாரியப்பன் தன் தாயாருக்குத் தகவல் சொல்லி, எப்படியாவது என்னைக் கூட்டி வந்துவிடும்படிச் சொல்லியனுப்பியிருக்கிறார். என் சின்னம்மா, ரகசியமாக என்னிடம் வந்து விஷயத்தைச் சொன்னார்.

"முன்ன மாதிரி இல்லையாம். இவங்க கம்பெனியில நல்ல சாப்பாடு போடுறாங்களாம். அத்தோட பேரு, புகழ் கிடைக்கறதுன்னா போகவேண்டியதுதானே? இந்த ஒன்னரை ரூவா சம்பளம்தானா உன் வாழ்க்கை?" என்று கேட்டார் என் சின்னம்மா.

எனக்கு பயமாக இருந்தது. ஒரு வருடம் அமைதியாக ஓடிக்கொண்டிருந்த வாழ்க்கை மறுபடி ஒரு புயல் வந்தால் தாங்குமா?

என் சின்னம்மா எனக்கு மேலும் பல நம்பிக்கையூட்டும் வார்த்தைகளைப் பேசி, எனக்குள் இன்னும் அணையாமல் கனன்று கொண்டிருந்த கனலை மேலும் ஊதிப் பெரிதாக்கினார்.

கலை...கலை.. நாடகம்... மறுபடி நடிப்பு... புகழ்... அந்தஸ்து...

மறுபடி வீட்டை விட்டு ஓடுவதா? அதில் ஒன்றும் தப்பில்லை என்பது மாதிரி என் சின்னம்மா என்னை சமாதானப்படுத்தினார். அவர் இந்த விஷயத்தில் அத்தனை அக்கறை காட்டியதற்கு முக்கியமான காரணம் ஒன்று இருந்தது.

வி.சி. மாரியப்பன் மட்டுமல்ல; என் சின்னம்மாவின் அடுத்த இரு பிள்ளைகளும் இப்போது அந்த நாடகக் கம்பெனிக்குப் போய்ச் சேர்ந்திருந்தனர். நானும் போனால் பொறுப்பாகத் தம்பிகளையும் பார்த்துக் கொள்வேனே என்று அவர் நினைத்தார்.

மிக நீண்ட மனப் போராட்டத்தின் முடிவில், நான் மீண்டும் நாடகக் கம்பெனிக்குப் போய்விடுவது என்று முடிவு செய்தேன்.

மூன்றாவது முறையாக வீட்டை விட்டு ஓடிப்போனேன்.

(தொடரும்)

# பாலம்



●● 1957ல் தி.மு.க.விற்காக நான் எழுதி வெளியிட்ட தி.மு.க. தேர்தல் பாடல்கள் புத்தகம் எவரேனும் வைத்திருந்தால் அனுப்பி உதவவும். நன்றி.

**முகவை அரசுமணி,**
**4/311-F. குமரன் படித்துறை தெரு,**
**பரமக்குடி -623 707.**

●● பி.ஏ. பெரியநாயகி, யூ.ஆர். ஜீவரத்தினம், சி. ஹொன்னப்ப பாகவதர் ஆகியோர் பாடல்கள் அடங்கிய கிராமஃபோன் ரிகார்ட் அல்லது கேசட் வைத்திருப்பவர்கள், பிரதி எடுத்துக் கொடுத்து உதவினால் செலவுகளை ஏற்கிறேன்.

**சா. பாலசுப்பிரமணியம்,**
**2/3. சுப்பராயர் அக்ரஹாரம்,**
**மதுரை - 625 001.**

●● பழைய National Geographic இதழ்கள் நிறைய உள்ளன. தேவைப்படுவோர் நேரில் வந்து பணம் செலுத்திப் பெறலாம்.

**நா. இராமானுஜன்,**
**D-107-F. சங்கீதா காலனி,**
**அண்ணாமெயின் சாலை,**
**கே.கே.நகர்,**
**சென்னை - 600 078.**

●● தஞ்சை ஓவியம் கற்றுக் கொள்ள நீண்ட நாள் ஆசை. திருச்சி நகரில் கற்றுத் தருவோர் தொடர்பு கொள்ள விருப்பம்.

**ஆர். புவனேசுவரி,**
**15, முதல் கிராஸ், மூன்றாவது மெயின்,**
**ஸ்ரீநிவாசாநகர் (வடக்கு), திருச்சி - 620 017.**

●● விகடனில் பணியாற்றிய 'கோபு' நடத்திய "தேவன்" இதழ் யாரிடமாவது இருந்தால், அதில் நான் எழுதிய ஒரு சிறுகதையை ஜெராக்ஸ் எடுத்துக் கொள்ள ஆவல்.

**கே. பஞ்சாபகேசன்,**
**20. கிருஷ்ணசாமி அவென்யு,**
**சென்னை - 600 004.**

●● தேங்காய் சிரட்டை (கொட்டாங்குச்சி) யிலிருந்து பிளைவுட் மற்றும் கலைப்பொருட்கள் தயாரிக்கும் தொழில் நுட்பம் தேவைப்படுகிறது.

**வெ. சூர்யதாசன்,**
**15, வ.உ.சி. தெரு,**
**மதுக்கூர், தஞ்சை (மாவ) 614 903.**

●● ஆரணி குப்புசாமி முதலியார், வடுவூர் துரைசாமி ஐயங்கார் ஆகியோர் எழுதிய நாவல்கள் விற்பனைக்கு இருந்தால் தொடர்பு கொள்ளவும்.

**எச். ரம்ணிக்லால்,**
**37, பொன்னுரங்கம் சாலை,**
**கிழக்கு ஆர்.எஸ்.புரம்,**
**கோவை - 641 002.**

●● கற்றுலா செல்வதில் மிகுந்த விருப்பம் உடைய எனக்கு பழைய பைனாகுலர் தேவைப்படுகிறது. நல்ல நிலையில் இருக்குமானால் விலை தெரிவிக்கவும்.

**எஸ். நீலகண்டமூர்த்தி,**
**இளநிலை உதவியாளர்,**
**ஊராட்சி ஒன்றியம்,**
**சாத்தான்குளம் - 628 704.**

●● கவிஞர் கண்ணதாசன் படைப்பு "ஸ்ரீ கிருஷ்ண அந்தாதி" உறவினருக்குத் தர, அவர்கள் தொலைத்து விட்டார்கள். கைவசம் யாரிடமாவது இருந்தால் கொடுத்து உதவும்.

**ஆதி பகவன்,**
**5, வேம்புலியம்மன் கோயில் தெரு விரிவு,**
**பிருந்தாவனநகர்,**
**பழவந்தாங்கல்,**
**சென்னை - 600 114.**

●● விழுப்புரம் வட்டாரத்தில் எவரேனும் HAM ரேடியோ வைத்திருந்தால் என்னுடன் தொடர்பு கொண்டு அதனை நடத்தும் முறையைக் கற்றுத் தர வேண்டுகிறேன்.

**கே. துக்காராம்,**
**62. வள்ளலார் நகர்,**
**வண்டிமேடு,**
**விழுப்புரம்,**
**605 602.**

●● வாடகை நூல் நிலையத்துக்கு உபயோகப்படக்கூடிய சுமார் 500 தமிழ் ஆங்கில நாவல்கள் உள்ளன. தேவைக்குத் தொடர்பு கொள்க.

**த. அழகப்பராசு,**
**4/184, திருவள்ளுவர் நகர்,**
**மேடவாக்கம்,**
**சென்னை.601 302.**

✉ பக்கத்து வீட்டுப் பெண்ணிடம் பேசிக் கொண்டிருந்தது போன்ற யதார்த்தமான உணர்வை ஏற்படுத்தியது ரஞ்சிதாவின் ஒப்பனையற்ற பேட்டி. வாழ்க்கை பற்றியும், சமூக நலன்குறித்தும் இப்படி தெளிவான கண்ணோட்டமுள்ள இவரைப் போன்ற பெண்கள், 'தொழில்' என்ற போர்வையில், தமிழ் சினிமாவுக்காக செய்து கொள்ளும் சமரசங்களைத்தான் ஏற்றுக் கொள்ள முடியவில்லை...!

கள்ளிப்பட்டி, கே. ஸ்டாலின்.

✉ உலகப்பட விழாவில் கலந்து கொண்ட சில படங்களின் தரத்தை விமர்சித்த கையோடு படம் சம்பந்தப்பட்டவர்களின் மினிபேட்டியையும் (பெட்டிச் செய்தியாக) போட்டு வாசகர்களை அசரவைத்த உம்மை என்ன சொல்லிப் பாராட்டுவது?

திருப்பூர் -1, ப. சங்கர்.

✉ 'மூப்பனாரின் கூட்டினால்தான்; ரஜினி சொன்னதால்தான்; பத்திரிகைகள் எழுதியதால் தான்; இல்லவே இல்லை அ.தி.மு.க. எதிர்ப்பு அலைதான்' என்று தி.மு.க.வின் வெற்றிக்குப் பலரும் கருத்துச் சொல்லிக் கொண்டிருந்தாலும், புதுக்கோட்டை இடைத் தேர்தல் முடிவுகள் வந்தபின் நாம் ஒரு தெளிவான முடிவுக்கு வரலாம். அதாவது தி.மு.க. வெற்றி பெற்றால், பொதுத் தேர்தலிலும் மக்கள் மனமுவந்து தி.மு.க.விற்கு வாக்களித்திருக்கிறார்கள் என்று கருதலாம்; அது மட்டுமல்ல; தற்போதைய குறுகிய கால தி.மு.க.ஆட்சிக்கு மக்கள் கொடுத்த நற்சான்றிதழாகவும் எடுத்துக் கொள்ளலாம்.

திருச்சுழி, சுந்தர்.அழகேசன்.

✉ தி.மு.க.-த.மா.கா.வுக்கு எதிரான அரசியல் சக்தியை இடைத்தேர்தல் வெளிப்படுத்தும் என்று நினைப்பவர்களுக்கு ஏமாற்றம் தான் மிஞ்சும். ஆனால் விலைவாசி உயர்வு, தி.மு.க.' ஆதரவு வோட்டை ஓரளவு குறைக்கும் என்பதும் உண்மைதான்!

மயிலாடுதுறை, ஜெ. ரஜினி ராம்கி.

✉ பன்முகத் திறமை காட்டும் 'வென்ட்ரிலோக்கிஸ்ட் வெங்கியின் பேட்டி ரொம்பவும் வித்தியாசமாக இருந்தது. ஆறாம் கிளாஸில் மூன்று முறை 'கோட்' அடித்த அவருக்கு இப்படியொரு பிரகாசமான எதிர்காலம் இருக்கக்கூடும் என்பதை அவரே எதிர்பார்த்திருக்க மாட்டார். 'ஆண்டவன் ஒரு கதவை மூடினால் இன்னொரு கதவைத் திறப்பான்' என்ற பொன்மொழி வெங்கி விஷயத்தில் நிதர்சனமாகி விட்டதே!

மதுரை - 14, எஸ். வைத்தியநாதன்.

✉ கல்கி 26.1.97 இதழில் வே.ந.கதிர்வேல் குறிப்பிட்டது போல், வரும் 2000ஆம் வருடத்தில் பிப்ரவரி மாதத்திற்கு 30 நாட்கள். அதன் பிறகு பிப்ரவரி மாதத்திற்கு 30 தேதிகள் வருவது 2400ஆம் ஆண்டில். 400 ஆண்டுகளுக்கு ஒரு முறை பிப்ரவரி மாதத்திற்கு 30 தேதிகள் வரும். 1000 ஆண்டுகளுக்கு ஒரு முறையல்ல.

ஸ்ரீரங்கம், ஜகதீஸன்.

## வட்டமேஜை

# தலைமைப் பண்புகள் மறுபிறவி எடுக்குமா?

✉ என்ன சொல்ல வருகிறார் சி.எஸ்? அரசியல்வாதிக்கு இன்னின்ன அடிப்படை தகுதி தேவை என யார் வரையறுப்பது? எப்படி அறிவிப்பது? பள்ளிகள், கல்லூரிகளில் பாடம் ஏற்படுத்தலாம் என்றால் படிக்காதவர்களும்தான் அரசியலில் ஈடுபட முடியுமே. அரசியல் சட்டத்தில் அரசியல் வாதிகளின் அடிப்படைத் தகுதிகள் நிர்ணயிக்கப்பட்டால் அவை ஒத்து வராத காரணத்தினால் பாதிக்கப்படும் அரசியல்வாதிகள் இதையும் திருத்த முற்படமாட்டார்கள் என்பது என்ன நிச்சயம்? பரிசுத்தமான நிபுணர் குழு அமைக்க எத்தனை போட்டிகளோ, சிபாரிசுகளோ? இவற்றை மீறி யார் அமைப்பது? தன்னலமின்மை, தியாகம், பெருந்தன்மை போன்ற தலைமைப் பண்புகள் மறுபிறவி எடுத்தால்தான் சி.எஸ்.ஸின். லட்சியம் ஈடேறப்பெறும்.

ஸ்ரீரங்கம் - 6, அ. சம்பத்.

## ரூ. 20/- பரிசுக் கடிதம்

✉ 'முட்டைகளை வீணாக்கலாமா' கட்டுரையில், 'ஒன்று குஞ்சு பொறிக்க வேண்டும்; இல்லையேல் குப்பையில் போட வேண்டும்...' என்ற வரிகளைப் படித்தபோது எரிச்சலாக வந்தது. இப்போது அரிசி கோதுமை விலை எகிறி விட்டது. அதனால் கர்ப்பிணியாக உள்ள பெண்மணிகளின் வயிற்றிலுள்ள கருவை அழித்துக் குப்பையில் எறிந்து விடலாமா? இதையும் 'நபார்டு' துணை மேலாளரிடம் கேளுங்கள்.

வேலூர் -6, எல். கோபாலகிருஷ்ணன்.

✉ எழுத்தாளர் பிரபஞ்சன் யாரிடமாவது சபதம் போட்டு, தோற்று, பேரை மாற்றிக் கொண்டாரா? 26.1.97 தேதி கல்கியில்-பூக்கள் நாளையும் மலரும்-எழுதியவர் பெயர் பிபரஞ்சன் என்று இருக்கிறதே.

திருப்பாதிரிப்புலியூர்-2, வசந்தி ரவிச்சந்திரன்.

*(தவறுக்கு வருந்துகிறோம் - ஆர்.)*

இந்துஸ்தானி சங்கீதத்தை, காலை நாலரை மணிக்கு எழுந்து சாதகம் செய்ய வேண்டும் என்று அவனது குரு உத்தரவிட்டிருந்தார். தான் எழுந்தவுடன், முத்துக்குமார் எனக்கு போன் பண்ணி விடுவான். "நீயும் கர்நாடக சங்கீதத்தை சாதகம் செய்" என்று என்னைப் பாதி தூக்கத்தில் எழுப்பிக் கடுப்பேற்றுவான். மாலையில் சந்திக்கும்போது, "என்னடா, நான் போனை வச்ச உடனேயே நீ மறுபடியும் குறட்டை விட ஆரம்பிச்சுட்டியா?" என்று வேறு கேட்பான். என்றாலும் அந்தக் காலகட்டத்தில் நான் அதிகாலையில் செய்த சாதகம் எனக்கு இப்போது மிக உதவியாக இருக்கிறது.

முத்துக்குமாரோடு எனக்கு உள்ள ஆழ்ந்த நட்பைப் பற்றிச் சொல்லும்போது, இதைப் போன்ற 'இசைமயமான' சம்பவங்களைத்தான் குறிப்பிட வேண்டியிருக்கிறது. எங்கள் நட்பு மலர்ந்ததும் வளர்ந்ததும் இசையைச் சுற்றித்தான்.

என் தாத்தா பாபநாசம் சிவன் அவர்கள் நடத்தி வந்த பஜனைகளுக்கெல்லாம் தவறாமல் வந்து அவன் தன் தந்தையுடன் பங்கெடுத்துக் கொள்வான். நாங்கள் அறிமுகமானது இப்படித்தான்.

பிறகு கும்பகோணம் ராஜப்பா ஐயரிடம் நான் மிருதங்கம் கற்றுக் கொள்ளத் தொடங்

# அன்பு மிகுதியால் ஓர் ஒற்றாடல்!

• அசோக் ரமணி





• முத்துக்குமார்

கினேன். முத்துக்குமார் அவரிடமே கடம் கற்றுக் கொள்ளத் தொடங்கினான். கிருஷ்ணகான சபாவில் நடைபெற்ற இந்த வகுப்புகளில் எங்கள் நட்பு பலமானது. நான் கிண்டி பொறியியல் கல்லூரியில் படிக்க, அவன் கான்பூர் ஐ.ஐ.டி.யில் எம்.எஸ்.சி., (பிசிக்ஸ்) படித்தான். பிறகு பி.எச்.டி.யும் செய்தான். ஃபல்குனி மித்ரா என்பவரிடம் இந்துஸ்தானி சங்கீதம் பயின்றான். டி.என். கிருஷ்ணன் போன்ற பிரபலங்களின் கச்சேரிகளுக்குக் கூட கடம் வாசித்திருக்கிறான்.

இரண்டு பேருமே நிறைய கச்சேரிகளுக்குப் போவோம். மேதைகள், எங்களைப்

## பாடகர் அஷோக் ரமணி:

போன்ற இளைஞர்கள் – யாருடைய நிகழ்ச்சியாக இருந்தாலும் பாகுபாடில்லாமல் சென்று விடுவோம். கச்சேரி முடிந்ததும் அதைப் பற்றி நீண்டதொரு விமர்சனமும், விவாதமும் செய்து விட்டுத்தான் வீடு திரும்புவோம்.

ஒருமுறை இப்படி வீடு திரும்பும்போது இரவு (அதிவிடியற்காலை?) ஒன்றரை மணியாகி விட்டது. அவன் வீட்டிலிருந்து யாரோ வெளியேறுவதை மேலோட்டமாக மட்டுமே கவனித்து, கச்சேரியைப் பற்றிப் பேசியபடியே அவன் வீட்டுக்குள் நுழைந்தோம். அப்போதுதான் தெரிந்தது – அவன் வீட்டிலிருந்து சில பொருள்களைத் திருடிக் கொண்டு வெளியே



றுபவனைத்தான் நாங்கள் பேச்சு மும்முரத்தில் கண்டுகொள்ளாமல் இருந்திருக்கிறோம் என்பது!

**ப**டிப்பு முடிந்ததும் ஜெர்மனியில் உள்ள ஒரு பல்கலைக் கழகத்தில் ஆசிரியர் வேலையில் சேர்ந்தான் முத்துக்குமார். என் இசைக் கச்சேரிகளின் கேஸட்டுகளைத் தவறாமல் அனுப்பச் சொல்வான். வாரம் ஒருமுறையாவது போனில் தொடர்பு கொண்டு, "போன வருஷத்தை விட இந்த வருடம் இந்த ராகத்தைப் பாடுவதிலே தேர்ச்சி அடைஞ்சிருக்கே'' என்பது போல் ஆழமாக விமர்சிப்பான்.

அவனுக்கு நகைச்சுவை உணர்ச்சி அதிகம். தன் கச்சேரி விவரங்களை ஒரு டயரியில் எழுதுவது அவன் வழக்கம். சில கச்சேரிகளுக்கு எதிரே "டி.எம்" என்று குறிப்பிட்டிருந்தான். விவரம் கேட்டபோது, "தேங்காய் மூடியின் சுருக்கம் அது. பணம் வாங்காமல் செய்த கச்சேரி" என்று சிரித்தான். "அடுத்த நாள் வீட்டிலே அற்புதமான தேங்காய்த் துவையல் தெரியுமா?" என்றான். இதற்குப் பிறகு நானும் என் டயரியில் நிறைய சங்கேத வார்த்தைகளைப் பயன்படுத்தத் தொடங்கினேன்!

டிசம்பர் இசை விழாவில் என் கச்சேரிகளை எப்படி திட்டமிடுவது என்று வழி சொல்லிக் கொடுத்தவனே அவன்தான். எவ்வளவு இடங்களில் பாடுவது என்பது பற்றியெல்லாம் ஆகஸ்ட் மாதமே தயார் செய்து கொள்ள வேண்டும் என்பான்.

சென்ற வருடம் ஏப்ரல் மாதம் அமெரிக்காவில் சில கச்சேரிகள் செய்வதற்காகப் போனேன். தாத்தாவின் சில பாடல்களை யாவது பாட வேண்டும் என்று அவன், ஜெர்மனியிலிருந்து சென்னைக்கு என்னைத் தொடர்பு கொண்டு கூறியிருந்தான்.

ஆனால் முதல் மூன்று கச்சேரிகளிலும் தாத்தாவின் பாடலைப் பாட முடியாமல் போய் விட்டது. சிகாகோவில் நான் தங்கியிருந்த வீட்டுக்கு போன் செய்து (அந்தத் தொலைபேசி எண்ணை அவன் எப்படிக் கண்டுபிடித்தான் என்பது எனக்கு இன்னும் ஆச்சர்யம்.) "இன்டர்னெட்டிலே உன் கச்சேரிகளைப் பார்த்தேன். தாத்தாவின் ஒரு பாட்டைக் கூடக் காணோமே!" என்றான். இன்டர்னெட்டில் அவன் பார்த்ததாகச் சொன்னதெல்லாம் புளுகு என்று தெரிந்தாலும், எப்படி நான் தாத்தாவின் பாட்டைப் பாடாமல் விட்டதை அவன் கண்டுபிடித்தான் என்று எனக்கு ஆச்சர்யம்.

அடுத்து நியூஜெர்ஸியில் நடந்த கச்சேரியில் தாத்தா இயற்றிய "அம்பா மனம் கனிந்து" என்ற பாடலைப் பாடினேன். மறுநாளே போன் செய்து இது குறித்துப் பாராட்டிவிட்டு, "அடுத்த கச்சேரியில் தாத்தாவின் தேவி பாதம் பாட்டைப் பாடு" என்றான்.

அடுத்து டொரன்டோவில் நடைபெற்ற கச்சேரியில் அந்தப் பாடலை நான் பாடவில்லை. இரண்டாவது நாளே, "நான் சொன்னதைத் தவிர மற்ற எல்லாத்தையும் பாடினியாக்கும்?" என்று உரிமையோடு கடிந்து கொண்டான்.

அமெரிக்காவில் அங்கங்கே உள்ள தன் நண்பர்களை என் கச்சேரிகளுக்கு அனுப்பி கேட்கச் செய்து, அவர்கள் மூலம் விவரமறிந்து, எனக்கு டெலிபோனிலேயே கிடுக்கிப்பிடி போட்டு விட்டான்.

தன்னோடு இந்துஸ்தானி இசை பயின்ற சுமித்ராவைத் திருமணம் செய்து கொண்டு, அமெரிக்காவில் செட்டிலாகி விட்டான் முத்துக்குமார். வரும் மார்ச் மாதம் சில கச்சேரிகளுக்காக அமெரிக்கா செல்ல இருக்கிறேன். அவன் வீட்டில்தான் தங்குவேன். அதை நினைத்தாலே சந்தோஷப் பிரவாகமாக இருக்கிறது!"

— அருண்சரண்யா

# புரட்சி செய்த புதுக்கோட்டை

முற்றிலும் ஜனநாயகவாதியாகவே அரசாண்டவர் புதுக்கோட்டை மன்னர் ஸ்ரீ பிரகதாம்பதாஸ் ராஜா ராஜகோபாலத் தொண்டமான். ஆறு வயதில் முடிசூட்டிக் கொண்ட மன்னர் அரியணை துறந்த போது வயது இருபத்தொன்பது! கடைசி வரை திருமணமே செய்து கொள்ளாமல் தமது எழுபத்து ஐந்தாம் வயதில் மறைந்தார்.

சுயாட்சி அரசு என்று இந்தச் சென்னை மாநிலத்தில் விளங்கியது புதுக்கோட்டை மட்டுமே. இப்போதைய சென்னை நகரத்தை விடவும் பரப்பளவில் குறைந்த சிற்றரசு. 'ஸ்டேட் மெர்ஜர்' என்று சர்தார் வல்லபபாய் பட்டேலின் முயற்சியால் சுதேச சமஸ்தானங்களை இந்திய அரசோடு இணைத்தபோது, 1948-இல்... எவ்விதச் சிறு தயக்கமும் இன்றி அரசை ஒப்படைத்தவர் புதுக்கோட்டை மன்னர். அப்போதும் 'சமஸ்தான கஜானா' நிரம்பியே இருந்தது. அதையும் அப்படியே அரசிடம் ஒப்படைத்தார்.

1935-36 ஆம் ஆண்டிலேயே, இந்த மன்னரின் ஆட்சிக் காலத்தில் 'பிராஞ்ச் காலேஜ்' என்று வழங்கப்பட்ட உயர்நிலைப் பள்ளியில் வேளாண்மையை ஒரு விருப்பப் பாடமாகத் தொடங்கினார்கள். அதற்கென செய்முறைப் பயிற்சிக்காக ஒரு சிறு தோட்டமே அமைக்கப்பட்டிருந்தது.

7 முதல் 11 வயது வரையுள்ள குழந்தைகள் அனைவரும் கட்டாயம் பள்ளிக்கூடம் போக வேண்டும் என்று சட்டம் ஏற்படுத்தப்பட்டது இந்த மன்னர் ஆட்சிக்கு வந்த போதுதான்.

புதுக்கோட்டை சமஸ்தானத்தில் இந்த மன்னர் பிறப்பதற்கு முன்னமே 'நடமாடும் நூலகம்' ஏற்பட்டிருந்தது. பெட்டிகளில் புத்தகங்களை நிரப்பிக் கொண்டு போய் கிராமங்களில் படிக்கத் தருவார்கள். ஆனால் பெண்களுக்கு என்றே நான்கு பொது நூலகங்கள் இவர் காலத்தில்தான் ஏற்பட்டன என்பது மிகவும் குறிப்பிடத்தக்க அம்சம்.

அந்த நாட்களில் ஆதிதிராவிடர்களுக்காக என்று தனிப்பட்ட பள்ளிகள் இருந்தன. கொச்சையாக 'சேரி ஸ்கூல்' என்று அவை வழங்கப்பட்டதுண்டு. அந்த நிலையை மாற்றியமைத்தது இந்த மன்னரின் ஆட்சியில் தான். 1929-30 ஆம் ஆண்டு முதல் ஆதிதிராவிடர் பிள்ளைகள் எந்தப் பள்ளியிலும் எல்லோருடனும் சமமாக அமர்ந்து கல்வி பயிலலாம் என்று வழிவகை செய்யப்பட்டது.

அதே ஆண்டில்தான் 'சாரணர் படை' புதுக்கோட்டை சமஸ்தானத்தில் பிரபலமானது. அடுத்த சில ஆண்டுகளிலேயே தாராளமான படிப்புதவித் திட்டம் நடைமுறைப் படுத்தப்பட்டது. மிகத் திறமையான மாணவர்களும், மிகவும் ஏழைமையில் இருந்தவர்களும் இதனால் பயன் பெற்றார்கள்.

1924-ஆம் ஆண்டு 'லெஜிஸ்லேட்டிவ் கவுன்ஸில்' ஏற்பட்டது. இதற்கு ஐம்பது உறுப்பினர்கள். தேர்வு முறையில் 35 பேரும் நியமன முறையில் 15 பேரும். இந்த மன்னர் முடிசூடிய இரண்டாவது ஆண்டில் ஆதிதிராவிடர் ஒருவரும், பெண்மணி ஒருவரும் உறுப்பினராக நியமிக்கப்பட்டார்கள்.

கிராமப்புற வளர்ச்சிக்கு என்று திட்டமிட்டு பள்ளிக்கூட ஆசிரியர்களுக்குப் பயிற்சியளிக்கப்பட்டது. அப்படிப் பயிற்சி பெற்றவர்கள் 'கிராமப்புற வழிகாட்டிகள்' என்கிற நிலையில், கிராமப்புறங்களில் வேலைக்கு அனுப்பப்பட்டார்கள்.

மிகவும் அழகான ஒரு கிரிக்கெட் ஸ்டேடியம் இருப்பது புதுக்கோட்டை மன்னர் கல்லூரியில்தான். கல்லூரியின் எதிரேயுள்ளது இந்த ஸ்டேடியம். மறைந்த இந்த மன்னரும் அவருடைய சகோதரர்களும் கிரிக்கெட்டில் மிகுந்த விருப்பமுடையவர்கள்.

முந்தைய தலைமுறையின் 'கனவுக் கண்ணனாக' விளங்கிய நடிகர் ஜெமினி கணேசன் இந்த மன்னர் இராஜகோபாலருடைய விளையாட்டுத் தோழர்; படிப்புத் தோழர்.

மன்னர் அரசு கட்டில் ஏறியபோது ஆறு வயதுதான். ஆனாலும் அவர் சார்பாக அரசை வழிநடத்திச் செல்ல அற்புதமான சான்

றோர்கள் இருந்தார்கள். அரசர் என்ற முறையில் பிரத்தியேகமாகக் கல்வி புகட்டப் பேராசிரியர்களை ஏற்பாடு செய்தார்கள். தமிழ், சமஸ்கிருதம், உருது, ஆங்கிலம் தவிர உடற்பயிற்சிக் கல்வியும் தரப்பட்டது. கணக்குப் பாடமும் அறிவியல் பாடமும் கற்பிக்கப்பட்டபோது, செய்முறைத் தேர்வுக்கான ஆய்வுக்கூடம் அரண்மனைக்கு வரவில்லை. மன்னர்தான் கல்லூரி ஆய்வகத்துக்குப் போனார். பரந்த அறிவு பெற வேண்டும் என்பதால் வார, மாத, இதழ்களையும் நாளிதழ்களையும் படித்தார்.

மேடை நடிப்பிலும் திறமையானவர் இவர். திருச்சிராப்பள்ளி கண்டோன்மெண்ட் பகுதியில் உள்ள 'புதுக்கோட்டை அரண்மனை'யில் கடைசி காலம் வரை வாழ்ந்த மன்னர், ஒரு போதும் சோம்பி இருந்ததில்லை. கார் பழுது பார்ப்பது முதல் தொழில்நுட்ப அறிவில் மிகுந்த ஆர்வம் காட்டினார். ஓவியத்திறனும் உண்டு.

தனிச்சிறப்பு வாய்ந்த புதுக்கோட்டை சமஸ்தான வரலாறு (A MANUAL OF THE PUDUKKOTTAI STATE) மூன்று தொகுதிகள் ஆறு பாகங்களாக... வெளியிடப்பட்டது இந்த மன்னரின் ஆட்சியில்தான். அற்புதமான வரலாற்றுக் கருவூலம் இது.

# மன்னர்!



எதிலும் லாபம் தேடுகிற அரசியல்வாதிகள் மன்னர் குடும்பத்தையும் விட்டு வைக்கவில்லை. ஒரு பொதுத் தேர்தலில் மன்னரின் தம்பியைக் காங்கிரஸ் கட்சி தமது வேட்பாளராகத் தேர்தலில் நிறுத்தி, வெற்றியும் பெற்றது. அப்பகுதியில் ஜாதி ஓட்டு அடிப்படையில் வெற்றி பெறக்கூடியவர் என்றுதான் அரசியல்வாதிகள் அவரைத் தேர்ந்தெடுத்தார்கள். இதையெல்லாம் உணர்ந்ததாலோ என்னவோ, தம்பியின் தேர்தல் வெற்றிக்காக ஒரு அறிக்கையாவது வெளியிடுவார் என்று பலரும் எதிர்பார்த்த நிலையிலும் மன்னர் அதைச் செய்யவில்லை.

— 'சுப்ர.பாலன்'



# குருவி வீடு

பால்கனியிலிருந்து பார்த்தபோது சின்ன அழுக்கு உருண்டையாகத் தெரிந்தது.

"இதால பாருங்க..." பூர்ணா பைனாகுலர் செட்டை நீட்டினாள். கிரிதர் கண்ணில் அதைப் பொருத்திக் கொண்டான். அழுக்கு உருண்டை அற்புதமாக மாறியது! சணலும் தேங்காய்ப் பஞ்சும் ஒட்டடையும் காய்ந்த புல் லும் கொண்டு கட்டிய குருவி வீடு. அதில் ஒட்டிக்கொண்டு காகிதக் கிழிசல்கள். குவித்த ஒரு கையின் அளவில், வடிவத்தில் இருந்தது. ஒரு பக்கத்தில் துவாரம். அதன் மேல் தொப்பி முனை போல சிறு மூடி. துவாரத்தின் வழியே... கிரிதர் மூச்சைப் பிடித்துக்கொண்டு பார்த்தான். அந்த துவாரத்தின் வழியே ஒரு சின்னஞ்சிறு தலை தெரிந்தது. வீச்சரிவாள் வடிவத்தில், ஆனால் வெறும் ஊசி கனத்தில் அலகு மின்னியது.

"பர்பிள் ஸன் பர்ட். அதும் பொரு... முட்டை இட்டு அடைகாக்கறது." பூர்ணா இலை அசைவதுபோல் மெதுவாகச் சொன்னாள்.

உற்றுப் பார்த்தான் கிரிதர். குருவி கண் மூடி திருப்தியாக உட்கார்ந்திருப்பதாகப் பட்டது. அதற்கென்று ஒரு வீடு, ஒரு குடும்பம் கிடைத்துவிட்ட திருப்தி.

"அதோ பாருங்க... அதுதான் ஆண்!" பூர்ணா மறுபடியும் மூச்சடக்கிக் கிசுகிசுத் தாள்.

அடர்ந்த அந்த செம்பருத்திச் செடியின் மேல் கிளையில் ஒரு அகலமான பட்டுப் பூச்சி போல் ஒளிர்ந்து, பறந்து, படபடத்தது. ஊதா நிறத்து இறக்கைகள் மின்னின. கழுத்துப் பகுதி மஞ்சள் அதனுடன் போட்டி போட்டது. "சிட் சிட் சிட்! சீடு சிட் சிட்...!" என்று ஓயாத



புலம்பல் ஒலியும் கூடவே.

பூர்ணா கிரிதரின் தோள் தொட்டு இலேசாகக் கூப்பிட்டாள். "உள்ளே போயிடலாம் வாங்க... அதுங்க ரொம்ப பயந்துடுச்சு, நம்மைப் பார்த்து."

ஒற்றைக் கட்டில் ஓரமாய் ஒதுங்கியிருந்த அவள், பெட்ரூமைக் கடந்து ஹாலுக்கு வந்தார்கள்.

"டீ கொண்டு வரேன்." என்று அம்மா உள்ளே எழுந்து போனார்.

கிரிதர் நெகிழ்ந்து போய்க் கிடந்தான்.

"என்ன மௌனமாயிட்டீங்க..." அவனிடமிருந்த பைனாகுலரை வாங்கி உறையிலிட்டபடி கேட்டாள்.

## சிஷ்யா

"எவ்வளவு அற்புதம் பூர்ணா! வெறும் குப்பைகளைக் கொண்டு ஒரு வீடு கட்டியிருக்குப் பார்த்தீங்களா... அதுல இவ்வளவு இணக்கமான ஒரு குடித்தனம். நாம உத்துப் பார்க்கறோம்னதும் அந்த ஆண் குருவிக்கு எத்தனை கோபம்! குரல்ல ஆங்காரத்தை கவனிச்சீங்களா?"

பூர்ணா சிரித்தாள். "புரொடெக்டிவ் இன்ஸ்டிங்ட். காப்பாத்திக்கணும்ங்கற உள்ளுணர்வு. வம்சம் விருத்தியாகணும், நிலைக்கணும், நீடிக்கணும்ங்கறதுக்காக இயற்கை அதும் உடம்போட விதைச்சிருக்குற நியதிகள்."

"மனுஷனுக்கும் இருக்கறதுதானே!"

"என்னோட அனுபவத்தை வைச்சு இதுக்கு பதில் சொல்லணும்னா 'இல்லை' 'கிடையாது'ங்கறதுதான் விடை."

உள்ளத்துக் கசப்பு சற்றும் முகத்தில் தெரியாமல் சொன்னாள்.

நெகிழ்ச்சி அடியோடு கலைந்து போய் அவளை அடிபட்ட பார்வை பார்த்தான்.

"அப்படிப் பார்க்காதீங்க."

"ஏன் பூர்ணா, பழசை நினைச்சுக் கலங்கறீங்க?"

"நீங்கதான் கலங்கிப் போயிருக்கீங்க கிரி. குருஜி அன்னைக்குப் பேசினதுலேர்ந்து கலங்கிப் போயிருக்கீங்க."

குருஜி! - காவி தரித்த சாமியார் இல்லை. பூர்ணா, கிரிதரன், மீனு, தனபால், கண்ணன் கலா, நித்யானந்தம் என்று பதினேழு முதல் இருபத்தேழு வயது வரையிலான பட்டாளத்தோடு, துருத்தி நிற்காமல் பொருந்திய நாற்பத்தைந்து வயது நாராயணன்.

"மாமான்னு கூப்ட்டா பாந்தமாயில்லே. சார்னு சொன்னா கணக்கு வாத்யார் ஞாபகம் வருது..." தனபால் தயங்கியபோது பூர்ணா தான் பெயர் வைத்தாள்.

"குருஜின்னு கூப்பிடலாம்."

நிலைத்து விட்டது.

பெயரோடு துளியும் பொருந்தாத ஜீன்ஸ். எப்போதும் வெள்ளை குர்தா. அதன் பாக்கெட்டில் கைவிட்டபடி சுபாவமாக பேசிக் கொண்டிருந்தவர் திடீரென்று சொன்னார்:

"நீங்க இரண்டு பேரும் ஏன் கல்யாணம் பண்ணிக்கக் கூடாது...?"

'தன் அடி மனசைத் தொட்டுப் பார்த்து விட்டுத் திரும்பி வந்து பேசுகிறாரோ? கிணற்றுக்குள் பாய்ந்து பிடி மணலை அள்ளி மீண்டும் நீரைக் கிழித்துக் கொண்டு எழும் கிராமத்துச் சிறுவனைப் போல...? - கிரிதர் வியப்பில் வாய் திறவாது இருந்தான். பூர்ணாவின் மர்மப் புன்னகை அவனை வாட்டியது.

"என்ன குருஜி! கிரியை, தியாகி ஆக்கிப் பார்க்கணும்னு ஆசையோ...?"

"பூர்ணா! யோசிக்காம வார்த்தையை விட்டுடாதே. எனக்கு வலிக்காது. உனக்குத்தான்



“அன்னியிலிருந்து இன்னி வரைக்கும் நான் ஒரே துணிப் பைத்தியம்! அதுதான் எனக்கு வாழ்க்கையிலேயே பெரிய வீக்னஸ். நான் நினைச்சுக்குவேன்; மற்றவங்களும் சொல்வாங்க – 'இத்தனை பணத்தை துணி மேலே இறைக்கக் கூடாது'ன்னு. ஆனால் என்னால் கண்ட்ரோல் பண்ண முடியாது!”

– இப்படி திருவாய் மலர்ந்திருப்பது வேறு யாருமல்ல; 10,000 சேலைகள் வைத்திருப்பதாகச் செய்திகள் வெளியாயிற்றே, அவர்தான்!

ஆதாரம் : பி.சி. கணேசன் எழுதிய 'வெற்றிச்செல்வி ஜெயலலிதா'

தகவல் : மீனா திருநாவுக்கரசு

வலிக்கும். இப்போ இல்ல.. அப்புறம்... ரொம்ப நாள் கழிச்சு வருத்தப்படுவே. யோசி. இரண்டு பேரும் யோசிங்க...” சொல்லிவிட்டு எலியட்ஸ் பீச்சில் அவர்களைத் தனியாக விட்டு விட்டு விறுவிறுவென்று போய்விட்டார்.

“நாம தனியா அகப்படணும்னு காத்திருந்தார் போலிருக்கு... போகலாமா..?” பூர்ணா சாலை நோக்கி நடக்க ஆரம்பித்திருந்தாள்.

ஸ்கூட்டரை நெருங்கி, ஏறி உட்கார்ந்து “வரேன்” என்று இறுக்கமாய்ச் சொன்னவளிடம் “யோசிக்கறீங்களா பூர்ணா?” என்றான்.

கைனடிக் உறுமல்தான் பதிலாகக் கிடைத்தது.

இன்று அவனே போன் செய்திருந்தான். “கிரி! வீட்டுக்கு வரீங்களா? தோட்டத்துல குருவி கூடு கட்டியிருக்கு. நீங்க பார்த்தா அசந்துடுவீங்க.”

ஞாயிற்றுக்கிழமையின் துவைத்தல், உலர்த்தல், மதியத் தூக்கம் என்ற அட்டவணையை ஒத்திப் போட்டு, அறையைப் பூட்டிக் கொண்டு புறப்பட்டான்.

பூட்டிய பிறகு தோன்றியது - 'முகத்தை இன்னொரு முறை கண்ணாடியில் சரி பார்த்துக் கொண்டிருக்கலாமோ?'

சிரிப்பு வந்தது. புன்னகையுடன் மோட்டார் பைக்கைக் கிளப்பிக் கொண்டு வந்து சேர்ந்தான்.

பூர்ணாவும் புன்னகையுடன்தான் வரவேற்றாள். ஆனால் இப்போது... அந்தப் புன்னகையின் சுவடுகூட அந்த முகத்தில் இல்லை. 'எனக்குச் சிரிக்கவே தெரியாது' என்பது போன்றதொரு சிடுசிடுப்பு. 'நீங்கதான் கலங்கிப் போயிருக்கீங்க' என்று சுட்டிக்காட்டுவதில்கூட அனுதாபமற்ற புறக்கணிப்பு.

என்ன சொல்வதென்று புரியாமல் திகைத்த வேளையில் “டீ சாப்டுங்க” பூர்ணாவின் அம்மா டீயை வைத்துவிட்டு மீண்டும் உள்ளே போய்விட்டார்.

“இத்தனை பேர் இருந்தோமே நம்ம க்ரூப்ல- எல்லாரையும் விட்டுட்டு உங்களையும் என்னையும் ஏன் இணைக்க நினைச்சார் குருஜி? யோசிச்சுப் பார்த்தீங்களா கிரி...?”

“..............”

“ஏன் நித்யானந்தத்தையும் என்னையும் தொடர்புபடுத்தி அப்படி ஒரு எண்ணம் அவருக்கு வரலை? தனபால் ரொம்ப சின்னவன், சரி. கண்ணனும் நானும் கல்யாணம் பண்ணிக்கலாமேன்னு அவருக்கு ஏன் தோணலை...”

“அதையெல்லாம் நான் யோசிக்கலையே பூர்ணா...”

“ஏன்னா, அவங்க எல்லாருக்கும் அப்பா, அம்மா குடும்பம்னு இருக்கு. நீங்க ஒருத்தர்தான் அந்த சங்கிலிகள்லாம் இல்லாதவர். தனிக்கட்டை. ஒரு டைவர்ஸியைக் கல்யாணம் பண்ணிக்கிறதுக்கு நீங்க யாருக்கும் விளக்கம் சொல்ல வேண்டாம். எந்தப் போராட்டமும் இல்லை. அப்படியே எனக்கும்... எனக்கும்.. சினிமா ஸ்டைல்ல சொல்றதுன்னா எனக்கும் வாழ்க்கை கிடைச்ச மாதிரி இருக்கும்.”

கிரிதருக்குச் சகிக்கவில்லை. இரு கைகளை அகல விரித்து முகத்தைக் கவிழ்த்துக் கொண்டான்.

“இப்படி முகத்தை மூடிக்கிறதால உண்மையை இல்லாம பண்ணிட முடியுமா?”

கோபமாய் நிமிர்ந்தான். “பண்ணிட முடியாது. ஒத்துக்கறேன். ஆனால் எல்லாத்தவிட பெரிய உண்மை உங்களோட காம்ப்ளெக்ஸ் - தாழ்வு மனப்பான்மை! நான் உங்களை இத்தனை நாளா பூர்ணாவாத்தான் பார்த்தேன் - not as a divorcee. குருஜீ இந்த விஷயத்தைப் பேசின பிறகும் எனக்கு அப்படி எண்ணம் வரலை. ஆனா உங்களுக்கு வந்துடுத்து... பழசை நினைச்சுக் கலங்கறீங்க.”

பூர்ணா பதில் பேசவில்லை. நீண்ட இறுக்கத்தை உடைத்து அவன் கேட்டான்:

“சரி பூர்ணா. நான் கேட்கற ஒரே ஒரு கேள்விக்குப் பதில் சொல்லுங்க... நம்ம க்ரூப்ல இருந்த எல்லாரையும் விட்டுட்டு என்னை மட்டும் கூப்பிட்டுக் 'குருவிக் கூடு பார்க்க வா'ன்னீங்களே... ஏன்? எனக்கு வேற யாருமே இல்லே; நான் தனியாள்ங்கற அனுதாபத்துனாலயா...?”

“கிரி, ப்ளீஸ்...!” பதறிப் போனாள்.

“என்ன... பதிலையே காணும்?”

அவன் முகத்தைப் பார்க்காமல் பதில் சொன்னாள். “நிச்சயமா அனுதாபத்துனால இல்லை.”

“பின்னே...?”

“யோசிக்கறேன்..” என்றாள் மிக மெதுவாக.

“யோசிங்க. அதோட குருஜி சொன்னதையும் சேர்த்து யோசிங்க. நான் அடுத்த ஞாயிற்றுக்கிழமை வரேன்.”

அவன் மாடிப் படியிறங்கிப் போனபோது அவள் வழியனுப்ப வரவில்லை. செம்பருத்திச் செடியைக் கடக்கையில் “சிட் சிட் சிட்! சீடு சிட் சிட் சிட்!” - வீரியமாகக் குரல் எழுப்பியது குருவி.

# சந்திராசாமியின் மெகா யாகம்!



**தில்லி நியூஸ்:**

● மத்திய அமைச்சர்கள், முன்னாள் அமைச்சர்கள் மீது விசாரணை நடத்த சி.பி.ஐ.க்கு இப்போது இருக்கும் அதிகாரங்களைக் குறைக்க வேண்டும் என்று பிரதமர் தேவே கௌடா, கேபினட் செக்ரடரி டி.எஸ்.ஆர். சுப்பிரமணியம், தனிச் செயலர் சதீஷ் சந்திரன் ஆகிய மூவரும் முதலில் ஒரு கூட்டத்தில் ஒப்புக் கொண்டார்கள். ஆனால் விஷயம் வெளியே தெரிந்து விவாத வடிவம் எடுத்த உடன், தாங்கள் இது பற்றிப் பேசவே இல்லை என்று நழுவிக் கொண்டு விட்டார்கள். மனித வளத் துறை அமைச்சகக் கூடுதல் செயலர் லட்சுமி ரத்தன் விடவில்லை. ஜோகிந்தர்சிங்குக்குக் கடிதமாக எழுதி அனுப்பி விட்டார். இதைப் பார்த்த மனித வளத்துறை அமைச்சர் எஸ்.ஆர். பாலசுப்பிரமணியம், "எதற்கு இப்படி எல்லாம் கடிதம் எழுதி அனுப்புகிறீர்கள்?" என்று அவரை விசாரித்திருக்கிறார். "ஆமாம், பெரிய மனிதர்கள் எல்லாம் அவர்கள் சௌகரியப்படி, சொல்லவே இல்லை என்று பேச்சை மாற்றிக் கொண்டு விடும்போது, எதையும் எழுதி வைத்து விடுவதுதான் நல்லது!'' என்று சொல்லி விட்டாராம் லட்சுமிரத்தன்!

● சந்திரா சுவாமி சிறையிலிருந்து வந்தாரோ இல்லையோ, பழையபடி யாகம், பூஜை என்று ஆரம்பித்து விட்டார். ஏப்ரல் மாதம் அமெரிக்காவில் ஒரு மெகா யாகம் நடத்தப் போகிறார். 25 பண்டிதர்கள் இந்தியாவிலிருந்து விசேஷமாகத் தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கிறார்கள். அமெரிக்கா சென்று எதற்கு யாகம்? கேசரிக்கு ஒரு பாடம் கற்பிக்கவும், தேவே கௌடாவுக்கு வீழ்ச்சியை ஏற்படுத்தவும் தான்! பின்னே அவர் ஆதரவு யாருக்கு? சந்திரசேகருக்கு. இதற்காக அமெரிக்கா போகும் முன்னால் இந்தியா முழுக்க, பல இடங்களில் யாகம் நடத்தப் போகிறார் சந்திராசுவாமி. அது சரி, பெயிலில் வெளியே வந்திருப்பவர் எப்படி அமெரிக்கா போக முடியும் என்கிறீர்களா? வெளிநாடு போக அனுமதி கேட்டு கோர்ட்டுக்கு அப்ளை பண்ணியிருக்கிறாராம்!

● காங்கிரஸ் கட்சியில் யார் உண்மையான தலைவர் என்று பலருக்கும் குழப்பம். குலாம்நபி ஆசாதா? அகமது பட்டேலா? தாரிக் அன்வரா? இல்லை சீதாராம் கேசரிதானா? ஆளாளுக்குத் தனித் தனியே அறிக்கை விடுவதும், கட்டளை இடுவதும் கட்சியில் பலரைக் குழப்பியிருக்கிறது!

● பெங்குவின் வெளியீடாக 'ஜோதிபாசுவின் வாழ்க்கை வரலாறு' வெளியாகி இருக்கிறது. கிட்டத்தட்ட பிரதமர் பதவி அவருக்குத்தான் கிடைக்கப் போகிறது என்ற நிலைமையை, அவருடைய கட்சிக்காரர்களே எதிர்த்ததை ஒரு நீண்ட பகுதி விவரிக்கிறது. தேவே கௌடாவைப் பொறுப்பு ஏற்கச் சொன்ன பிறகு, 'அவர் ஜோதிபாசுவுக்கு எழுதிய கடிதத்தை அப்படியே வெளியிட்டிருக்கிறார்கள் - 'உங்களை விட எனக்கு என்ன தகுதி இருக்கிறது?' என்று மன்றாடி இருக்கிறார் தேவே கௌடா. கட்சிக்காரர்கள் இருக்கட்டும், ஜோதிபாசுவின் புதல்வர் சந்தன் பாசுவே தகப்பனாரிடம் 'பிரதமர் பதவி வேண்டாம்; சரிப்பட்டு வராது' என்று ஒதுங்கக் கெஞ்சி கூத்தாடினாராம்!

● தில்லி பிதாம்புரா பகுதியில் ஒரு வெறி நாய் 24 குழந்தைகளைக் கடித்து விட்டது. பல தாய்மார்கள் தங்கள் குழந்தைகளைப் பள்ளிக்கூடத்துக்கு அனுப்பப் பயப்பட்டு, வீட்டுக்குள்ளேயே குழந்தைகளைப் பிடித்து வைத்துக்கொண்டு உட்கார்ந்திருந்தார்கள். ஆனால் வெறி நாய் மட்டும் இன்னும் பிடிபட்டதாகத் தெரியவில்லை. தில்லி நகரசபையின் சுகாதார இலாகா இதைக் காதிலேயே போட்டுக் கொள்ளவில்லை!

— **நியூஸ்வாலா**

"இந்தா பிடி" என்று ஒரு காகிதத்தை ஆல்பர்ட்டிடம் நீட்டினாள், ஜனனி.

"என்ன?" என்றபடி, அதை வாசிக்கத் தொடங்கினான் அவன்.

அந்தக் காகிதத்தில் சில கேள்விகளும் பதிலும் இருந்தன.

கேள்வி 1 : உலகத்திலேயே பெரிய பாவம் எது? கேள்வி 2 : உலகத்திலேயே பெரிய இன்பம் எது? கேள்வி 3 : உலகத்தில் பெரிய கொடுமை எது? கேள்வி 4 : உலகத்திலேயே பெரிய அநியாயம் எது? கேள்வி 5 : உலகத்தில் பெரிய மகிழ்ச்சி எது? கேள்வி 6 : உலகத்திலேயே அறிவற்ற செயல் எது? கேள்வி 7 : உலகத்திலேயே சிறந்த உத்தமர் யார்? கேள்வி 8 : உலகத்திலேயே இதுவரை நிகழ்ந்துள்ள பெரிய வன்முறை எது? கேள்வி 9: உலகத்திலேயே சிறந்த அறம் எது? கேள்வி 10: உலகத்திலேயே பெரிய மோசடிப் பேர்வழி யார்? நண்பன் யார்?

"என்ன ஜனனி, இதெல்லாம் என்ன?" என்று விளங்காதவனாகச் சிகரெட்டை எடுத்துப் பற்றவைத்தான், ஆல்பர்ட்.

"இவை பத்துக் கேள்விகள். பத்துக் கட்டளைகள் கேள்விப்பட்டிருக்கிறாய். அல்லவா? அது மாதிரிதான் இது. நான் உனக்குக் கட்டளை இட முடியாது, பைபிளில் சொன்ன மாதிரி."

"இதெல்லாம் எதுக்கு?"



# பக்கல்

## நாளையும் மலரும்

"உன் அக்காவிடம் இந்தக் கேள்விகளை நான் கேட்கப் போகிறேன். அந்த அம்மாள், அதிர்ச்சி அடைவார். நீயும் நானும் சினேகமாக இருப்பது அந்த அம்மாவுக்குத் தெரியும். தெரிந்தும், மௌனமாக இருக்க என்ன காரணம்? ஜானு மாமியிடம், அழுது கொண்டே, எந்த ஆத்மாவுக்கும் இம்சை தர மாட்டேன் என்று சொன்னவராயிற்றே அக்கா. அப்படி இருக்கையில், எந்த முன்னேற்றமும் நடக்காதிருப்பது எதனால்? நீதான் ஏதோ சூது பண்ணுகிறாயோ என்று எனக்குத் தோணுது ஆல்பர்ட். உண்மையைச் சொல்."

அவன் நிதானமாக புகைத்துக் கொண்டு, அந்தக் கேள்வியைப் பார்த்தான். பிறகு கேட்டான்.

"இதுக்கெல்லாம் என்ன பதில்? நீ வைத்திருக்கிறாயா?"

"ஆமாம். எண்ணிக் கொள். பதில் நம்பர் 1 உலகத்திலேயே பெரி[illegible] பாவம், நம்பிக்கை மோசம் பண்ணுவது.



## பிரபஞ்சன்

காதலிப்பது போல நடித்து, பலன் பெற்ற பிறகு நழுவிப் போவது போலப் பாவம் வேறு ஏது? பதில் நம்பர் 2. உலகத்திலேயே பெரிய இன்பம், நேசித்தவரோடேயே, வாழ்க்கையை அமைத்துக் கொள்வது. ஒரு கூரைக்குக் கீழே, அறிமுகம் இல்லாத இருவர் சேர்ந்து தம்மைப் பிணைத்துக் கொள்வது எவ்வளவு பெரிய கொடுமை? காலையில் அறிமுகமான, முகப் பரிச்சயமே உள்ள ஒரு ஆண் மகனுடன், அன்று இரவே முதல் இரவு என்று ஒன்றைத் திணிப்பது எத்தனை பெரிய கொடுமை? பதில் 3. இப்படி ஒரு கொடுமைக்குத் தாங்களே உள்ளாகியும் கூட, தம் குழந்தைகளையும் இந்த மாதிரியான கொடு மைக்கு உள்ளாக்குவதையும் விடப் பெரிய கொடுமை என்ன இருக்கிறது? பதில் 4. உலகத்திலேயே பெரிய அநியாயம், நேசித்ததனால் கிடைக்கும் இன்பத்தைப் புரிந்து கொண்ட பிறகும், கண்முன் நேசித்துக் கொண்டிருக்கிறவர்களைப் பிரிக்க நினைப்பது அநியாயம் இல்லாமல் வேறு என்ன? பதில் 5. உலகிலேயே பெரிய மகிழ்ச்சி, தன்னைப் புரிந்து கொண்டவர்க்கே தான் துணையாகிறோம், என்று ஆணோ பெண்ணோ நினைப்பதுதானே? பதில் 6. காதலை, சிநேகத்தை அந்த இரண்டு பேர் சம்பந்தப்பட்ட காரியம் என்று நினைக்காமல், எந்தச் சம்பந்தமும் இல்லாத சாதி மதங்களைக் குறுக்கே கொண்டு வருவதைக் காட்டிலும் அறிவற்ற செயல் வேறு ஏது? பதில் 7. உல கத்திலேயே பெரிய வன்முறை, நடந்து முடிந்த உலக யுத்தங்கள், ஹிரோஷிமா, நாகசாகி என்றெல்லாம் இல்லை, ஆல்பர்ட். காதலில் தோல்வி கண்டு இறந்து போன, அவர்களை இறக்கச் செய்த சூழ்நிலை தான் பெரிய வன்முறை. உலக யுத்தங்களால் இறந்து போனவர் களைக் காட்டிலும், காதல் தோல்வியில்

# 15

இறந்து போனவர்கள்தானே அதிகம்? பதில் 8. வள்ளுவன் சிந்தித்துச் சொன்னதுதான். இயேசு நாதரும் சொன்னதுதான். இல்லறமே அறம். நல்ல அறம். இறைவன் இணைத்து வைத்ததை மனிதர் பிரிக்காது இருப்பாராக என்பதுதானே? மனதுக்கிசைந்த இருவர், திருமண பந்தத்தில் இணைகிற அறத்தைக் காட்டிலும் சிறந்த வேறு அறம் எது? பதில் 9. தனி மனிதர் இருவர், ஓர் ஒப்பந்தத்துக்கு உள்ளாகிறபோது, அது வியாபாரமோ, கல்யாணமோ, அதில் தலையிடாமல் இருக்கிற சட்டம்தானே உயர்ந்த சட்டமாக இருக்க முடியும்? பதில் 10. மோசடிப் பேர்வழி ஆல்பர்ட். நண்பர் ஜனனி..."

புளி, பூவரசு, வேம்பு என்று நிறைந்து வளர்ந்திருக்கும் சாலையில் அவர்கள் இப்போது நடந்து கொண்டிருந்தார்கள். நின்ற மரங்கள் படுத்துக் கிடப்பன போல, அவைகளின் நிழல்கள் தரையில் சாய்ந்து கிடந்தன. பெயர் அறிய முடியாத பறவைகள். நடந்து போகும் மனிதர்க்கு வாழ்த்து சொல்லிக் கொண்டிருந்தன. பறவை பாஷை அறியாத மனிதர்கள், வெறும் கூச்சல் என்றார்கள்.

"என்ன மௌன சாமி ஆயிட்டே, ஆல்பர்ட்?"

"உன் அளவுக்குத் தைரியமும், சிந்திக்கிற சக்தியும் எனக்கில்லை."

"எல்லாருக்கும் இருக்கிறதுதான் எனக்கும். பல பேர் மூளையைப் பயன்படுத்தறது இல்லை."

"அக்காவை எப்படி 'ஃபேஸ்' பண்றதுன்னு தெரியல்லை."

"இது கப்சா. அக்கா எல்லாம் பெரிய எதிர்ப்புன்னு எனக்குத் தோணலை. அவங்க சம்மதம்னு, ஜானு மாமிகிட்டே சொல்லிட்டாங்களே."

"எனக்குப் பயமா இருக்கு."

"இல்லை. நீ தோற்றுப் போக ஆசைப் படறே. எனக்குத் தோல்வி என்கிற வார்த்தையே பிடிக்காது. ரெண்டு வார்த்தைதான் இருக்கு. ஜெயித்தவர்கள், ஜெயிக்கிற வாய்ப்பைத் தவற விட்டவர்கள். உலகம், வெற்றி வாய்ப்பை இழந்தவர்களைத்தான், மனசுக்குள்ளே வச்சுக்குது. உதாரணத்துக்கு, லைலா மஜ்னு, ரோமியோ ஜூலியட், அம்பிகாபதி அமராவதி, அனார்கலி சலீம், இப்படித் தோற்றுப் போனவங்க வாழ்க்கை, கிளர்ச்சியூட்டற காரணத்தாலே, காதலர்கள், அவங்க மனசோட அடி ஆழத்துல தோல்வியை ஆசைப்படறாங்க. இது, சைக்காலஜி..."

"இதையெல்லாம் எங்கே கத்துக்கிட்டே?"

"பிந்து அக்காகிட்டே இருந்து. அது ஒரு அனுபவக் களஞ்சியம்."

"அந்த ஜானு மாமி பேசிட்டுப் போன

> ஆர்ப்பாட்டக்காரர்களை அடக்க தடியடி, கண்ணீர்ப் புகை, தண்ணீரைப் பீய்ச்சுவது, துப்பாக்கிச் சூடு போன்றவை தவிர தற்போது காவல்துறை பாம்புகளை பயன்படுத்த ஆரம்பித்துள்ளது! எங்கே தெரியுமா? இந்தோனேஷியாவில்! இதற்காக இராஜநாகம் உட்பட நல்ல பாம்புகளுக்குப் பயிற்சி அளிக்கப்பட்டு வருகிறது.
>
> — தகவல்: பூங்கோதை கிருஷ்ணராஜ்

அப்புறம், அக்காவோட நடவடிக்கையே வித்தியாசமா இருக்கு, ஜனனி. அவங்க திட்டினா, ரெண்டு அடி அடிச்சுட்டாக் கூட மனசு ஆறிடும். என் பயம் தெளிஞ்சுடும்."

"என்னதான் சொல்றாங்க, அக்கா."

"ஒன்றுமே சொல்லலை. மேரி, குசை, ஏசு சொரூபங்களுக்கு முன்னால உக்காந்துகிட்டு ஜெபிக்கிறாங்க. சங்கீதம்னு ஒரு பகுதி, விவிலியத்துலே. அதைப் படிச்சபடி இருக்காங்க..."

"தோ பார். ஆம்பிளையா லட்சணமா, அக்காகிட்டே பேசு. ஒரு முடிவுக்கு வா. காதலிக்க அக்கா 'பெர்மிஷன்' வாங்கிட்டா ஆரம்பிச்சே? அவங்களுக்கு அது சந்தோஷம் தரும்னா, என் பின்னாலே சுத்தினே? பேச வேண்டியதுதானே, என்ன தயக்கம்? முடிவு தெரிஞ்சுடும், இல்லையா?"

"நாளை மறுநாள். அம்மாவோட நாள் வருது. அவங்க காலமான நாள். அக்கா, அவங்க ஞாபகத்திலே இருப்பாங்க. அந்த நாள் வருவதுக்கு ஒரு வாரம் முன்னமே, அவங்க துக்கமாயிடுவாங்க. அழுதுகிட்டே இருப்பாங்க. யாரோடயும் பேச மாட்டாங்க. அவங்க மனசு முழுக்க, இறந்து போன அம்மா மேலேயே இருக்கும். எங்களுக்கெல்லாம், அம்மா முகமே மறைஞ்சு போச்சு. எங்களுக்கு அக்காதான். இந்தச் சமயத்துல இதைப் பேசி அவங்களைத் துன்புறுத்தறது, மனுஷத்தனம் இல்லை, ஜனனி. அடுத்த வாரம் கண்டிப்பாப் பேசறேன்."

"சரி ஆல்பர்ட். உன் வார்த்தையில இருக்கிற நியாயத்தைப் புரிஞ்சுக்கறேன். அடுத்த வாரமே பேசு. அக்கா நிச்சயம், மறுப்பு சொல்ல மாட்டாங்க. நல்ல மனிதர்கள், இணைக்கத்தான் பார்ப்பாங்களே தவிர, பிரிச்சுப் பார்க்க மாட்டாங்க. நல்ல மனுஷங்களுக்கு எடுத்துக் காட்டே அதுதான்."

அவர்கள் நடந்த பாதை நீண்டு போய்க் கொண்டே இருந்தது. தலைக்கு வகிடு எடுத்த மாதிரி நேரான தெரு. அதன் இருபுறமும், மயிர்ப் பிரிவுகள் மாதிரி, சாலை ஒழுங்கை மீறாத வீடுகள். காதுகள் மாதிரி வீதியில் நின்ற மரங்கள். காதுகளில் தொங்கும் ஜிமிக்கிகள் மாதிரி, நகரசபையின் (எரியும்) விளக்குகள்!

ஏபேசனின் போக்கு அனுவுக்கு ஆச்சரியமாக இருந்தது. முன்பெல்லாம், எப்போதாவது இரண்டு வார்த்தைகள் பேசுபவன், இப்போது முற்றிலும் மௌனசாமியாராகவே



மாறிப் போயிருந்தான். காலையில் ஜபம் செய்யும் நேரம் என்று அரை மணி வைத்திருந்தவன், ஒரு மணி என்று அதை விஸ்தீரணப்படுத்தி இருந்தான். 'ஏறுமயில் ஏறி விளையாடும் முகம் ஒன்றே' என்று தொடங்கி, முருகாற்றுப் படையை முழுசுமாகச் சொல்லி முடிந்து, கந்தர் சஷ்டிகவசம், என வளர்த்தி, காரைக்கால் அம்மையாரின் பதிகம் என்று தொடர்ந்து, நாலாயிரத்தில் சில பாடல்கள் என்று ஓங்கி உலகளந்து கொண்டிருந்தான். பூஜை முடிந்து, அலுவலக உடை அணிந்து, உணவு மேசைக்கு வருபவன், அதையே உற்று கவனித்துக் கொண்டே இருந்தான். இட்டலிகள் மூன்றே மூன்று. அதுவும் உள்ளங்கையில் அடங்குகிற சின்னஞ்சிறு இட்டலிகள். ஒரு ரூபாய் நாணயத்தைக் காட்டிலும் சற்றே பெரிய அளவில், வெள்ளித் தகடு மாதிரி பிரகாசிக்கிற நிலாப் பிஞ்சுகள். அவைகள் பேசாது என்பது திண்ணம். ஆனால் அவற்றையே அவன் உற்றுப் பார்த்துக் கொண்டு அதிசயம் மாதிரி, தொங்கும் தோட்டத்தை, பைசா கோபுரத்தைப் பார்ப்பது மாதிரி விழி விரியப் பார்த்துக் கொண்டு சாப்பிட்டான். ஜடமான அந்த இட்டலிகளை வார்த்த, ஜீவனான அனுவை அவன், இன்னொரு சாப்பாட்டு மேசை என்றே நினைத்தான் போலும். உணவு உண்டு முடித்து, மணியைப் பார்த்தால் அது, ஒன்பது ஆகச் சில நிமிடங்கள் பாக்கியாக இருக்கும். உடனடியாகக் காலில் செருப்பை நுழைத்துக் கொண்டு, அலுவலகம் புறப்பட்டு விடுவான். அலுவலகத்தில், அட்டெண்டருக்கு அடுத்தபடியாக, சபேசனே வருகை தந்த முதல் ஆளாக இருப்பான். வழக்கம் போல, வேலையில் அதிக சிரத்தை காட்டினான். பக்கத்து மேசை வேலையையும் பிடுங்கித் தான் செய்தான். மாலை, வேலை விட்டதும், கந்தசாமி கோயில் வளாகத்தில் அமர்ந்திருந்து, வானத்தைப் பார்த்துக் கொண்டு இருப்பான். ராமலிங்க சாமி சொன்னது போல, வானத்தின் மேலே அவனுக்கு மட்டும் மயில் ஆடிக் கொண்டிருக்கும் போலும். அந்த ஆட்டத்தை ரசிப்பவன் போல அவன் இருந்து கொண்டிருப்பான். மணி இரவு எட்டை நெருங்குகையில் மின்சார வண்டியைப் பிடித்து வீடு சேர்வான். சோறையும், தட்டையும் வைத்தகண் வாங்காமல் பார்த்துக் கொண்டிருந்தபடியே, உண்டு முடித்து, அறைக்குத் திரும்புவான் பாத்திரங்களை ஒழித்துப் போட்டு விட்டு, அனு அறைக்குத் திரும்பினால், அவன் ஆழ்ந்த உறக்கத்தில் இருப்பான்.

அனு அவனிடம் இன்றாவது பேசிவிட வேண்டும் என்று முடிவெடுத்தாள். உணவைப் பரிமாறி விட்டு, அவன் பக்கத்தில் அமர்ந்தாள். புதிய புடைவையும், புதிய ஜாக்கெட்டும் அணிந்திருந்தாள். வெள்ளிக் கம்பி போல, கறுப்பில் கோடு போட்ட ஜாக்கெட்டின் 'பஃப்'. அவன் கன்னத்தில் உராய்வது மாதிரி, கைகளைக் கட்டிக் கொண்டு அவனையே பார்த்துக் கொண்டிருந்தாள். நல்ல ரோஜா நிறத்தில் மணிப்பூரி சில்க் புடைவை, மிகவும் பாந்தமாக அமைந்திருந்தது. தலையில் வைத்திருந்த மல்லிகை, அப்போதுதான் மலர்ந்து வாசனையை இறைத்துக் கொண்டிருந்தது. கண்ணின் கீழ் ஓரத்தில், அவள் வைத்திருந்த மை, ததும்பிக் கொண்டிருக்கும் தண்ணீரை மறித்து வைத்திருக்கும் நதிக்கரை மாதிரி இருந்தது. இட்டது தெரியாமல், உதட்டுக்குச் சாமர்த்தியமாக லிப்ஸ்டிக் வைத்திருந்தாள். இவற்றில் எதையுமே அவன் பாராமல் இருந்தது, அவளுக்கு மனச்சங்கடத்தை விளைவித்தது.

"உடம்புக்கு ஏதேனும் சரி இல்லையா?" என்றாள் அனு. புருவம் உயர, அவன், "என்ன" என்றான். கேள்வியை மீண்டும் கேட்டாள், அவள்.

"நல்லாத்தான் இருக்கேன்"

"கொஞ்ச நாளா, நீங்க சரியாயில்லை."

"அப்படியா?"

"ஆமாம். என் முகத்தைப் பார்த்துப் பல காலம் ஆகிவிட்டது, உங்களுக்கு. என் முகமே மறந்து போயிருக்கும்."

அவன் அமைதியாக, குழம்பில் இருந்த கண்டைக்காய்களை ஒதுக்கி வைத்து விட்டு, சாப்பிட்டுக் கொண்டிருந்தான். உருளைப் பொரியலில், பட்டாணி சேர்த்திருந்தாள். பட்டாணி, அவனுக்குப் பிடிக்கும்.

"பிரசவத்தை இங்கேயே வைத்துக் கொள்ளலாம் என்று அம்மா சொல்றாங்க. அங்கே, கிராமத்துல நல்ல வசதியான ஆஸ்பத்திரி இல்லையே..."

"இங்கேயே வைத்துக் கொள்ளலாம்."

"அனேகமா பெண் குழந்தையாத்தான் இருக்கும்னு டாக்டர் சொல்றாங்க..."

"ம்."

"பெண் குழந்தை, உங்களுக்கு ஆட்சேபணை இல்லையே."

"குழந்தையில், ஆண் என்ன, பெண் என்ன? குழந்தை குழந்தைதானே?"

"சில பேருக்குப் பிடிக்கிறதில்லை, அதான்"

"குழந்தைகளைப் பிடிக்காதவர்கள் மனிதர்











நிருபர், நடிகையிடம் கேட்டார்:

''உங்க அம்மா இறந்ததும் நீங்கள் ஏன் 'அம்மா' என்று கதறாமல் 'தாயே' என்று சொல்லி அழுதீர்கள்?''

"அம்மா... அம்மா..." என்று அழுதால் உதட்டுச் சாயம் கலைந்து விடுமே!"

'பட்டிமன்ற நகைச்சுவை' என்ற நூலிலிருந்து

— எஸ்.எஸ். பூங்கதிர்

---

களாக இருக்க முடியாது."

"குழந்தையைப் பிடிக்கிறது. என்னைத்தான் உங்களுக்குப் பிடிக்கவில்லை..."

அவன், அவள் சட்டைக் காலரில், இல்லாத எறும்பைத் தட்டி விலக்கினாள். அந்த முயற்சியில், அவன் மேல் அவள் மிகவும் சரிந்து ஒட்டி இருந்தாள், சாக்லட்டைச் சுற்றிய ஜிகினா மேல் உறை மாதிரி!

சபேசன், மோரில் இருந்தான். ஏனோ, சாதத்தை வைத்து விட்டு எழுந்து, வாஷ்பேசினில் கை கழுவி, சோப் போட்டு, மீண்டும் கை கழுவி வாய் கொப்பளித்தான். அனு, அவன் முகத்தைப் பக்கவாட்டில் பார்த்தாள். பரவாயில்லை. மோசமாக இல்லை, அவள் கணவன்.

''இப்போதெல்லாம், சாப்பிடவே முடியவில்லை. ஒரே குமட்டல். கடையில், ஆல்பகடா பழம் கிடைக்கும், வைத்தியர் கடையில். நாளைக்கு மறக்காமல் வாங்கி வாருங்கள், என்ன?''

சபேசன் அவள் அருகில், மற்றொரு நாற்காலியில் அமர்ந்தான்.

"ஆல்பகடா பழம் எப்படி இருக்கும்?" என்றான் அவன், அசட்டுத்தனமாக. நெற்றியில் தொடங்கி, கன்னம், மூக்கு, வாய், முகவாய், கழுத்து வழியாக வழிந்தது. அது! ஆதாமில் தொடங்கி, சபேசன் வரை. உலகத்தை வென்ற அலெக்சாண்டர் வெல்லாதது அது! மகா ஞானிகள், 'மாயை' என்று இகழ்ந்தது அது.

சபேசன் நிறைய பேச வேண்டும் என்று நிறைய சங்கதிகளை வைத்திருந்தான். மூட்டை நிறைய கேள்விகள். நிறைய புத்திமதிகள்! அண்டா நிறைந்த கல்யாண காப்பி மாதிரி. அவளுக்குப் புகட்ட நிறைய நல்ல உபதேசங்கள்! பணம் என்பது, நமக்கு எஜமான் இல்லை. அது நம் வீட்டுத் தூணில் கட்டின நாய்! நாய்கள் மட்டுமே வால் ஆட்டலாம். மனிதர்கள் அல்லர்! கௌரவம் என்பது, இருப்பதைக் கொண்டு வாழ்வது. நம் வீட்டுக் குழாயில் வருகிற தண்ணீர். பிடித்து வைத்துக் கொண்டு செலவழித்துச் சுகம் காண்பதே சிறப்பு. கதவைத் திறந்தால் கடல் வர வேண்டும் என்று நினைப்பது பேராசை. உப்புத் தண்ணீர் என்னத்துக்கு ஆகும்? நிறைய நிறைய பேச வேண்டும். நினைத்துக் கொண்டிருந்தான். ஆனால், வார்த்தை மறந்தும் வெளியே வர மறுத்தன.



அனு, நாற்காலியை இழுத்து அவன் அருகில் போட்டுக் கொண்டு அமர்ந்தாள். அனுவின் முழங்கால்கள், அவனது முட்டியில் இடித்தன. வலிக்கவில்லை. மிகக் கிட்டத்தில் அவன் முகத்தைப் பார்த்த அனு சொன்னாள்.

"முகம், வெள்ளரிப் பழம் அல்ல! வெள்ளை விபூதி மாதிரி, இதென்ன தாடி? இன்றைக்கு ஏன் சவரம் பண்ணிக்கலை? ஊம்?" என்றாள் அனு. அவன் தாடையைத் தடவினாள்.

அனுவின் கையில் பிரம்பு இல்லை. சபேசன், 'பெஞ்ச்' மேல் நிற்கிற பையனின் நிலைக்கு வந்திருந்தான். கைகளை மட்டும் கட்டி இருக்கவில்லை, அவன்.

"என்ன அனு. லிப்ஸ்டிக் போட்டிருக்காப் பலே?" என்றான், தொண்டை கமற, சபேசன். அவன் குரல், அவனுக்கே கேட்கவில்லை, என்பதுதான் சுவாரஸ்யம்.

"சீ" என்றாள் அனு.

இந்தச் 'சீ' வேறு வகையான 'சீ'! இது வெறுப்பில் முகிழ்ந்தது அல்ல! இன்னும் வேண்டும், வேண்டும் என்கிற விருப்பில் கிளைத்தது. வாயருகில் கொண்டு வந்த அவன் விரலை, அவள் கடித்தாள். பாவனைதான்.

"ஆ" என்றான் அவன். இதுவும் பாவனை தான். பாவனைதான் காதல். பாவனைகள்தாம் உறவு... உலகம், சுற்றுகிறதே, பாவனைகள் என்கிற கயிறு சுற்றி விட்டதால்தான்...

**வி**ழிப்பு வந்தது, அனுவுக்கு. பக்கத்தில் கவிழ்ந்து படுத்துக் கிடந்தான், சபேசன். அனுவுக்கு வலி ஏற்பட்டிருந்தது. அடி வயிற்றில் தொடங்கி, நெஞ்சுக்கு நேராகச் சுருட்டிப் பிழிந்தது வலி. நெற்றி வியர்த்தது. கொஞ்ச நேரத்தில் உடம்பெங்கும் குளித்தது போல், வியர்வையில் தெப்பமாய் நனைந்திருந்தாள் அவள். தொப்புளில் தொடங்கி, ஏதோ ஒன்று நெஞ்சில் இடிப்பது போல் சகிக்க முடியாமல் போயிற்று அந்த வலி.

சபேசனை எழுப்பினாள். அனு முனகியதைப் பார்த்து, பயந்து போனான் அவன். எழுந்து, ஆடையை ஒழுங்கு பண்ணிக் கொண்டு வள்ளி வீட்டு அழைப்பு மணியை அடித்தான். சற்று நேரத்துக்குள், வள்ளி, பிந்து, ஜானு மாமி என்று கூட்டம் சேர்ந்து, அனுவை மருத்துவமனைக்குக் கொண்டு சென்றார்கள். மயக்கமுற்றுக் கிடந்த அனுவை இரண்டு பேராகச் சுமந்து போய்த்தான் சேர்த்தார்கள்.

(தொடரும்)



# கலா உலா :

# சென்ற நூற்றாண்டுக்கு ஒரு பயணம்!

நகரத்தின் புதுமையிலிருந்து சற்றேனும் விடுபட்டு, பழமையை ரசிக்கிற மனசு இருக்கிறதா உங்களுக்கு? வாருங்கள்.

கும்பகோணத்துக்கு ரயிலேறி, அதிகாலையில் அங்கே இறங்கினால் நேரே சுவாமிமலை.

சாணம் தெளித்து இட்ட கோலமும், பளிச்சென்று திண்ணையுமாக, அழகான பழமைச் செறிவுமிக்க வீடு. வரவேற்கிற மாதிரி முருகனின் அழகான உலோகச் சிற்பம்!

நுழையும்போது தலையைக் குனிந்து கொண்டுதான் உள்ளே போக வேண்டும். இல்லை என்றால் உத்தரம் சிரசைக் குசலம் விசாரிக்கும்!

ஒரு சுவர் நிறைய நடராஜரின் பிரம்மாண்ட முகம். விரிசடைக் கடவுளின் முன்னே அந்தத் திறந்தவெளி முற்றத்தில் யோக வகுப்புகள். இரு கைகளையும் உயரத் தூக்கினால் ஓட்டுக் கூரையைத் தொட்டுவிடலாம். மொழு மொழுவென்ற அழகான குட்டிக் குட்டித் தூண்கள்...

பண்ணையார் வீடு மாதிரி அமைப்பு.

சரியாக நூறு வயது ஆகிவிட்டது இந்த வீட்டுக்கு. சுற்றிலும் மாந்தோப்பும் தென்னந்தோப்புமாக படு ரம்மியமான சூழ்நிலை. ஒரு சின்ன நந்தவனம். சுவாமிமலைக்கு காஞ்சிப் பெரியவர் வந்திருந்த போது, இங்கே தங்கியிருக்கிறார். நந்தவனத்தில் தியானம் செய்திருக்கிறார். திம்மக்குடி ஜமீந்தாருடைய வீடாம்.



• வெட்டவெளியில் சாப்பாடு

டீயோ, காப்பியோ குடித்து விட்டு, யோகா செய்ய விருப்பம் இல்லை என்றால், ஆயுர்வேத எண்ணெய்க் குளியலுக்குத் தயாராகலாம். ஆனந்தமாக ஓர் ஓய்வு; தோலுக்கு மினுமினுப்பு!

குளித்து முடித்தவுடன் கடச்கடக் காலை உணவு. அதுவும் எங்கே? முற்றத்தில்!

தமிழ் வருடங்கள் அறுபதைக் குறிக்கும் அறுபது படிகள் கொண்ட சுவாமிமலைக்

கோயிலுக்குப் போனால் அழகான தரிசனம். இங்கே வாகனம் மயில் அல்ல. யானை. இந்திரன் முருகனை இங்கே வந்து வழிபட்டு விட்டு, காணிக்கையாகத் தம் ஐராவதம் யானையை விட்டுச் சென்றிருக்கிறானாம். இங்கே கண்பார்வை கொடுக்கும் விநாயகரும் உண்டு. நேத்திர விநாயகர்.

தரிசனம் முடிந்ததும், சிற்பக்கூடத்துக்கு ஒரு விசிட். பித்தளையும் செம்பும் கலந்த பிரம்மாண்ட அர்த்தநாரீசுவரர் சிலை தயாராகிக் கொண்டிருக்கிறது. ஆறு அடி உயரம். லண்டன் மியூசியத்துக்குப் போகப் போகிற சிலை. இன்னொன்று மிகப் பெரிய நடராஜர் சிலை; மண்ணிலிருந்து மெல்லத் தெரியும் பாதங்கள்.

சிலைகள் வடிக்க ஒரு வருடமும் ஆகும்; ஒன்றரை வருடமும் ஆகும். சிற்பக் கூடத்தில் சில வெள்ளைக்காரர்களும் பயிலுகிறார்கள்! சிற்பக் கூடத்தை ஒட்டி விற்பனைக் கூடமும் இருக்கிறது.

மாலையில், தஞ்சையிலிருந்து வரும் கரகாட்டக் குழு, பளபளத்த குடத்தைத் தலையில் ஏந்தி, நாதசுரம், தவில் ஒலிக்க ஆடுகிற ஆட்டம் பரவசப்படுத்துகிறது.



• முற்றம்



• படுக்கையறை



• கலை நிகழ்ச்சிகள்

மாலை வேளைக் கச்சேரிகளும் உண்டு. சாஸ்த்ரிய சம்பிரதாய இசை.

இனி, வாசலிலிருந்து திண்ணை வீட்டுக்கு (இருபது மீட்டர் தூரம்தான் எனினும்!) மாட்டு வண்டியில் ஏறி வரவும் ஏற்பாடுகள் செய்யப் படப் போகின்றன. நாதசுவரமும் ஒலிக்குமாம்... வரவேற்புக்கு.

தோப்பு வளாகத்திலேயே ஒரு சின்னக் கோயிலும், குளமும் கூட வந்து விடும். புதிய வீடுகளும், அதில் அறைகளும், திண்ணையும், முற்றமும் எல்லாமே சுற்றுலாப் பயணிகளைக் கொஞ்சம் திரும்பிப் பார்க்கச் செய்யும் – சுமார் நூறு வருடத்திற்கு முந்தைய சூழல் திடீரென்று கண்முன் தோன்றும்!

ஸ்டெர்லிங் 'ஹெரிடேஜ்' பயணத்தில், சற்றே பழமையைத் தொட்டு ருசி பார்க்கலாம்.

**- சாருகேசி**

புகைப்படங்கள்/நன்றி :
**ஸ்டெர்லிங் ஹாலிடே ரிசார்ட்ஸ்.**



சிரிப்புக் கோட்டை
தலைவரே! நான் செத்ததால தான் இடைத்தேர்தலே நடக்குது! ஆனா, என் மகனுக்கு சீட் குடுக்காம எதிர் கோஷ்டி ஆளுக்கு குடுத்திட்டீங்களே உங்களை சும்மா விடுவேன்னு நினைக்காதீங்க!
அம்மா! நான் உங்க வீட்டுப்பிள்ளை மாதிரி
அப்படியா! சந்தோஷம்! பரண் மேல ஒரு பெட்டி இருக்குது! இறக்கிக் குடுத்துட்டுப் போ!
சேஷன் தான் இல்லையே! தைரியமா செலவு செய்ய வேண்டியது தானே?
பொதுத் தேர்தல்லயே டெபாஸிட் காலி! இப்ப கட்சில குடுக்கறதை செலவழிக்காம மிச்சம் பிடிச்சாலே, சம்பாரிச்ச மாதிரி தானே!


நம்ம பழைய எம்.எல்.ஏ. செத்துப்போய் இப்ப இடைத் தேர்தலா? நான் வழக்கம் போல அவர் தொகுதி பக்கம் வராம இருக்க றதா நெனைச் சிக்கிட்டிருக் கேன்! அட கடவுளே!
நான் ஜெயித்து சட்ட சபைக்குப் போனால் கடந்த ஆட்சியினர். அநியாயமாய் சேர்த்த சொத்துக் களை பறிமுதல் செய்து என் மகளு க்கே... ஸாரி மக்களுக்கே வழங்கி அரசை வற்புறுத் துவேன்
பொதுத் தேர்த லின் போது, இந்த இடத்தில் ஒரு பார்க் அமைப்ப தாய் வாக்குறுதி கொடுத்ததே உங்கள் கட்சி!
உண்மைதான். ஆனால், போலீஸ் காரர்கள் சதி செய்து, இங்கே "நோ பார்க் கிங்" என்று அறிவித்து விட்டதால், அதை செயல் படுத்த முடிய வில்லை
NO PARKING
ஏன்? பிரச்சாரத்துக்கு வராம ஷூட்டிங் கிற்குப் போயிட்டாங் களா?
அந்த நடிகையை எலெக்ஷன்ல நிற்க வெச்சது பெரிய தப்பா போச்சு!
ஊஹூம்! எனக்குப் பதினாறு வயசுன்னு பேட்டி கொடுத்திருக் காங்க
கருத்து: ஜூலி
படம் : செல்லம்

# ஜோக்கீந்தர்

போஃபர்ஸ் ஊழல் தொடர்பான ஸ்விஸ் வங்கி ஆவணங்களைப் பெற்றுவர ஸ்விட்ஸர்லாந்து சென்றார் ஜோகீந்தர்சிங். சி.பி.ஐ. தலைவரான இவர், அங்கே போனதும் தமது காமிராவைப் பத்திரிகையாளர் பக்கம் நீட்டி "என்னை போட்டோ பிடிங்க, பிளீஸ்" என்று கேட்டுக் கொண்டார்.

நிருபர்கள், 'ஸ்வென்ஸ்கா போன்ற நிறுவனங்கள் மீது எப்போது நடவடிக்கை எடுக்கப்படும்?" என்று கேட்டதற்கு, "ஸ்வென்ஸ்கா, இன்ஸ்கா, பென்ஸ்கா எல்லாம் உரிய நேரத்தில் கவனிக்கப்படும்" என்று பதில் கூறினார்.

'இவர் ஜோகீந்தர்சிங் இல்லை; ஜோக்கீந்தர் சிங்' என்று நிருபர்கள் முடிவுக்கு வந்தனர்!

பத்திரிகைகளில் இடம் இல்லாத காரணத்தால், அவர்கள் ஜோகீந்தர்சிங்கின் எல்லா ஜோக்குகளையும் பிரசுரிப்பதில்லை. அவர்கள் மற்ற செய்திகளுக்கும் இடம் தர வேண்டுமல்லவா? ஆனால் எனக்கோ, ஜோகீந்தர் சிங்கின் ஜோக்குகளை தமிழக மக்கள் அனுபவிக்காமல் இருப்பது பேரிழப்பு என்று தோன்றுகிறது. அதனால் அவருடைய ஜோக்குகள் பலவற்றை இங்கே தொகுத்துத் தருகிறேன்:

"எதற்காக உங்களை ஃபோட்டோ பிடிக்கச் சொல்கிறீர்கள்?" என்று ஒரு நிருபர் கேட்டார்.

"நான் காணாமல் போய்விடவில்லை; இங்கேதான் இருக்கிறேன்" என்று நிரூபிப்பதற்காகத்தான்!"

"அதை நிரூபித்து என்ன ஆக வேண்டும்?"

"ஹூம்! இந்திய அரசியல்வாதிகளின் சாமர்த்தியம் உங்களுக்குத் தெரியாது! நான் ஸ்விஸ் நாட்டுக்குப் போகவேயில்லை என்று சத்தியம் பண்ணுவார்கள்! நான் இங்கே வரவே இல்லை என்றால் போஃபர்ஸ் ஆவணங்களை நான் இங்கிருந்து பெற்றுக்கொள்ளவே இல்லை என்றாகிவிடும்! அதனால் சாட்சியமாகப் படமெடுத்து வைத்துக் கொண்டால் நல்லதுதானே!" என்று கூறியவாறு, போஃபர்ஸ் ஆவணங்கள் அடங்கிய பெட்டியை, மார்க்கண்டேயன் சிவலிங்கத்தைத் தழுவியது போல், கெட்டியாகக் கட்டிப் பிடித்துக் கொண்டு போஸ் கொடுத்தார் ஜோக்கீந்தர்.

"இந்த ஆவணங்கள் அடங்கிய பெட்டியை யார் ஸீல் உடைத்துப் பிரிப்பார்கள்?"

"எனக்குத் தெரியாது. நீதிபதியே உடைக்கலாம்; அல்லது கட்சிகளை உடைத்து அனுபவப்பட்ட அரசியல்வாதி ஒருவரை அழைத்து உடைக்கச் சொல்லலாம்; அல்லது என் பொறுப்பில் விட்டால், ஸி.பி.ஐ. அலுவலகத்தில் உள்ள தலைமை பியூன் ஸீல் உடைப்பார்."



"பீகார் முதல்வர் லல்லு பிரசாத் யாதவ் மீது எழுந்த புகாரில், ஸி.பி.ஐ. அதிகாரி, கோர்ட்டுக்கு சமர்ப்பிக்க எழுதி வைத்திருந்த அறிக்கையின் பல பகுதிகளை, ஸி.பி.ஐ.தலைவர் என்கிற முறையில் நீங்கள் அடித்து நீக்கி விட்டீர்களாமே? ஏன் அதில் கை வைத்தீர்கள்?"

"நான் கை வைக்கவேயில்லை! பேனாதான் வைத்தேன்!"

"அதான் கேட்கிறோம்; ஏன் பல பகுதிகளை நீக்கினீர்கள்?"

"ஏனென்றால் 'என்னை நீக்கிவிடு, நீக்கிவிடு' என்று அறிக்கையின் அந்தப் பகுதிகள் என்னைக் கெஞ்சிக் கேட்டுக் கொண்டன!"

சிரித்துச் சிரித்து விலா வலி கண்ட நிருபர்கள், ஆளை விட்டால் போதும் என்று ஓடிப் போனார்கள்!

ஜோகீந்தர் சிங் இந்தியா திரும்பிய பிறகு இரண்டு மூன்று தடவை பிரதமரை சந்தித்து விட்டார். ஒவ்வொரு முறையும் பி.எம்.ஓ. ஆபீஸில் ஒரே கலகலாதான்!

பிரதமர்: என்ன, நீதிமன்றம்தான் பொறுப்பை உன்னிடமே ஒப்படைத்து விட்டதே; பெட்டியை உடைத்து ஆவணங்களைப் பார்த்தாயோ, இல்லையோ?

ஜோக்: அதையேன் கேட்கறீங்க. ஸ்விஸ் வங்கிக்காரன் ரொம்ப டைட்டா முடிச்சுப் போட்டு வைச்சிருக்கான். அதை அவிழ்ப்பதற்குள்...

பிரதமர்: அவிழ்ப்பானேன்? வெட்டித் தொலைக்கிறதுதானே?

ஜோக்: மர்மமுடிச்சுக்களை அவிழ்க்கத்தான் வேண்டும். எந்த மர்மக் கதையிலாவது மர்மத்தை வெட்டினதா படிச்சிருக்கீங்களா?

பிரதமர்: சரி, சரி, அவிழ்த்தியா, இல்லையா?

ஜோக்: உம்... இதுக்காவே ரெண்டுநாள் நகம் கடிக்காம, தவமிருந்து வளர்த்துக்கிட்டேன்.

**செம்பியன்**



பிரதமர்: கிடக்கு, விஷயத்துக்கு வா!

ஜோக்: என்ன விஷயம்? சொல்லுங்க!

பிரதமர்: அடக்கடவுளே! பெட்டிக்குள் என்ன கண்டாய்?

ஜோக்: நிச்சயமா கடவுளைக் காணலை!

பிரதமர்: இந்தாப்பா ஜோக்கிந்தர், உன் ஜோக்குக்கும் என் பொறுமைக்கும் ஒரு எல்லை உண்டு!

ஜோக்: உங்க பொறுமை பற்றிப் பேசுங்க, ஒப்புக்கறேன்; ஆனா என்னோட ஜோக்குகளுக்கு எல்லை உண்டுன்னு சொல்லாதீங்க! அது வற்றாத ஊற்று!

பிரதமர்: (தரையைக் காலால் உதைத்து): உள்ளே Q,R பற்றியெல்லாம் ஏதாவது சாட்சியம் இருந்துச்சா?

ஜோக்: கியூ பற்றி இருந்துச்சு; ஆனா அது கோதுமை ரேஷன் கியூவா, இல்லே மண்ணெண்ணெய் கியூவான்னு ஆராய்ச்சி பண்ணிக்கிட்டிருக்கேன்!

பிரதமர்: அந்த இதாலியன் பற்றி ஒண்ணுமில்லையா? என்ன முழிக்கிறே? அதாம்பா குவாட்ரோச்சி! Q ஃபார் குவாட்ரோச்சி!

ஜோக்: ஓ! Qக்கு அப்படி ஒரு அர்த்தம் உண்டா?

பிரதமர்: ராம ராமா! சரி R பற்றி ஏதாச்சும் தகவல் கிடைச்சுதா, ஆவணங்கள்லே?

ஜோக்: என்னைக் குழப்பப் பார்க்கறீங்க! Rன்னா ராமா இல்லே! ராவ்! அவர்கிட்ட நான் நடு ராத்திரியிலேதான் பேசறது வழக்கம்.

பிரதமர்: வேண்டாம், வேண்டாம்! அவர் கிட்ட போய் யோசனை கேட்டுக் காரியத்தைக் கெடுக்காதே! அப்புறம் பத்திரிகைக் காரங்க பத்தி பத்தியா எழுதுவானுங்க. உன் நோக்கம் கற்பிப்பாங்க!'

ஜோக்: ஆமா, இப்ப மட்டும் எழுதலையாக்கும்! என்னை ஜோக்கிந்தர்னு கிண்டலடிக்கிறாங்க!

பிரதமர்: அப்படிக் கிண்டல் பண்ண இடமில்லாதபடி நீ நடந்துக்கறது...

ஜோக்: அதெப்படி சாத்தியம்? வழிகாட்ட நீங்க இருக்கிறப்ப நான் வேற விதமா எப்படி நடந்துக்குவேன்? பிரதமர் ஜோக்கர்னா அதிகாரிகளும் அப்படித்தானே இருக்கணும்?

பிரதமர்: அப்பாடா! இப்பத்தான் நீ ஜோக் அடிக்காம சீரியஸ்ஸா பேசியிருக்கே!



# ஆணிகள்

ஆணி அடிக்கிறார்
என் வீட்டின் மேல்வீட்டில் குடியிருக்கும்
அண்ணாசாமி.
சாமிபடம் மாட்ட...
சாவிக் கொத்துத் தொங்கவிட....
அதற்கு இதற்கெனக் காரணங்கள்
ஆயிரம் தீர்ந்த பிறகும்
ஆணி அடிக்கிறார்.

சிலுவையில் ஏசுவாய்ச்
சித்திரவதைப்படும் எங்கள் பகல்கள்.
உச்சிமுதல்
உள்ளங்கால்வரை காயங்களால்
துடிக்கும் எங்கள் இரவுகள்.

காதுகளின் வேர்களிலிருந்து
கழற்றி எடுக்க முடியாமல்
வேதனை ஆணிகளோடு
வெளியேறுகின்றனர் விருந்தாளிகள்

கூரைமார்பு
அதிர்கிறது
சுவர்களை விரல்கள் வந்து வந்து
விசாரிக்கின்றன.

கூர்மைகள்
வெறிநாய்கள் போல் பாய்ந்து
குதறுகின்றன அமைதியை

பிள்ளைகள்
படிப்புக்குள் ஆழமாய் இறங்குகின்றன
ஆணிகள்...

வயதானவர்கள்
சுவாசப் பைக்குள் பாய்ந்து
மரணத் தவணைகளாய்
ஆணிகள்...

கருச்சிதைத்து
என் கவிதைக்குள் அலறலாய்
ஆணிகள்...

அண்ணாசாமி கைவசம்
ஆணிகள் இல்லாத்
தருணங்கள் மீதும்
அடிக்கிறார்
அடிக்கிறார்
ஆணிகள்

- தமிழன்பன்

பாரதன் அச்சகத்தில் அச்சிட்டவர் : வி. முரளி, பாரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர் : கி. ராஜேந்திரன்.
ஆசிரியர் : சீதா ரவி.
முகவரி : 47, ஜவாஹர்லால் நேரு சாலை, ஈக்காடுதாங்கல், சென்னை - 600 097. தொலைபேசி : ஆசிரியர் குழு அலுவலகம் : 2345624; சர்க்குலேஷன் மானேஜர் : 2345623; சந்தா, விளம்பரம் : 2345622; மானேஜிங் டைரக்டர் : 2345621.
ஆண்டுச் சந்தா - உள்நாடு : ரூ. 156/-; வெளிநாடு - விமானத் தபால் ரூ. 1050/-.
ஆறு மாதச் சந்தா - உள்நாடு : ரூ. 78/-; வெளிநாடு - விமானத் தபால் : ரூ. 525/-.

Registered with the Registrar of Newspaper of India under No. 1041/57 * Registered No. TN / MS (S) M4392 * Licensed to post without prepayment under PMG's Licence No. TN / MS/ (S) 161 * Registered as a Newspaper in Srilanka